உ

ஆதிசங்கரருக்கு சமர்ப்பணம்

குரு வித்தியாரண்யரின் பஞ்சதச பிரகரணத்திற்கு




# கோவிலூர் மடம் இராமசாமி சுவாமிகள் அருளிய கெம்பீர வினா விடைகள்.

இது நெரூர் சதாசிவப்பிர்ம்ம அதிட்டானத்தின்
கைலாச ஆச்ரம தலைவர் தவத்திரு
**ஸ்ரீ பிர்ம்மானந்த சுவாமிகளால்**
வெளியிடப்பட்டது.

1996.

7-1



ஸ்ரீமத் ஜகத்குரு ஆதிசங்கர பகவத்பாத ஆச்சார்ய சுவாமிகளும் பிரதான மாணாக்கர்களும்.

# ஓம் சற்குருவே நம

## ஸ்ரீ வித்தியாரண்ய சுவாமிகள் அருளிச்செய்த கம்பீரபஞ்சதசி வினா விடைகள்

இது கோயிலூர் பிர்ம்மஸ்ரீ அ.இராமசாமி சுவாமிகளால் நிரூபிக்கப்பட்டது.

## பொருளடக்கம்



## குருஸ்துதி

அநேகவித லக்ஷண விஸ்தாரத்துடனே கூடியிருக்கின்ற மகாமாயா மோகத்தை எந்நேரமும் எடுத்து விழுங்குகிறதே வேலையா யிருக்கின்ற ஸ்ரீசங்கராசாரிய குரு மூர்த்திகளினது பாதாரவிந்தப் பொருட்டு நமஸ்காரம்.

## 1. *சித்திர தீபம்.*

வித்தியாரண்ய சுவாமிகள் உலக அநுக்கிரக நிமித்தமாகச் சகல வேதாந்தத்தினுடைய பொருள்களெல்லாம் மனதிலே சேகரித்துக்கொண்டு, சகல வேதாந்தமெல்லாம் அறியமாட்டாத பேருக்கும், படித்தாலும் அதன் அர்த்தம் தெளிந்தறியமாட்டாத பேருக்கும், எளிதாக வேதாந்தத்தினுடைய உண்மைப் பொருளைக் கண்டனுபவித்து மோட்சம் (விடுதலை)

அடையத்தக்கதாகச் சகல வேதாந்த சம்மதப்படிக்குத் தம்முடைய மனதிலே இருக்கின்ற பிரம்மாநுபவத்தைப் பஞ்சதசப் பிரகரணத்தினாலே வெளிப்பண்ண வேண்டுமென்று, பதினைந்து பிரகரணத்திற்குள் முந்தின பிரகரணத்தினாலே, அத்தியாரோபம் அபவாதம் என்கின்ற இரண்டு நியாயத்தையும் தழுவிக்கொண்டு, பரமாத்மா வினிடத்திலே ஆரோபிக்கப் பட்டிருக்கிற சகத்தினுடைய லக்ஷணம் சித்திரமே அல்லாமல் உண்மையல்ல என்கிறதை சித்திர பட திருஷ்டாந்த முன்னிலையாக வெளிபண்ணினபடி, புடவையின் இடத்திலே சித்திரம் ஆரோபிக்கப்பட்டாற்போல பரமாத்மாவாக இருக்கிற தன்னுடைய சொரூபத்திலே சீவன் சகத்து, ஈஸ்வரன் எனப்பட்ட சித்திரம் ஆரோபிக்கப்பட்டதென்றறிக

சித்திரபடம்: சித்திரத்தின் ஆதாரமானவஸ்த்திரம். அத்தியாரோபம்: கயிற்றைத்தவறாக பாம்பு என்று எண்ணுவது போல ஆதாரமான தன்னை விட்டு, கற்பிதமான சரீரமாக எண்ணுதல். அபவாதம்: கயிற்றைக் கயிறாக கருதுதல்போல, ஆத்மாவாகிய தன்னையே தானாகக்கருதுதல்.

1. சித்திரத்தின் ஆதாரமான துணி எப்படி a. துவைக்கப்பட்டது b.கஞ்சியினால் கெட்டியாக்கப்பட்டது c. குறியிடப்பட்டது d. வர்ணமிடப் பட்டது என்று நான்குவித நிலைகள் தோற்றுகின்றார்போல், பரமாத்மாவிற்கு நான்கு அவஸ்தை (நிலை) ஏது? அதற்கு உபாதி(இடம்) ஏது?

பரமாத்மா ஓர் உபாதியுமற்றுத் தாமாயிருக்கும் போது சித் என்றும், மாயையோடு கூடினால் அந்தரியாமி என்றும், எல்லா சூட்சும பூத சூட்சும சரீரத்துடனே கூடினால் இரணியகர்பனென்றும், எல்லா தூல பூத தூல சரீரத்துடனே கூடினால் விராட் என்றும் சொல்லப்படும்.

2. பரமாத்மாவே சித்திர துணி போன்று இருப்பின், அதனைப் பற்றியிருக்கின்ற சித்திரபேதங்கள் ஏது?

பிரமன் முதல் சிறிய பூச்சி ஈறாக மேன்மை, மத்திமம், கீழ்மையாய்க் காணப்படுகின்ற பிராணிகளும், மலை, ஆறு கோபுரம் முதலான சடங்களும்(உயிரற்றவை), சுபாவ சைதன்னியத்தினிடத்திலே மாயையாகிற வர்ணத்தினாலே கற்பிக்கப்பட்ட சித்திரம் என்று அறியவேண்டும்.

3. இதுவே சித்திரமானால் சேதனம்(உணர்வு) அசேதனம்(உணர்வற்றது), என்ற இரு வகுப்பாய் இருப்பான் ஏன்?

சித்திரத்தில் எழதியுள்ள மனிதர்களுக்கு தனித்தனியே சித்திரத் திற்கு ஆதாரமாய் அடியிலுள்ள துணி போலவே தோன்றுகிற போலி வஸ்திரங்கள் எழுதியிருக்கிறாற் போல, சைதன்னியத்தின் மேல் பிராணிகள் மாத்திரத்திற்கு சிதாபாசர்கள்(சைதன்ய தோற்றங்கள்)

கற்பிக்கப் பட்டார்கள். இவர்கள் உண்மையான சைதன்யம் அல்ல.

4. மலை, ஆறு, கோபுரம் முதலானவைகட்குச் சிதாபாசகர்கள் ஏன் இல்லை?

சித்திரத்தில் உள்ள மலை முதலியவைகட்கு துணி போலுள்ள தோற்றம் தேவையற்றது போல, சிருஷ்டியிலுள்ள மண் முதலானவைகளுக்குச் சிதாபாசர்கள் தேவையில்லை.

5. மனிதர்கள் மாத்திரத்திற்குச் சிதாபாசர்கள் கற்பனைக்குப் பிரயோசனம் ஏது?

நால்வகைச் சரீரங்களை அடைந்து பிறப்பு இறப்பு முதலிய சம்சாரத்தை அடைவதே பிரயோசனம்.

6. இப்படிச்சிதாபாசனுக்கே சம்சாரமானாற் சகல வாதிகளும் உலகத்தவரும். ஆத்மாவிற்கே சம்சாரம் என்று சொல்லக் காரியமேது?

போலி(ஆபாச)ப் புடவையின் வர்ணத்தை, ஆதார (அதிஷ்டான)ப் புடவையின் வர்ணமாகச் சொல்லுகிறார் போல, உண்மை அறியாத சீவன் சம்சாரத்தை ஆன்மாவின் மேல் சுமத்துவதற்கு அறியாமை(அஞ்ஞானமே) காரணம்.

7. அந்த அஞ்ஞானத்திற்கு லக்ஷணம் ஏது? அதைப் போக்குவதற்கு வழி ஏது?

ஆத்மாவாகிய தன்னிடத்திலே கற்பிக்கப்பட்ட சிதாபாசனையும் (சீவனையும்) அவன் சம்சாரத்தையும் தன்னுடைய சுபாவமாக எண்ணுகிற மயக்கமே அஞ்ஞானம். தனக்கு ஒரு காலும் சம்சாரம் இல்லை, சம்சாரமும் சம்சாரியும் கற்பிதமென்கிற விவேகமே (அறிவே) அஞ்ஞானத்தை நீக்கும் உபாயம்.

8. அந்த விவேகம் எது செய்தால் வரும்?

சீவன் யார், பரமான்மா யார், இந்த உலகம் எவ்வாறு வந்ததென்று குரு முன்னிலையில், சந்தேகம் விபரீதமற விசாரித்தால் விவேகம் வரும்.

9. மோட்ச நிலையில் பலமாக மிஞ்சப் போகிற (சத்: சத்தியமாக அறியப்படுகிற) பரமாத்மாவை மாத்திரம் விசாரிக்க வேண்டுமே அல்லால், மலடி மகனைப் போல இருக்கின்ற சீவனையும் உலகையும் விசாரிப்பதில் பலன் ஏது?

தன் சொருபமாயிருக்கின்ற பரமாத்மாவினிடத்திலே ஒரு விசாரமும் தேவையில்லை. விசாரமெல்லாம் சீவன், சகத்துளிகளில் தானே. நுட்பமாக விசாரிக்கில் இவ்விரு வகையும் பாதிக்கப்பட்ட உடனே (உண்மையல்ல என்று நிச்சயிப்பது) பரமாத்வே தானாக மிஞ்சும்.

10). விசாரித்து அறிந்த ஞானிகளுக்கும் திரும்பவும் சீவன் சகத்தைக்

குறித்து விவகாரம் தோன்றுவான் ஏன்?

சுழுத்தியிலே (கனவற்ற தூக்கத்திலே) சீவன் சகத் தோற்றாமல் இருக்கையிலும் ஒருவரும் முக்தியடையாமற் இருக்கையினாலே, சீவன்சகத் தோற்றாமற் போகிறது. வாதை (உண்மை) அல்ல. இந்த இருவகையும் மித்தை (உண்மையல்ல) என்கிற நிச்சயமே வாதையாகும்.

11. சீவன் சகத் இந்த இருவகையும் தோற்றுமானால் பரமாத்மா மிஞ்சப் போகிறது எப்படி?

பரமாத்மா மாத்திரமே அழிவற்ற உண்மைப் பொருள் என்கிற நிச்சயமே மிஞ்சுகிறது. சகத் மறைகிறதல்ல. சகத் இல்லாதிருந்தாற் சீவன் முக்தி அடைய வழி இல்லை.

12. இந்த இருவகையும் எத்தனை காலம் விசாரிக்க வேண்டும்?

விசாரத்தினாலே வந்த ஞானம் பரோட்சம் (கேள்வி ஞானம்) என்றும், அபரோட்சம் (அனுபவ ஞானம்) என்றும் இருவகை இருக்கும். இதில் அபரோட்ச ஞானம் வந்தால் விசாரத்திற்கு முடிவு என்று அறியவும்.

13. இந்த இருவகை ஞானத்திற்கும் லக்ஷனம் ஏது?

பிரம்மம் ஒன்று உண்டு என்கிறது பரோட்சம். நானே அந்தப் பிரம்மம் என்ற நிச்சயம் அபரோட்ச ஞானம்.

14. இந்த அபரோட்ச ஞானத்தை வருவிக்கிர விசாரம் யாது?

கடாகாசம் (குடத்திலுள்ள ஆகாசம்) மகாகாசம் (எங்கும் நிறைந்த ஆகாசம்), சலாகாசம், மேகாகாசம் போலக் கூடஸ்தரையும் பிரமத்தையும், சீவனையும் ஈசுரனையும் பிரித்தறிவதே விசாரம்.

15. கடாகாசமும் மகாகாசமும் யாவரும் அறிந்ததே சலாகாசம், மேகாகாசம் இவற்றின் லக்ஷணம் யாது?

கடசலத்தில் பிரத்யக்ஷமாக மேகம் நக்ஷத்திரங்களுடனே பிரதி பிம்பத்திருக்கும் ஆகாசம் சலாகாசம். மகாகாசத்தின் மேகசலத்திலே அனுமானத்தினாற் கண்ட பிரதிபிம்பமே மேகாகாசம்.

16. கூடஸ்தர் முதலான நான்கு சைதன்யத்தையும் பகுத்துக் காட்ட வேண்டும்?

நிர்விகாரமாயிருக்கிற அதிஷ்டான சைதன்யமே சரீரத்தில் வளைபட்டது. கூடஸ்தரரென்றும், மற்றது பிரம்மமென்றும், கூடதஸ்தரிடத்தில் புத்தி கற்பிதம். அந்த புத்தியில் சைதன்யத்தின் பிரதிபிம்பம் பிராணனைத் தரிப்பதால் சீவன் என்றும், பிரமத்தில் கற்பிதமான மாயா பிரதிபிம்பன் ஈசுரன்.

17. சரீரத்திலே நான் என்று விவகரிக்கின்ற சீவனைத்தவிர வேறே கூடஸ்தர் எங்கே?

சலாகாசத்தினாலே, கடாகாசம் மறைபட்டாற் போலச் சீவனாலே கூடஸ்தரும் மறைபட்டு இரண்டும் ஒன்றாக தோன்றுகிறது.

18. இந்த சீவன் கூடஸ்தரை ஏன் பகுத்தறியவில்லை?
இந்தப் பிரித்துப் பார்ககாமைதான் மூலஅஞ்ஞானம்.

19. இந்த மூலஅஞ்ஞானமாகிற அவித்யை எத்தனை விதமாயிருக்கும்?
ஆவரணமென்றும் விட்சேபம் என்றும் இரண்டு வகையாயிருக்கும்.

20. இந்த இருவகைக்கும் லக்ஷணமேது?
கூடஸ்தன் பிரகாசிக்கவில்லை. கூடஸ்தன் இல்லை என்று செய்விப்பது ஆவரணம், கிளிஞ்சலை வெள்ளி என்று பார்க்கிறாற் போலச் சுபாவ சைதன்யமாயிருக்கிற தன்னைக் கற்பிதமாயிருக்கிற அகங்காரியாய்க் காண்கிறதே விட்சேபம்.

21. சூரியனிடத்திலே இருட்டு இல்லாதது போல, சுயம்பிரகாச மாயிருக்கிற ஆத்மாவினிடத்திலே அப்பிரகாசமாயிருக்கிற அஞ்ஞானம் வர காரணமில்லை. இருந்தாலும் அஞ்ஞானத்தின் காரியமான ஆவரணம் எப்படி வந்தது? இதுவுமில்லை என்றால் ஆவரணத்தைப் போக்குகின்ற வேதாந்தத்தைப் படிக்கவும் கணக்கில்லையே?
நான் அஞ்ஞானி என்ற அனுபவம் முன் சொன்ன தர்க்கக் கூட் டங்களைத் தகர்த்துவிடும். இவ்வனுபவம் சடத்தினிடத்திலே காணப்படாமல் சித்தினிடத்திலே காணப்படுகிறது.

22. அனுபவமாய்க் கண்டாலும் யுக்தி கூடாததேன்?
அனுபவமாய்க் கண்ட காரியத்திற்கு யுக்தி தேவையில்லை. காணாத காரியத்திற்கே யுக்தி வேண்டும்.

23. தூணாகநன நியாயம் (திரும்பத் திரும்பக் கூறி உரப்பிக்கும் உபாயம்) போல விசாரித்தால் அல்லவா புத்தி திடப்படும்?.
அனுபவத்தைக் கடந்து விசாரிக்கலாகாது. ஆகையினாலே கூடஸ்தருக்கும் அஞ்ஞானத்திற்கும் விரோதமில்லை, கூடியிருக்கலாம்.

24. ஆனால் இந்த அஞ்ஞானத்திற்கு விரோதி யாது? அதை எவ்வாறு காணலாம்?
சாஸ்திர விசாரக் ஞானமே அஞ்ஞானத்திற்கு விரோதி. இதை ஞானிகளிடத்தில் காணலாம்.

25. விட்சேபம் எனப்பட்ட அகங்காரி யார்? இவன் எதினாற் கற்பிக்கப்பட் டான். இவனுக்கு அதிஷ்டானம் ஏது?
காரண காரியத்தை உடைத்தான சைதன்னியமே அகங்காரி.

அஞ்ஞான காரியமான விட்சேபத்தினாலே கற்பிக்கப் பட்டான். இவனுக்கு அதிஷ்டானம் கூடஸ்த சைதன்யம்.

26. இப்படிக் கற்பிதமாயிருக்கிற அகங்காரிக்கும் சுபாவமாயிருக்கிற தனக்கும் சுபாவ சித்தமாயிருக்கிற பேதம் எப்படி? (மயக்கம்) பிராந்தி சித்தமாயிருக்கும் அபேதம் எப்படி?

இது என்னப்பட்ட அதிஷ்டான கிளிஞ்சல் உண்மை. வெள்ளி என்கிற ஆரோபம் மித்தை என்கிறது போலச் சுபாவ சித்தபேதம். இது வெள்ளி என்கிற ஒருமை மயக்கம் போல நான்தான் என்கிற ஒருமை மயக்கமே பிராந்தி சித்தமாயிருக்கிற அபேதம்.

27. இது என்கிற சாமான்யம் போலவும் வெள்ளி என்கிற விசேஷம் போலவும், ஆத்மாவும் அகங்காரியும் எங்கும் காணப்பட வில்லையே ஏன்?

நீதான் சொன்னவன், நான்தான் கேட்டவன் என்கிற விவகாரத்தினாலே, இது வெள்ளி, இது புடவை என்றாற் போலச் சாமான்ய விசேஷம் இரண்டும் காணப்படுகிறது.

28. இந்த பேத ஞானத்தால் யாது பிரயோசனம்?

தான் என்கிற சொல்லுக்கு அர்த்தம் நான் என்கிற அகங்காரிக்கு அன்னியரான கூடஸ்தர் என்றே அர்த்தம். (பிரயோசனம்).

29. கடந்தான், படந்தான், மடந்தான் என்னுமிடத்திலே அசேதனத் தினிடத்திலே தான் என்கிற சொல் வரலாமோ?

சிதாபாசனில்லாத படியினாற் சடமென்று சொல்லப் பட்ட கடபடாதிகளும், சிதாபாசன் உண்டானாபடியினாற் சேதனமென்று காணப்படுகிற பிரமாதிஸ்தம்பப் பூச்சிகளும், ஆத்மா ஒருவரிடத்திலே இருவகைக் கற்பிதங்களானபடியினாலே எல்லாவற்றிலுந் தான் என்று வழங்குகிற சொல், எங்கும் ஆத்மா உண்டென்கிறதைக் காட்டுகிறது. ஆகையினாற் தான் என்கிற சொல் எங்கும் வரலாம்.

30. தான் என்கிற சொல் போல இது அது என்கிற சொல்லும் எல்லா வற்றிலும் சாமான்யமாக இருக்கையினால், இவைகளும் ஆத்மாவாக ஏன் இருக்கக்கூடாது?

இது அது என்கிற சொல் நல்லது பொல்லாதது என்கிற சொல்போல படிபாதியிலே சாமான்யம் கண்டதே அல்லாமல் முற்றும் காணவில்லை. ஆகையினால் இதுதான், அதுதான் நல்லதுதான், பொல்லாதது தான் என்று சர்வத்தர சாமானியமாகத் தோன்றுகிறதுதானே ஆத்மா என்றும், மற்ற விசேஷமெல்லாம் மாயா கற்பிதம் என்றும் சித்தாந்தம் (முடிவு).

31. இது எல்லோருக்கும் ஏன் தெறியவில்லை?

முன்சொன்ன அஞ்ஞானத்தினாலே, அன்யோன்ய அத்யாசம்(ஆத்மாவின் தர்மங்களான சத்து சித்தை அநாத்மாவின் மீது ஏற்றி சரீரமாக நான் இருக்கிறேன், நன்கு விளங்குகிறேன் என்ற மயக்கமும், அநாத்மாவின் தர்மங்களான இல்லை, விளங்கவில்லை என்பதை ஆத்மாவின் மீது ஏற்றி இல்லை, இருந்தால் விளங்காதா என்ற மயக்கமும், அநாத்மாவின் துக்கம்

அநேகம் என்பதை ஆத்மாவின் மீது ஏற்றி நான் துக்கி அனேகன் என்றும் மயங்குதல் அடைந்த அஞ்ஞானிகள் சாமான்யம் விசேஷம் இரண்டும் வெட்டவெளியாய் வேறுபட்டிருக்கினும் ஒன்றாய்க் கண்டார்கள்.

32. இந்த அத்யாசம் எப்படிப் போகும்?

விசார ஞானத்தினாலே அஞ்ஞானமும் அதன் காரியமான ஆவரணமும் போகும்.

33. இந்த ஞானிக்குக் காரணமான அஞ்ஞானம் போயும், காரியமான விட்சேபம் இருப்பான் ஏன்?

விட்சேபத்திற்குக் காரணம் அஞ்ஞானமென்றும் கர்மமென்றும் இரு வகுப்பு. அவற்றில் அஞ்ஞானம் நசித்தும், கர்மம் நசியாதபடியினால் பிராரத்த கர்மம் தொலையுமட்டும் இருக்கும்.

34. காரணம் நஷ்டமாயும், காரியம் இருக்கும் என்கிறது நியாயமல்லவே?

தர்க்க மதத்திலே காரணம் நஷ்டமாயும் காரியம் சற்றுப்போது இருக்குமென்றது வேதாந்தத்திற்கும் சரியல்லவோ.

35. அப்படியானால் காரணத்திற்குப் பின் காரியம் சற்றுநேரம் அல்லவோ இருக்க வேண்டும். ஒரு மனிதனது ஆயுள் உள்ளளவு மட்டும் பிராரத்தம் இருக்குமென்கிறது கூடாது?

இரண்டொரு நாளில் உண்டான காரணத்திரயமென்னப்பட்ட நூல் வெந்தும் ஒரு சாமம் காரிய தாமதம் உண்டென்றால், அநந்த கற்பத்திலே இருக்கிற அஞ்ஞானப் பிராந்தி நஷ்டமானால் அதன் காரியமான விட்சேபம் பிராரத்தத்தோடே போம் என்றது சொற்பமல்லாமல் பெரிதல்ல.

36 இதற்குப் பிரமாணம் இல்லையோ?

நமக்குச் சுருதி யுக்தி அநுபவம் மூன்றும் உண்டு.

37. சண்டை போதும் சித்தாந்தம் ஏது?

அஞ்ஞானிகள் நான் தான் என்கின்ற இருவரையும் ஒருவராகக் கண்டு கலங்கிச் சம்சாரத்திலே மயங்குவார்கள், இந்த இருவரையும் வேதாந்த ஞானிகள் பகுத்தறிந்து முத்தராவார்கள் என்கிறதே சித்தாந்தம்

38. வேதாந்தம் அல்லாத சாஸ்த்திரத்தினாலே முத்தியில்லையோ?

மற்றை சாஸ்திரங்களெல்லாம் பிராந்தர்களாலே பண்ணப்பட்ட சாஸ்திரங்களான படியினாலே, கலக்கத்தின் மேல் கலக்கமாய்க் குழப்புமே அல்லாமற் பிராந்தியைத் தெளிவிக்கமாட்டாது.

39. இன்ன இன்ன சாஸ்த்திரகர்த்தாக்கள், இன்ன இன்னதைப் பொருள் என்று கலங்கினார்கள் என்றதையும், இவர்களுக்குப் பரம்பரையாகத் தெளிவு வரும் வழியையும், இன்னபடி பகுத்துச் சொல்ல வேண்டும்?

a. பாமரரும் லோகாயுதரும் விரோசன சித்தாந்த யுக்தியினாலே ஸ்தூல சரீரமே ஆத்மா என்பார்கள்

b. சார்வாகன் சீவன் போன உடனே சரீரம் மரித்துப் போகிறபடியினால், நான் கண்டேன் கேட்டேன் என்கிற யுக்தியினால் தேகம் ஆத்மாவல்ல,

இந்திரியமே ஆத்மா என்பர்.

c. இரணியகர்ப்ப உபாசிகளான பிராணத்மவாதிகள், பிராணன் போனால் இந்திரியங்கள் இராதபடியினால் பிராணனே ஆத்மா என்பர்.

d. உபாசகர் மனதில்லாத போது பிராணன் தெரியாத படியினாலே மனதே ஆத்மா என்பர்.

e. புத்த மத க்ஷணிக விஞ்ஞானவாதிகள் புத்தி இல்லாவிட்டால் மனது இல்லாது போவதால் புத்தியே ஆத்மா என்பர்.

f. பௌத்தர்களான மாத்தியமிகள் சுழுத்தியிலே புத்தி முதலான ஒன்றையும் காணாதபடியினாலே சூன்யமே ஆத்மா என்பர்.

g. பட்டர் முதலானோர் சுழுத்தியிலே சூன்யமாயிருந்ததென்று கண்டு சொல்ல வருகிறபடியினாலே ஆத்மா சத் என்பார்கள். இவ்வாறு ஆத்ம நிர்ணயம் செய்து இனி ஆத்ம பரிமாணத்தில் விவாதம்.

h. அந்தராளர் சூட்சும நாடி வழியே சஞ்சரிக்கிற படியினாலே ஆத்மா அணு என்பார்கள்.

i. திகம்பரர், தலை முதல் பாதபரியந்தம் அறிவு கலந்திருக்கிறபடியினால் ஆத்மா மனிதன் அளவே என்பர்

j. பிரபாகரரும் தார்க்கீகரும் ஆத்மா பரிச்சின்ன (சரீரத்திற்குள் வளைபட்ட) மாயிருந்தால் அழிந்துபோம் என்று பரிபூரணமாய்ச் சடமாயிருக்கும் என்பர்.

k. பட்டர் மதத்திலே சுழுத்தியிலே சடமாயும், சாக்கிரத்திலே அறிவாயும் காணப்படுகிற படியினாலே, ஆத்மா சட சித்தாய் இருவகையுமாயிருக்கும் என்பர்.

l. சாங்கியர், பரிபூரணத்திற்கு இரண்டு லக்ஷணம் கூடாது. ஆத்மா சித்தாய் பரிபூரணமாயிருப்பார். அவரவர்கள் சுழுத்தியிலே காண்கிற சடம், அந்த அந்த ஆத்மாக்களுக்குச் சுக துக்கம் கொடுக்க வந்த பிரகிருதி என்பர்.

m. யோகி, பிரகிருதி (மாயை) தானும் புருஷன் ஒருவன் இல்லாவிட்டால் சேஷ்டி(காரியமா)க்க மாட்டாதென்றும், அடக்கி ஆளுவார் இல்லாதிருந்தால் ஆத்மாக்களுக்குப் பந்தமோட்சமில்லை என்கிறபடியினாலே இந்த ஆத்மாக்களைத் தவிர ஈசுரன் ஒருவன் உண்டென்பர். இனி இதில் உளதாகும் கலக்கங்களைக் கூறுகிறார்.

n. பதஞ்சலி பகவான், கிலேச கர்ம விபாகங்களோடும் அவற்றின் சமஸ்காரங்களோடும் கூடாத புருடவிசேடனே ஈசுரனாம். அவன் சீவன்போலும் அசங்க சித்தாகும் என்பர்.

o. தார்க்கீகன், அசங்கனாகிய ஈசுரனுக்கும் நியந்திருத்துவம் கூடாது. நித்யமான இச்சை ஞானக் கிரியைகளோடு இருப்பன் என்பர்.

p. இரணியகர்ப்ப உபாசகர், ஈசுரன் நித்ய ஞானாதிகளோடு இருப்பானேல் சதா சிருஷ்டி உளதாதல் வேண்டும் அப்படி இல்லாததினால் இரணியகர்ப்பனே ஈசுரன்.

q. விஸ்வரூப மதம், ஸ்தூல சரீரத்தை விட்டு சூட்சும சரீரம் தனியே

இல்லை. கிருஷ்ணன் விஸ்வரூபம் காட்டுகிற போது எங்கும் கால், எங்கும் கையாகக் காட்டினபடியினாலே விராட்புருஷனே ஈசுரன். இரணிய கர்ப்பன் ஈசுரன் அன்று என்பர்.

r. பிரசாபத்ய மதம், எங்கும் கால் எங்கும் கையாக இருக்கிறதே ஈசுரன், ஆனால் மரவட்டையும் ஈசுரனாகவேண்டும். ஆகையினாலே பிரம்மாவே ஈசுரனல்லாமற் மற்றது ஈசுரனல்லன் என்று சொல்லுவர்.

s. வைணவ மதம் இந்தப் பிரம்மாவும் விஷ்ணுவினுடைய நாபியிலே பிறந்தபடியினாலே விஷ்ணுவே ஈசுரனென்பர்.

t. சைவ ஆகமம், சிவனுடைய பாதம் விஷ்ணு காணாதபடியினாலே சிவனே ஈசுரனேன்பர்.

u. கணாபத்ய மதம், திரிபுர சம்காரத்திலே சிவனும் கணபதியைப் பூசை பண்ணினபடியினாலே கணபதியே ஈசுரனென்பர்.

v. புராணிகமதம், இப்போது சொல்லப்பட்ட தேவதைகள் எல்லாம் புண்ய தலங்களிலே விளங்குகையினாலே, புண்யத்தலங்களே ஈசுரனென்பர்.

w. தர்மசாஸ்திரன், புண்யத்தலங்களும் தலவிருஷ(மர)ங்களினாலே விளங்குகையினால் மூங்கில் எருக்கு அரசு, வில்வம் முதலானவைகளை அவரவர் குலதேவதைகளாகப் பூசை பண்ணுகையினால் மரங்களே ஈசுரன் என்பர்.

x. இப்படி இன்னும் அநேக மதவாதிகள் தங்கள் தங்கள் மதஅபிமானத்தினாலே சாஸ்திரங்களைப்பண்ணிக் கொண்டு, அலைந்தார்கள். இப்படி அஞ்ஞான சாஸ்திர கர்த்தாக்கள் அலைந்த வழி சொன்னோம்.

**40.** இப்படி எல்லா சாஸ்திர கர்த்தாக்களும் வஸ்து நிர்ணயம் பண்ண மாட்டாமல் அலைந்தார்களானால் வஸ்து நிர்ணயம் பண்ணபோகிறது எப்படி?

பிரமம் ஒன்றே பொருள். மற்றுள எல்லாம் மாயாமயம் என்கின்ற வேதாந்த விசாரத்தினாலே வஸ்து நிர்ணயம் பண்ண வேண்டும்.

**41.** அப்படியானால் மேலேசொன்ன வாதிகளுக்கெல்லாம் விரோதம் அல்லவோ?

ஒன்றே பொருள் என்கின்ற வேதாந்தத்துக்கும், அதைத்தானே குருடர் யானை கண்டாற்போலக் கண்டிருக்கிற இந்த வாதிகளுக்கும் சற்றும் விரோதமில்லை.

**42.** பிரமம் ஒன்றே உண்மைப்பொருள் என்கிறதற்கும், மற்றுள எல்லாம் மாயாமயம் என்கிறதற்கும் பிரமாணம் ஏது?

இப்படிச் சொல்லுகிற முப்பத்திரண்டு உபநிஷத்துமே பிரமாணம்.

**43.** இவ்வளவும் சித்து லக்ஷணம். வேதாந்தத்திலே மாயைக்கு லக்ஷணம் எப்படி? மோக லக்ஷணமும், சடலக்ஷணமுமாய் மாயையிருக்கும்.

**44.** இந்தபிரபஞ்சத்திலே மாயாலக்ஷணம் இருவகையும் பகுத்துக் காட்ட வேண்டும் குடம் முதலாக உலகம் அனைத்தும் சடமாயிருக்கக் கண்டோம். இது உண்மை, இது பொய் என்று உலகப் பொருள்களைப் பகுத்தறியப்

படாதபடியினாலே மோகமாயிருக்கக் கண்டோம்.

45. சீவன், உலகு, ஈசுரன் என்பவை எல்லாரும் உண்மையாகக் கண்டு வருவதை மாயை என்கிறது எப்படி?

இந்த மாயையிலே கற்பிக்கப்பட்ட சகலமும்

a. உலகாயதர் பார்வையிலே உண்மையாகவும்

b. யுக்தியினாலே அநிர்வசனியமாகவும் (இன்னது என்றே இப்படி என்றே கூற முடியாது)

c. வேதாந்தம் அறிந்த ஞானிக்கு மூன்று காலத்திலும் இந்த மாயப்பிரபஞ்சம் இல்லவேயில்லை என்று மூன்று விதமாயிருக்கும்.

46. இந்த மாயாகற்பிதப் பிரபஞ்சமெல்லாம் எந்தக் காலத்தில் உண்டு எந்தக் காலத்தில் இல்லை?

சாக்கிரத்திலும், சொப்பன க்காலத்திலும் விரித்த சித்திரம் எழுதிய துணியைப்போல உண்டாயிருக்கும் என்றும் சுழுத்தி மூர்ச்சை சமாதி காலங்களிலே சுருட்டின சித்திரம் எழுதிய துணியைபோல இல்லாத காலம்.

47. இந்த மாயை சுதந்திரையோ, பராதீனமோ?

சைதன்யத்தை அன்றியிலே விளங்கமாட்டாதபடியினாற் பராதினமுமாம், அசங்க நிர்விகாரியாயிருக்கிற கூடஸ்த சைதன்னியத்தைச் சடமாயிருக்கிற உலகாகவும், சிதாபாச சொரூபத்தினாலே சீவனையும் ஈசுரனையும் கற்பிக்கையினால் சுதந்தரையுமாயிருக்கும்.

48. இப்படியானால் மாயையினாலே, பிரமத்திற்துச் சொரூபலக்ஷணம் கெடாதோ?

மாயைக் கூடஸ்தரைத் தொடாமல் தானே சீவ, ஈசுர, உலகை காட்டுகையினால் சொரூப லக்ஷணம் கெடாது.

49. முன்பிரமத்தைத் தானே சீவன் ஜகத்தாய்ப் பணணிற்று என்றீர். இப்பொழுது பிரமத்தைத் தொடாமல் தானே பண்ணிற்று என்கிறீர், இந்த இருவகையும் கூடாது?

செய்ய முடியாததைச் செய்வதே சுபாவமாக உடைய மாயையினிடத்தில் இது விஷயமாய் ஆச்சர்யப்படுவதற்கு என்ன இருக்கிறது.

50) இப்படி மாயைக் கற்பித்தவெல்லாம் கூடாததைக் கூட்டுவித்ததாகவிருக்குமோ? இப்படிக் கொத்த சக்தி இந்த மாயைக்கு எங்கிருந்து வந்தது?

ஒரு மாயையினிடத்திலே பிறந்த பூதங்களிலே, ஆகாசத்திலே வெளியும், காற்றிலே சலனமும், நெருப்பிலே சூடும், தண்ணீரிலே குளிரும், மண்ணிலே கடினமும் கண்டபடியினால், இந்த மாயைக் கூடாததைக் கூட்டுவிக்கிறதே சுபாவம். இந்த சக்தி மாயைக்குச் சுபாவமாகவேயல்லாமல் ஒன்றினால் வந்ததல்ல.

51) இந்த உலகு மாயாமயம் என்பதை எல்லோரும் ஏன் அறியவில்லை?

இந்திரஜாலகாரனைக் காணுமளவு இந்திரஜாலம் உண்மையாகத்

தோற்றுகிறாற்போல, மாயையாகிய இந்திர ஜாலத்துக்கு அதிஷ்டானமாகிய பிரம்மத்தை அறியுமளவு மாயை உண்மையாகத் தோற்றும். அதிஷ்டான மாகிய தன்னை அறிந்தால் மாயைப் பொய்யாய்ப்போம்.

52) சகல வாதிகளும் மாயையிற்குள்தானே இது பொருள், அது பொருள் என்று வாதிக்க காரணம் ஏது ?

சந்தேக சொரூபமாய் இருக்கிற மாயைக்குப் பரிகாரம் தேடாமல், கேள்விமேல் கேள்வி கேட்கிறதற்கு அவரவர்கள் அஞ்ஞானமே காரணம்.

53) இந்த மாயைக்குப் பரிகாரம் ஏது?

இது பொருளல்ல, மாயை என்று அறிகிறதே பரிகாரம்.

54) கண்ணாரக் கண்டும் நிர்ணயமாகாத இந்திரஜாலம் போல, இந்த சகத்து மாயாமயமாயிருக்கவில்லையே உண்மையாக அல்லவா இருக்கிறது?

இருக்கிறது, இல்லை என்ற இருவகை நிர்ணயத்திலும் அகப்படாத சகத் உண்மை என்கிறது அஞ்ஞானிகளுடைய தீர்மானமேயல்லாமற், சகத்து மாயைதானே.

55) இவ்வாறு உலகுமாயாகற்பிதம் என்று சொன்ன சாஸ்திரகர்த்தாக்கள் யாவர்? அவர்கள் எவ்வாறு கூறியுள்ளார்கள்?

சடமாய்க் கர்ப்பவாசம் பண்ணின சுக்கிலமும் சேதனம் போலே பிறந்து, உண்டு, உடுத்தி, கண்டு, கேட்டு, பெரியவன், சிறியவன் என்று திரிகிறதைப் பார்க்க வேறே இந்திரஜாலம் ஏதென்று வசிஷ்டரும், இந்தத் தேகம் போலே ஆலமரம் முதலானவைகளும் விதை எங்கே வந்தது மரம் எங்கே வந்தது என்று மயங்க வேண்டாம். சகலமும் மாயை என்றே காணவேண்டுமென்று வியாசரும், மனதினாலே சிந்திக்கில் நிர்ணயமாகாத பொருளைத்தர்க்கிக்க ஒண்ணாத தென்றும், நிர்ணயப்படாத சகத்திலே இது பொருள் அது பொருள் என்று தீர்மானிக்கத் தேவையில்லை. சகலுமும் மாயையென்றே காணவேண்டுமென்று யாக்கியவல்கியரும் சொன்னார்கள். இன்னபடியென்று சிந்திக்கப்படாததை உண்டாக்குகிற சக்தி மாயை என்று எல்லோரும் சொல்லியிருக்கிறார்கள்.

56. இந்த மாயைக்கு விதை எங்கே காணலாம்?

மரத்தைத் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கிற விதை போலச் சாக்ர சொப்பன உலகத்தைத் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கிற மாயா விதை, சுழுத்தியிலே எல்லோராலும் அனுபவிக்கப்படுகிறது.

57. சகல புத்தி வாசனைகளும் மாயையிலே அடங்கியிருக்கிறதற்கு அடையாளம் ஏது?

மாயா பிரதிவிம்பர் (ஈசுரன்), மாயையிலே சகல வாசனையும் கண்டு சர்வக்ஞராயிருக்கிறதே அடையாளம்.

58. ஈசுர உபாதி, சீவ உபாதி எப்படியிருக்கும்? சீவ ஈசுரர்கள் எப்படியிருப்பார்கள்? ஈசுரனை அறிகிற வழி யாது?

மேகம் போலிருக்கும் மாயை. மேகத்தின் திவலை போல இருக்கும்

புத்தி வாசனைகள். திவலையிற் பிரதிவிம்பித்த ஆகாசம் போலிருப்பர் சிதாபாசர்கள். மேக ஆகாசம் போல ஈசுரனை அனுமானத்திலே அறிய வேண்டும். (சிதாபாசர்கள் : சீவர்கள்)

59. இந்த புத்தி வாசனையிலே பிரதிவிம்பித்த சிதாபாசனையும் மாயையிலே பிரதிவிம்பித்த ஈசுரனையும் எவ்வாறு பகுத்துக் காண்பது?

வாசனையானது சிதாபாசனுடனே கூடிப் புத்தி ரூபமாய் முளைக்கிற போது சிதாபாசனை வெட்டவெளியாய்க் காணலாம். ஈசுரனைச் சர்வக்ஞன், சர்வேசுரன், அந்தர்யாமி என்று வேதம் சொல்வதைக் கேட்டு அறியலாம்.

60. சீவனும், ஈசுரனும் சிதாபாசர்களானால் இவர்களுக்கு உள்ள வித்யாசம் யாது?

சீவர்கள் மாயைக்குட்பட்டிருப்பார்களென்றும், ஈசுரன் மாயையைக் தன் வசம் பண்ணிக் கொண்டிருப்பன் என்றும் சொல்வார்கள்.

61. ஈசுரனைச் சர்வக்ஞன், சர்வேசுரன், அந்தர்யாமி என்பது எதனால்?

ஈசுரனுக்கு உபாதியான மாயையிலே சகலமும் இருக்கிறபடியினாலே சர்வக்ஞன் என்பது, சர்வ சீவர்களுடைய புத்திகளுக்குள்ளிருந்து ஆட்டுகிறபடியினால் அந்தர்யாமி என்றும், இவர் உண்டாக்குகிற பிரபஞ்சத்தை வேறு ஒருவராலும் மாற்றியமைக்கப்படாததென்று கொண்டு சர்வேசுரன் எனலாம்.

62. ஈசுரனுக்குச் சர்வக்ஞத்வம் உண்டானால், எல்லோராலும் ஏன் அனுபவிக்கப்படவில்லை?

வாசனைகளெல்லாம் பரோட்சமானபடியினால் அனுபவிக்கப் படவில்லை.

63. அந்த சர்வக்ஞத்தன்மையின் ஞானம் எப்படி இருக்கும்?
சர்வ புத்திகளிலும் அந்தச் சர்வக்ஞ்த்வத் தன்மையைக் கண்டு வாசனையின் கண்ணே அனுமானிக்கத் தக்கது.

64. அந்தர்யாமிக்கு இத்தனைக் குணம் உண்டென்பதற்குப் பிரமாணம் ஏது? இவருக்குச் சரீரம் ஏது? இவர்கற்பித்த பிரபஞ்சத்திற்கு வழி என்கிற திற்கு பிரமாணம் ஏது?

அந்தர்யாமிக்கு இத்தனைக் குணம் உண்டென்கிறதற்கு அந்தர்யாமிப் பிரமாணம் என்கிற வேதம் பிரமாணம். புடவையினிடத்திலே நூல் உபாதானமாக இருக்கிறது போலச் சகலத்திலும் இவர் உபாதானமாக இருக்கிறபடியினாலே சகலமும் இவர்க்குச் சரீரம். ஈசுரன் சகல பூதங்களிலுமிருந்து தேகாதிப் பாவைகளை அபிமானக் கயிற்றைப் பூட்டி விதி, நீக்கம் வழியே ஆட்டுவிக்கிறார் என்கிற கீதாவசனமும், இது தர்ம மென்று அறிவேன் இதிலே பிரவேசிக்கமுமில்லை, இது அதர்மமென்று அறிவேன் இதிலிருந்து நீங்கவுமில்லை. யாரோ ஒருவர் ஆட்டுவிக்கிறார் என்கிற பாண்டவ கீதையும் கற்பித்ததே வழி என்றதற்குப் பிரமாணம்.

65. சகலமும் இப்படி ஈசுரனே ஆட்டுகிறதானாற் புருஷனுடைய முயற்சி தேவையில்லையோ?

புருட முயற்சியும் அவரவர் கர்மத்திற்கு ஈடாக, ஈசுர சங்கற்பமேயான படியினால், முயற்சியே பண்ணவேண்டும்.

66. கர்மத்தின் வழியே முயற்சியானால் ஈசுரசங்கற்பந் தேவையில்லையோ?

ஈசுரபிரசாதம் கொண்டு, தான் அசங்கன் என்ற ஞானம் வரவேண்டிய படியினாலே ஈசுரபிரசாதமும் (அனுக்கிரஹம்)வேண்டும், ஆகவே அந்தர்யாமிப் பிரேரணை வீணல்ல.

67. ஈசுரஅனுக்ரகம் கொண்டு, தான் அசங்கன் என்கிற ஞானம் வந்ததனாற் பிரயோசனம் ஏது?

அந்தஞானம் கொண்டு முத்திகைவந்ததென்று வேதம் கூறுகிறதே பிரயோசனம்.

68. அந்த அந்தர்யாமி சிருஷ்டிக்கிற வழியேது? அழிக்கிற வழியேது?

சித்திரம் வரைந்த துணியை விரித்தாற் போலத் தம்மிடத்திற் பிரபஞ்சத்தை அவரவர் கர்மவசப்படியே தோற்று விக்கிறதே சிருஷ்டி. சுருட்டின துணியைப் போல அவரவர் கர்மத்தின் வழியே பிரபஞ்சத்தைத் தம்மிடத்திலே அடக்குகிறதே பிரளயம்.

69. ஒரு ஈசுரனே சித்துக்கும் (சிதாபாசனுக்கும்), சடத்துக்கும் (உலகிற்கும்) காரணம் எப்படியாவர்?

சைதன்னியமான படியினாலே சிதாபாசனக்கும், தம்முடைய உபாதியைத் தொட்டு உலகிற்கும் காரணமாவார்.

70. இப்படியானால் பிரமந்தானே உலகு காரணமென்று சுரேசுவர ஆச்சாரியார் சொல்லுவானேன்?

கூடஸ்தரையும் சீவனையும் அன்யோன்ய அத்தியாசத்தினாலே ஒருமைப் பாடாய்க் கண்டாற் போல, ஈசுரனையும் பிரம்மத்தையும் ஒன்றாகக் கண்டு சொன்னார்.

71. அன்யோன்ய அத்யாசம் எப்படி கூடும்?

ஈசுரனுடைய சகத் காரணத்துவம் பிரமத்தினிடத்திலும், பிரம்மத்தினுடைய சச்சிதானந்த லக்ஷணம் ஈசுரனிடத்திலும் அத்யாசம் பண்ணப்பட்டு கஞ்சி பூசின துணியைப் போல ஒன்றாயிற்று.

72. இந்த உளவு நீர் அறிந்த வகை எப்படி?

ஆறு லிங்கத்தாலும் வேதாந்த விசாரம் பண்ணிப் பிரம்மம் அசங்மென்றும், மாயாபிரதிவிம்பரே உலகை சிருஷ்டிக்கிறவ ரென்றும் அறிந்தோம்.

73. சிருஷ்டி பண்ணின வழி ஏது?

சுழுத்தினியிடத்திலே சொப்பனம் உண்டாகிறாற் போல, ஆனந்த மயனாயிருந்த ஈசுரனும், மாயையை விரியப் பார்த்து, இரணியகர்ப்பரானார்.

74. ஒரு வேதத்திலே, ஒன்றிலே ஒன்று உண்டாயிற்று என்கிற சிருஷ்டி சொல்லுகிறது. ஒரு வேதத்திலே ஒருமித்த சிருஷ்டி சொல்லுகிறது. இதிலே

எது பிரமாணம்?

இந்த இரண்டு வகை சிருஷ்டியாகிய சொப்பனமும் உண்மையான படியினால் இரண்டும் பிரமாணம்.

75. இரண்யகர்ப்ப சொரூபம் எப்படி இருக்கும்?

சூட்சும சரீர சமஷ்டி அபிமானியாய் படத்திலே சூத்திரம் இருக்கிறாற் போல எங்கும் இருக்கிறவராய், இச்சா ஞானக் கிரியை என்று சொல்லப்பட்ட மூன்று சக்திகளை உடையவர் இரண்யகர்ப்பர்.

76. இந்த இரண்யகர்ப்பம் எப்படி காணப்படும்?

மாலைக் காலத்து இருட்டிலே காணப்படுகிறலோகம் போலவும், கரியினால் அச்சுக்கட்டின சித்திரத்துணி போலவும், எங்கும் ஒக்கக் குறுமுளையாய் இருக்கிற பயிர்வகை போலவும், ஈசுரனுடைய சூட்சும சரீரமும் அழகாக ஒன்றுபட எங்கும் தெளிவாய் இல்லாமல் தோற்றும்.

77. இந்த சூட்சும சரீரம் தூல நிலையை அடைந்து தோற்றுகிறது எப்படி? இதற்குப் பிராணம் ஏது? இவர்க்கு அவயங்கள் ஏது? அந்த அவயங்களைப் பூசித்தால் பலன் ஏது?

பஞ்சீகரணம் பண்ணப்பட்டு, வெய்யிலிலே விளங்குகிற லோகம் போலவும், தீர்ந்த சித்திர துணி போலவும், பழுத்த பயிர் வகை போலும், வெட்ட வெளியாகக் காண்கிற ஸ்தூல சரீராதிப் பிரபஞ்சமே விராட் என்பது. விஸ்வரூப அத்தியாயமும், புருஷ சூத்ரவேதமும் பிரமாணம். பிரம்மா, விஷ்ணு, சிவன், கணபதி, முருகன், அம்பிகை முதலிய மூர்த்திகள், வர்ணாச்சிரமுடையு பிராம்மணன் முதலானோர், அசுரர்கள், பசு, குதிரை, மான், பறவை, ஆல, அரச மரம், நெல், புல், தண்ணீர், கல், மண், உளி, குத்தாளம் முதலியவை இவையெல்லாம் ஈசுவரர்கள். உபாசிக்கப்பட்ட தெய்வம், அதிகாரிக்குத் தக்கதாய்ப் பலன் வரும்.

78. எல்லோரும் பூஜிக்கிறது ஈசுரனானால் எல்லோருக்கும் ஏன் மோட்சம் வரவில்லை?

மாயீகத்தை (மாயா ஈசுரனை) உபாசித்தால், மாயீகபலமே அல்லாமல், மோட்சம் வராது.

79. பின்னை எதனால் மோட்சம் வரவேண்டும்?

பிரம்ம விசாரணையினால் மோட்சம் வருமே ஒழிய மற்று வேறு எதனாலும் வராது.

80. பிரம்ம ஞானம் அன்றியிலே மற்றொன்றினாலும் சம்சாரம் போகாதோ?

தான் விழித்துக் கொள்வதைத் தவிர தன் தூக்கம் விலகுவதற்கு வேறு வழி எப்படி கிடையாதோ அப்படி அத்துவிதப் பிரமத்தில் அஞ்ஞான கற்பிதமான ஜீவன், ஈசுரன், உலகு என்ற சொப்பனமும் அதிட்டான ஞானத்தினாற் போக வேண்டும்.

81. பிரமத்திற்கு அபின்னமாயுள்ள சீவன் ஈசுரனையும் கற்பித (சொப்பன) உலகுடன் சேர்க்கலாமோ?

சீவ ஈசுரர் மாயா கற்பிதமானபடியினால் கூட்டலாம்.

82. சீவ ஈசுரர்களால் கற்பிதம் ஏது?

சிருட்டி செய்ய நினைத்தது முதல் சரீரத்தில் சீவனாகப் புகுந்தது வரை சிருட்டியெல்லாம் ஈசுரன் கற்பித்தது. விழிப்பு முதல் மோட்சம் வரை உள்ள சம்சாரமெல்லாம் சீவன் கற்பித்தது.

83. இப்படி பிர்மமாத்திரமே உண்மை பொருளானால் வாதிகளெல்லாம் சீவ ஈசுர விஷயத்தில் வாதம் பண்ணி மாயக் காரணம் ஏது?

அவர்களைப் பிடித்த அஞ்ஞானமே காரணமாக வீணிலே மாய்கிறார்கள்.

84. இந்த தத்துவத்தை வாதிகளுக்கும் ஏன் போதிக்கக்கூடாது?

பிராந்தியிலே உள்ளவர்களுக்கு பக்குவம் வாராததற்கு முன்னே போதித்தால், இளைப்பு மாத்திரமே மிச்சமல்லாமல் அவர்கள் புத்தியில் ஏராது.

85. எந்த வாதிகள் எந்த விஷயங்களில் பிராந்தர்களாய் இருக்கிறார்கள்?

லோகாயுதன் முதல் சாங்கிய சாஸ்திரத்தைப் பிரமாணமாக உடையவர் வரை சீவன் விஷயத்தில் பிராந்தியை அடைந்தவர்கள், புல்லைப் பூசிப்பவர் முதல் யோக சாஸ்திரத்தை பிரமாணமாக உடையவர்கள் வரை ஈசுரன் விஷயத்தில் பிராந்தியை அடைந்தவர்கள்.

86. பெரியோர்களாய் இருக்கிற சாஸ்திர கர்த்தாக்களையும் பிராந்தர்கள் என்று சொல்லலாமா?

அத்வைத பிர்மத்தை அறியாதபடியினால் இவர்களும் பிராந்தர்களே இவர்களுக்கு இகபரம் இரண்டுமில்லை.

87. சீவ வாதிகளோடு ஈசுர வாதிகளையும் பிராந்தர்கள் என்று சொல்லலாமோ?

சொப்பனத்தில் பிச்சை எடுக்கிறவனைக்காட்டிலும் ராஜாவாயிருக்கிறவன் உயர்ந்தவன் ஆனாலும் விழித்தபின் அவைகளுடன் கூடி இருப்பது இல்லை அல்லவா. அவ்வாறு இந்த இருவகை வாதிகளும் கற்பித விஷயத்திலே மேல் கீழ் என்ற வேறுபாடு இருந்தாலும், ஞானம் வந்தவனைக் குறித்து இரண்டு பேர்களும் சமமானவர்களே (பிராந்தர்களே).

88. மோட்சம் வரவேண்டும் என்கிறவனும் இந்த வாதங்களை விசாரிக்கத் தேவையில்லையோ?

பூர்வபட்சமாய் (மேல் எழுந்தவாரியாக) விசாரித்துத் தள்ளி விடுகிறதே அல்லாமல் சித்தாந்தமாய் (முடிவாக) விசாரிக்க வேண்டியது வேதாந்தம் ஒன்றே.

89. சாங்கியம், யோகம் இந்த இருவகையிலும் சொன்ன சீவனும் ஈசுரனும் சுத்த சைதன்னியமான படியினால் இந்த இருவகையும் தள்ளப் படாது வேதாந்தத்தில் கூட்டலாமோ?

சீவ ஈசுரர்களுக்கு பேதம் சித்தமானபடியினால், நம்முடைய சித்தாந்தத்திற்கு கூடாது.

பஞ்சதசி

**90.** வேதாந்த சித்தாந்தத்திலே துவம்பதத்திற்கும், தத் பதத்திற்கும் பேதமில்லையோ?

அத்துவிதத்தைப் போதிக்க வேண்டுமென்பதற்காக சீவ ஈசுரர்களை வேறுபடுத்திக் காட்டினதே அல்லாமல் அவர்கள் இருவருக்கும் இடையே அர்த்த பேதமில்லை.

**91.** இப்படியானால் லக்ஷணை (குறியால்) பதார்த்த (சீவ ஈசுர) சோதனை பண்ணுவானேன்?

அஞ்ஞானத்தினால் சீவ ஈசுரர்களைப் வேறாகக் கண்டிருந்த பிராந்தர்களுக்கு (சாங்கிய, யோகிகளுக்கு) அந்த பிராந்தியைப் போக்க வேண்டிப் பதார்த்த சோதனை செய்யப்பட்டது.

**92.** பதார்த்த சோதனையினால் இருவரையும் ஒருவராக காண்பது எப்படி?

உபாதி கற்பிதமாயிருக்கிற சலாகாசத்தையும் மேகாகாசத்தையும் விட்டு, இவைகளுக்கு அதிஷ்டானமாயிருக்கிற கடாகாசத்தையும் மகாகாசத்தையும் ஒன்றாகக் காண்கிறாற் போல, துவம்தற்பதங்களிலும் உபாதி கற்பிதமான சீவ ஈசுரர்களைத் தள்ளி இவர்களுக்கு அதிஷ்டானமான கூடஸ்தரையும் பிர்மத்தையும் ஒன்றாகக் காண்கிறதே லக்ஷணையினாற் பதார்த்தம் சோதிக்கிறது என்று அர்த்தம்.

**93.** இந்தப் படிக்கு சாங்கிய மதத்தில் சீவனையும், யோக மதத்தில் ஈசுரனையும் இரண்டு பதங்களுக்கும் அர்த்தமாக்கலாமோ?

இப்படியானால் வேத விரோதிகளாயிருக்கிற லோகாயுதன் பரியந்தம் கூட்டலாம்.

**94.** சாங்கிய யோக மதத்திலே வேதாந்தத்திற்கு விரோதமேது?

சரங்கிய யோக மதத்திலே ஆத்மாக்கள் அநேகமென்றும் யோகத்திலே சகத்சத்யம், ஈசுரன் ஜீவனைத் தவிர வேறானவர் என்பது அத்துவிதத்திற்கு விரோதம்.

**95.** அத்துவிதத்திற்கு அம்மதக் கருத்துக்கள் ஒத்து வராவிட்டாலும் சீவன் அசங்க சைதன்யம் என்று அவர்கள் கூறுவது கொண்டு அவ்வளவு அறிந்து கொண்டால் முத்தியில்லையோ?

சீவனும் ஈசுரனும் நித்யமென்றதனாற், தான் அசங்கன் என்று அறிந்தாலும், முன்போலப் பிரகிருதி (வெளிப் பிரபஞ்சம்) அவசியம் இவனுக்கு சங்கத்தை உண்டுபண்ணும். அப்படியே ஈசுரனும் இவனை நியமனம் செய்வார். ஆகையால் மோட்சம் எப்படிக் கூடும்.

**96.** அசங்கனாயிருக்கிற ஆத்மாவிற்கு அவிவேகத்தினாற் பிரகிருதிசங்கம் வந்தது. விவேகம் வந்த பிற்பாடு எப்படிக் கூட்டும்?

இப்படியானாற் பிராந்தர்கள் சித்தாந்தம் கெட்டு, மாயா வாதத்தினாலே வேதாந்தத்திலே வந்து விடும்.

**97.** அத்துவிதத்தில் ஆத்மாக்கள் அநேகமாகாத போது, இவன் முக்தன், இவன் பத்தன் என்கிற நிர்ணயம் வந்தது எப்படி?

பஞ்சதசி

பந்தம், மோட்சம் இரண்டும் வாஸ்தவம் என்பதை வேதம் கொஞ்சமேனும் சகிக்கிரதில்லை. இந்த நிர்ணயம் எல்லாம் மாயைதானே கற்பிக்கிறது.

98. ஆத்மா ஒன்றே தவிர இரண்டில்லாத விடத்திலே மாயை எப்படி விகற்பத்தைக் கற்பிக்கும்?

கூடாததைக் கூட்டுவிக்கிறதே மாயைக்குச் சுபாவமாகையினால், சகலத்தையும் கற்பிக்கும். உண்மையிலே பந்தம் முக்தி இல்லை.

99. ஈதெல்லாம் சுபாவத்திலேயில்லாவிட்டால் பின்னை எப்படி உண்டாம்?

மாயையாகிற காமதேனுவின் இரண்டு கன்றுகளாகிய சீவனும் ஈசுரனும் மாயையால் கறக்கப்படும் பாலாகிய உலகத் தோற்றத்தை வேண்டியபடி சாப்பிடட்டும். ஆனால் உண்மை மாத்திரம் அத்வைதம் தான் என்பது நிச்சயம்.

100. இப்படிப் பேதமெல்லாம் மித்தை என்றறிந்து, பரமாத்மா ஒருவரே உள்ளபொருள் என்று அறிந்திருக்கிற ஞானிகளும் விவகாரம் பண்ணக் கண்டோம். அது கூடுமோ?

முன் வெளிப் பிரபஞ்சத்தைச் சத்தியமாகக் கண்டு விவகாரம் செய்தது போலல்லாமல், மித்தை என்று கண்டு விவகரிப்பார்கள்.

101. அஞ்ஞானி எப்படி விவகரிப்பன்? ஞாநி எப்படி விவகரிப்பன்?

இகபர வியாபாரங்களெல்லாம் உண்மையென்றும் அத்துவிதம் இல்லை என்றும் அஞ்ஞானி விவகரிப்பன். அத்துவிதம் மாத்திரம் உண்மைப் பொருள் என்றும் மற்றுளவெல்லாம் மாயாமயம் என்று கண்டு ஞாநி விவகரிப்பன். அந்தந்த நிர்ணயப் படிக்குப்பலன் வரும்.

102. அத்துவிதம் பிரத்யக்ஷமாமோ?

நீ ஞானவடிவாய் இருக்கிறாயா இல்லையா.

103. சம்பூரணமாகத் தோற்றவில்லையே?

அது துவிதத்திலும் அப்படித்தானே. (ஸ்தாலி புலாக) பானைச் சோற்றுக்கு ஒரு சோறு நியாயப்படி அத்துவிதமும் கொஞ்சம் தெரிந்தாலும் அவ்வளவுடன் முழுதும் தெரிந்ததாக தீர்மானம் ஏன் பண்ணக் கூடாது.

104. துவிதம் அழிந்தல்லவோ அத்துவிதம் சித்திக்கும்?

துவிதம் இருக்கையிலே துவிதத்தைக் காண்கிற அறிவாகத் தானே அத்துவிதம் சித்திக்கும்.

105. ஞானம் வந்தும் இரண்டும் நிற்கிறது தானோ?

அவற்றை அறிந்து சாட்சி மாத்திரமாக மிஞ்சுகிறபடியினாலே துவிதம் மாயாமயம், அத்துவிதம் நித்யம்.

106. திரும்பவும் ஒரு வேளையில் துவிதம் சத்தயமாய்த் தோன்றினால் எப்படி?

மீண்டும் அத்துவிதத்தைப் பரிசீலனம் பண்ண வேண்டும்.

107. எத்தனை காலம் பரிசீலனம் பண்ண வேண்டும்?

இந்த துக்கத்தைத் துவிதத்திலே பண்ணு. அத்துவிதத்திலே பண்ண வேண்டாம்.

பஞ்சதசி

108. பசி தாகம் முதலானது முன் போலவே காணப்படுகிறதே?

எனக்கு என்கிற அகங்காரிக்கே அல்லாமல் சாட்சியாகிற நமக்கில்லை என்று பகுத்தறிய வேண்டும்.

109. அத்யாசத்தினாலே சித்ரூபத்திலும் காணப்படுகிறதே என்றால்?

இன்று முதல் அத்யாசத்தைக் கைவிட்டு, ஆத்மாவிலிருந்து அகங்காரங்களை பிரித்துப் பார்ப்பதையே செய்துவரவேண்டும்.

110. அத்தியாசம் சீக்கிரம் வருகிறது. விவேகம் ஏன் வரவில்லை?

விவேகத்தையும் திடப்படுத்தினால் ஏன் சீக்கிரம் வராது.

111. துவிதம் மித்தையாய் போகிறாற் போல, அத்துவிதமும் மித்தையாய்ப் போகாதோ?

இன்னபடி வரும் இன்னபடி போகும் என்று நிர்ணயப்படாமல் மாயாமயமாயிருக்கிறது துவிதமோ, அத்துவிதமோ என உன் அனுபவத்தைப் பார்.

112. துவிதம் போல் அத்துவிதமும் அநித்யமாகாதோ?

துவிதம் (சரீராதிபிரபஞ்சம்) முன்னிலை என்கிறதை அத்துவிதம் கண்டாற் போல, அத்துவிதம் முன்னிலை என்கிறதை ஒன்றினாலும் காணப் படாதபடியினால், அத்துவிதமே நித்ய அபரோக்ஷம்.

113. இப்படியறிந்துஞ் சில பேர்கள் திருப்தி அடைந்து கவலை கெட்டுச் சந்தோஷியாமல் இருப்பானேன்?

சாஸ்திர அர்த்தத்தைத் தனதாக்கிக் கொண்டு விசேஷித்து நம்பாமல், மேலெழுந்த புத்தியினால் நன்கு கவனித்துப் பார்த்ததில்லை.

114. இவனுடைய இருதயத்தில் எந்த ஆசைகளெல்லாம் இருக்கின்றனவோ அவை எல்லாம் எப்பொழுது விடப்படுகிறதோ, அன்றைக்கு இவன் முத்தன் என்று வேதம் சொல்லுகிறது. இவ்வாறு ஞாநிகளிடத்தில் காணோம் ஏன்?

அகங்காரத்தையும், அறிவு சொரூபமாயிருக்கும் ஆத்மாவையும் ஒன்றாகக் கண்டு வருகிற ஆசை ஆகாது என்று அந்த வேதத்திற்கு அர்த்தம். இத்தகைய அகங்கார முடிச்சை (அகங்காரம் + அறிவு) விட்டு ஆத்மாவை வேறாகக் கண்டு கொண்டிருக்கிறவனுக்கு, அகங்காரத்தி னிடமாகக் கோடி ஆசை வந்தாலும் எவ்விதக் கெடுதலும் கிடையாது.

115. அகங்கார முடிச்சு விட்டுப் போன பின்பு, அகங்காரத்தினிடமாய் ஆசை வரலாமோ?

பிராரத்த பலத்தினால் வரும்.

116. ஞாநிக்கும், அஞ்ஞாநிக்கும் பிராரத்த பலம் சமமானால் இரண்டு பேருக்கும் பேதம் எப்படி?

இவன் படித்தவன், இவன் படியாதவன் என்கிறதை பரீட்சையினாலே கண்டு போகிறதே அல்லாமல், அவனுடைய உருவம் கொண்டு காணமுடியாதது போல, அகங்காரக் கிரந்தி (முடிச்சு) விட்டுப் போனது

கொண்டு ஞாநி என்று அறிகிறதேயல்லாமல், பிராரத்த சேட்டையினால் பேதம் தெரியாது.

117. அகங்காரக் கிரந்தி போகாதிருந்தாலும், ஆத்மாவுக்கு சம்சாரம் இல்லை அல்லவா?

இப்படி அறிந்த போதே நீயே கிருதார்த்தன் (செய்ய வேண்டிய தெல்லாம் செய்து முடித்தவன் – ஞாநி)

118. அகங்காரக் கிரந்தி விட்டுப் போனவனுக்கு அடையாளம் ஏது?

தனக்கு ஏற்பட்டவைகளை வெறுக்கிறதில்லை. தன்னிடமிருந்து போனவைகளை வேண்டுவதில்லை. உதாசீனன் போல் இருந்து கொண்டிருக்கிறவன் என்ற கீதா வசனப்படியே இருப்பன்.

119. ஆனால் உதாசீனம் பண்ணுகிறதே ஞானம் தானா?

கைகால் பலமிழந்தால் கர்மத்தில் உதாசீனம் வரும். இப்படி வியாதியே தத்துவ ஞானமென்றால் உன்னுடைய அறிவு மிகவும் தெளிவு (அதாவது அவர்கள் எதை வேண்டுமானாலும் கூசாமல் சொல்லத் தலைப் படுவார்கள் என்று பரிகாசம் செய்கிறார்).

120. இப்படிப் பரிகாசம் பண்ணத் தேவையில்லை. சடபரதர் முதலானபேர் உதாசீனமாயிருந்தது புராணத்தில் கேட்டோமே?

பெண்கள், வாகனங்களோடு கூடி விளையாடினாலும் ஞாநி சரீரத்தைத் தான் என்று எண்ணான் என்று சாமவேதம் சொல்கிறது.

121. சடபரதர் காட்டிற்குப் போனது ஞான காரணம் அல்லவா?

அஞ்ஞானிகளுடைய சங்கத்தை துறந்ததே அல்லாமல், கல் மண் போல் ஒன்றும் செய்யாமல் இருக்கவில்லை.

122. இப்படி ஒவ்வொரு குணங்களைப் பிடித்து, இதுவே ஞானமென்று உலகத்தார் சொல்லுவான் ஏன்?

சாஸ்திர நிச்சயம் அறியாத மூடர்கள் ஒன்று கிடக்க ஒன்று சொல்லுவார்கள். அறிந்தவன் அப்படிச் சொல்லான்.

123. சாஸ்திர சித்தாந்தம் தான் ஏது?

சகல சன்மார்க்கமும் கூடி வைராக்கியம், உபரதி, ஞானம் என்று மூன்று விதமாயிருக்கும். சிற்சில மனிதர்களிடத்தில் இம்மூன்றும் சேர்ந்தும், சிலரிடத்தில் இரண்டும், பலரிடத்தில் ஒன்றும் இருக்கும். இவைகளுக்குள்ள வேற்றுமைகளைப் பகுத்தறியாத அவிவேகிகள் எல்லாவற்றையும் ஞானமென்று தடுமாறிச் சொல்வான். பகுத்தறிந்தவன் அப்படிச் சொல்லான்.

124. வைராக்கியம் முதலான மூவகைக்கும் ஏது (காரணம்) முதலான ஐந்து நிலைகள் யாவை?

வைராக்கியத்திற்கு ஏது:– பொருள்களிலே குற்றத்தைப் பார்ப்பது. நிலையாவது:– விட்டுவிட நினைப்பது. காரியம்:– திரும்ப ஆசை வராமலிருப்பது. எல்லை:– பிரமலோக பரியந்தம் துரும்பாய் எண்ணுதல். பலம்:– பிரமலோகம்.

உபரதிக்கு ஏது:- அஷ்டாங்க யோகம். சொரூபம்:- மனதை அடக்குதல். காரியம்:- எல்லா விவகாரமும் அற்றுப் போதல். எல்லை:- சுழுத்தியைப்போலச் சரீரத்தை மறத்தல். பலன்:- பிரமலோக சமீபம்.

ஞானத்திற்கு ஏது:- சிரவணம் மனனம் நிதித்யாசனம். சொரூபம்:- ஆத்மா சத்தியம், உலகு பொய் என்று பிரித்தறிதல். காரியம்:- திரும்ப அகங்காரக் கிரந்தி வராதிருத்தல். எல்லை:- முன் தேகம் நான் என்கிற நிச்சயம் போல் பிர்மமே தான் என்ற திடம். பலன்:- மோட்சம்.

125. இந்த மூன்றும் ஒருவரிடத்தில் இருக்க வேண்டாமோ?

இந்த மூன்றும் கூடியிருந்தால் திட சௌக்யம் உண்டு என்கிறதேயல்லாமல் மோட்சத்திற்கு ஞானம் மாத்திரம் போதும். கர்மவசத்தினால் சிலரிடத்தில் கூடியிருக்கும். சிலரிடத்தில் பிரிந்திருக்கும். கலங்கத் தேவையில்லை.

126. இப்படிக் கலங்காமல் நின்றவனுக்குச் செய்காரியம் ஏது?

சின்மாத்திரமாயிருக்கிற தன்னிடத்திலே, மாயை கற்பித்த உலகமாகிற சித்திரத்தை விருப்பு வெறுப்பின்றி பாவித்துச் சதாகாலமும் சின்மாத்ரமாகவே இருப்பன் (காண்பன்).

இந்த சித்திர தீபிகையை தினந்தோறும் படிப்பவன், சிந்திப்பவன், உலகைச் சித்திரமாகவே காண்பன் அல்லாமல், முன்போல உண்மை என்று மயங்கான்.

## 2. திருப்தி தீபம்

சகல உலகிற்கும் சகல வேதார்த்தத்தை வெளிபண்ணினாலும், மோட்சத்தை வாரிவழங்குகிற ஸ்ரீ வித்யரண்ய சுவாமிகளுக்கு வணக்கம்.

சீவனானவன், ஆத்மாவை இவரே தான் என்று அறிந்தாற், பின்னை யாருக்குப் போகநிமித்தம், எந்தப் போகத்தை வேண்டிச் சரீரத்தை ஒட்டிய துன்பத்தை அடைவன், என்று சொல்லும் பிருகத் ஆரண்ய உபநிடதத்திற்கு அர்த்தம் கூறுதல்.

1. இந்த உபநிடதம் என்னத்தைச் சொல்லுகிறது?

சித்திர தீபிகையிலே சொன்னபடி சகத் என்றும் உண்மையான சின்மாத்திரமே தான் என்று திடப்பட்ட சீவன் முத்தனுடை திருப்தியைச் சொல்லுகிறது.

2. இதில் சீவனானவன் என்ற சொல்லுக்கு அர்த்தம் யாது?

உண்மையிலேயே சித்தைத் தவிர வேறு பொருள் இல்லாவிட்டாலும், விவகாரத்திலே மாயா கற்பிதமாகச் சீவ ஈசுரர்கள் என்ற இரண்டு பேர்கள் உண்டு. இவரில் சிருஷ்டி முதலானவை பண்ணுகிறவன் ஈசுரன். சாக்கிரம் முதல் மோட்சம் வரையிலுள்ள சம்சாரத்தை நிர்வகிப்பவன் சீவன். இதில் அதிட்டான சைதன்னியத்துடனே கூடிய சீவனைப் புருஷன் என்று சொல்லுகிறது.

3. அதிகாரியை சொல்லுகின்ற புருஷ சத்தத்திற்கு அதிட்டானத்தையும் கூட்டி அர்த்தமாக்கலாமோ?

அதிட்டானத்தை தவிர ஆரோபத்திற்கு(கற்பனைக்கு) வேறு சொரூபமில்லாத படியினாலும், விவகாரத்தில் இருவரும் ஒருவராகவே தோற்றுகையினாலும், முத்தியிலே ஆரோபமும் அதிட்டான மாத்திரமாய் போகிற படியினாலும், இரண்டையும் கூட்டிச் சொன்னோம்.

4. இந்த புருஷன் அதிட்டானப் பிரதானமாய் எப்படி பேசுவான். ஆரோபப் பிரதானமாய் எப்படி பேசுவான்?

அதிஷ்டானம், ஆரோபத்தில் அடங்கியிருக்கும் காலத்தில் ஒருமைப் பாடாக நான் சம்சாரி என்றே பேசுவான். ஆரோபத்தைத் தள்ளி அதிஷ்டானமே தானாய்க்காணும் போது நான் அசங்கன், சின்மாத்திரம் என்றே பேசுவான்.

5. நான் அசங்கன் என்று பேசும்பொழுது அசங்கனிடத்தில் அகங்காரம் கூடுமோ?

முக்கிய அகங்காரம் ஒன்றும். அமுக்கிய அகங்காரம் இரண்டு வகையுமாக அகங்காரம் மூன்றுண்டு. அதிட்டான அகங்காரங்களைப் பகுத்துக் காணத மூடர் ஒருமைப்பாடாக நான் வந்தேன் போனேன் என்று சிதாபாசனாகப் பேசுவது முக்கிய அகங்காரமாம். லஷிணா

விருத்தியினாலே பகுத்துக் கண்ட ஞாநி, நான் அசங்கன் சின்மாத்திர மென்று பேசுகிறதும், விவகாரத்தில் நான் வந்தேன் போனேன் என்று சிதாபாசனாகப் பேசுகிறதும் அழுக்கிய அகங்காரமாம். ஆதலின் இலக்கணையால் அகம் சத்தார்த்தமாக நான் என்னும் உணர்ச்சிக்கு இடமாதலால் அசங்கன் நானாகிறேன் என்னும் ஞானமும் கூடும்.

6. அஞ்ஞானி, ஞானி என்னும் இருவரும் சிதாபாசரல்லவோ. இவர்களில் ஞானி தனக்கன்யமாயிருக்கிற சாட்சியை நான் என்னக்கூடுமோ?

முக ஆபாசத்திற்கு எப்படியானால் கண்ணாடியிலே பிரதிவிம்பிக்கிற முகம் சுபாவமல்ல. அதைபார்க்கிற முகமே சுபாவமானாற் போலச் சிதாபாசனுக்குச் சிதாபாசனா யிருக்கிற தான் மித்தையான படியினால் சாட்சியாக மிஞ்சுகிற தான் சுபாவமான படியினாலும் தன்னுடைய சுபாவ சைதன்னியத்தை நான் என்னக்கூடும்.

7. சிதாபாசனாயிருக்கிற சிதாபாசன் மித்தையானால் அவன் நினைக்கிற ஞானமும் மித்தையாக வேண்டும். அது சம்சாரத்தை எவ்வாறு போக்கும்?

இந்த ஞானம் மித்தையானாலும், இதனாற் சிதாபாசனுக்கு, முன்னிருந்த சம்சாரம் பொய்யானபடியினாலே அதைப் போக்குவதற்கு இந்த ஞானமே போதும்.

8. சீவசப்தத்திற்கு அர்த்தம் கேட்டோம். இனி ஆத்மாவை இவரே நான் என்று அறிகிறது எப்படி?

சந்தேக விபரீதம் அறத் தேகமே நான் என்று அறிந்தாற்போல சாட்சியே தான் என்று அறிகிற திடஞானமே இவரே தான் என்கிறது.

9. இவரே தான் என்கிற சொல் பிரத்யக்ஷத்தை அல்லவா சொல்கிறது. அவர் எப்படி பரோட்சமாயிருக்ககூடும்?

பத்தாமவனுக்குத் தன்னிடத்திலே தானே அஞ்ஞானம் ஆவரணம், விட்சேபம் பரோட்சம், அபரோட்சம், துக்க நிவிருத்தி, தடையற்ற ஆனந்த மென்கிற ஏழு நிலைகளையும் கண்டாற்போல ஆத்மாவினிடத்திலும் ஏழு அவஸ்தை கூடும்.

10. தசமனிடத்திலும் ஆத்மாவானிடத்திலும் இந்த ஏழு அவஸ்தையும் அனுபவமாய்க் காட்டவேண்டும்.

தசமன், ஒன்பது பேரையும் எண்ணினவுடனே பத்தாமவனைக் காணாமல் திடுக்கிட்டுக் கலங்கினதே, **அஞ்ஞானம்–1.**

பத்தாமவனைக் காணோம். அவன் எங்கே போனானோ என்கிற துக்கம். **ஆவரணம்(மறைப்பு)–2.**

ஆற்றோடே போனான் என்று அழுகிறது **விட்சேபம்–3.**

ஆப்தன் உபதேசத்தினால் சுவர்க்காதி உலகம் போலப் பத்தாமவன் இருக்கிறான் என்கிறது **பரோட்சஞானம்–4.**

நீயே பத்தாமவன் என்று ஆப்தன் எண்ணிக்காட்ட தன்னை அறிந்ததே **அபரோக்ஷஞானம்–5.**

முன் இறந்தான் என்று அழுத அழுகை போனதே **துக்கநிவிருத்தி–6.** பத்தாமவனை தானாக கண்ட சந்தோசமே **தடையற்ற ஆனந்தம்–7.**

இப்படிப் போல ஆத்மாவினிடத்திலும் காட்டுவோம்: சீவன் அநாதி சம்சாரத்தில் அழுந்தித் தன்னுடைய சுபாவத்தை விசாரியாமல் இருப்பதே (1) அஞ்ஞானம். விசாரித்து ஆத்மா உண்டானால் தோற்றாரோ, இல்லை என்கிறதே (2) ஆவரணம். மூவகைச் சரீரங்களையும் சிதாபாசனையும் தானாகக் கண்டதே (3) விட்சேபம். நெறியாள்ன் உபதேசத்தினால் பிரம்மம் உண்டு என்று அறிகிறதே (4) பரோட்ச ஞானம் வேதாந்த விசாரத்தினால் அந்த பிரம்மம் நாம் என்று அறிகிறதே (5) அபரோட்ச ஞானம். நான் கர்த்தா, போக்தா அல்ல என்று போனதே (6) துக்க நிவிர்த்தி. செய்யத்தக்கதெல்லாம் செய்து முடிந்தது. அடைய வேண்டியதெல்லாம் அடைந்து முடிந்தது என்கிற சந்தோஷமே (7) தடையற்ற ஆனந்தம். இவ்வாறு சிசாபாசனுக்கும் ஏழு அவஸ்தைகள் உண்டு.

11. இதிலே பந்தப்படுத்துகிற மோட்சத்தைக்கொடுக்கும் அவஸ்தை ஏது?

முந்தின மூன்றும் பந்தத்தை கொடுக்கும். பிந்தின நான்கும் மோட்சத்தைப் கொடுக்கும்.

12. முந்தின மூன்றிற்குள் எந்தெந்த அவஸ்தை எந்தெந்த கேடு விளைவிக்கும்?

ஆத்மாவை நான் அறியேன் என்கின்ற உதாசீனமே அஞ்ஞானத்தில் வந்த கேடு நேர்வழியன்னியில் விசாரித்து கூடஸ்தன் இருந்தால் தோற்றாரோ, இல்லை என்கிற விபரீத வார்த்தையே ஆவரணத்தில் வந்தகேடு, இகபரத்தைக் குறித்துச் செய் தொழிலெல்லாம் நம்முடையது தானே, புண்ணியபாவமும் நம்மை விடாதென்கிற நடுக்கமே விட்சேபத்தில் வந்தகேடு, இப்படி இந்த மூன்றும் கேடு விளைவிக்கும்.

13. அஞ்ஞானமும் ஆவரணமும் விட்சோபத்திற்கு முந்தினபடியினால் இந்த ஏழு அவஸ்தையும் சிதாபாசனுக்கு என்று சொல்லக்கூடாது விட்சேபம் காரியப்படுவதற்குமுன் காரணரூபமாய் பிரமத்தினிடத்தில் இருந்தது இல்லையா?

பிரம்மம் நிர்விகாரம், அதனிடத்திலே இருக்கும் என்று எண்ணக் கூடாது. சிதாபாசனிடமாய்த் தானே முந்தின இரண்டு அவஸ்தையும் வாசனா ரூபமாயிருந்தது. ஆகையினால் ஏழு அவஸ்தையும் சிதாபாசனுக்கே. ஆத்மாவுக்கு இல்லை.

14. பூர்வ ஆச்சாரியார்களெல்லாம் அஞ்ஞானத்திற்கு இருப்பிடம் சிதாபாசனென்று சொல்லாமல், பிரம்மம் என்று சொல்லி இருப்பதேன்?

ஆரோபத்திற்கு அதிஷ்டானம் பிரம்மம் ஆனபடியினால் பிரம்மத்தில் ஆரோபம் என்று சொன்னார்கள். நாம் அனுபவத்தினாலே எல்லாம் அவஸ்தையெல்லாம் சிதாபாசனுக்கு என்று சொன்னோம்.

**15.** இந்த ஏழு அவஸ்தையும் சிதாபாசனிடத்தில் அனுபவமாய்க் காட்ட வேண்டும்?

நான் சம்சாரி, நான் பரோட்சஞானி, நான் விக்ஞானி, நான் துக்கமற்றவன், நான் எல்லாம் செய்து முடித்தவன் என்கிற விட்சேப முதல் ஐந்து அவஸ்தையும் சிதாபாசனே அனுபவிக்கக் கண்டாற் போல, நான் அஞ்ஞானி என் பார்வைக்குப் பிரம்மம் இல்லை என்கிற முந்தின இரண்டவஸ்தயும் சிதாபாசனே அனுபவிக்க அனுபவம் கண்டோம்.

**16.** கடைசி நாலவஸ்தையும் மோட்சம் கொடுக்கிறது எப்படி?

பரோக்ஷ ஞானத்தினால் ஆத்மா இல்லை என்ற மறைப்புக்கு காரணமாயிருக்கும் தன்மையும், அபரோட்க்ஷ ஞானத்தினால் தெரிய வில்லை என்ற ஆவரணத்திற்கு காரணமாயிருக்கும் தன்மை யும் மூல அஞ்ஞானத்துடனே நசித்த படியால் நாமே பிரம்மம் என்று வெட்ட வெளியாய்த் தோற்றுகையினால், ஆரோபிக்கப்பட்ட ஜீவத்வம் நஷ்டமானவுடனே நான் கர்த்தா முதலான சகல துக்கமும் விட்டுப்போம் சகல சம்சாரமும் நிவிர்த்தியானவுடனே நான் நித்யமுக்தன் என்கிற கம்பீரம் கொண்டு தடையற்ற ஆனந்தம் வரும் இப்படி நாலவஸ்தையும் மோட்சம் கொடுக்கும்.

**17.** பிரம்மம் சுயம்பிரகாசமானால் பரோட்ச ஞானவிஷயமாய் எப்படி இருந்தது?

பிரம்மம் உண்டென்று பிரகாசிக்கையினால் குற்றமில்லை.

**18.** சுயம்பிரகாசமானால் தானே விளங்கவேண்டுமேயல்லாமல் பிரம்மம் உண்டு என்று விளங்களாவது ஏது? (ஆகையினால் அந்த பரோட்ச ஞானம் பிரமானமல்ல)

முந்தின நிர்ணயத்திற்கு அழிவு வந்தது கொண்டும், கண்ணார காணாதது கொண்டும், தாறுமாராய் அறிந்தது கொண்டும், ஏகதேசமாய் கண்டது கொண்டும், அப்பிரமாணம் என்றால் இந்த நாலு வகையிலே ஒன்றாகிலும் கண்டு அப்பிரமாணம் என்று சொல்லவேண்டும் ஆகையினால் பரோட்ச ஞானத்திற்கு இந்த நான்கு வகையினாலும் குற்றமில்லை.

**19.** இந்த நான்கு வகை குற்றமும் பரோட்ச ஞானத்திற்கு இல்லை என்கிறது எப்படி?

1) பிரம்மமில்லை என்று ஒரு பிராமணமும் காணதபடியினால், முந்தின நிர்ணயத்திற்கு அழிவு இல்லை. 2) கண்ணாரக் காணாதது கொண்டு பரோட்ச ஞானம், அப்பிரமாணம் என்றால், சுவர்க்காதி ஞானமும் அப்பிரமாணமாக வேண்டும். 3) பிரத்யக்ஷமாகப் போகிறதைப் பரோட் சமென்றது கொண்டு பிராந்தி என்னக்கூடாது. 4) ஏகதேசம் கண்டது கொண்டு, அப்பிரமாணம் என்றால், கடஞானம் முதலாகப் பிராந்தியாக வேண்டும். ஆகையினால் பரோட்ச ஞானத்திற்கு குற்றமில்லை.

20. அம்சம்(தனித்தன்மை)அற்ற ஆத்மாவினிடத்திலே, அம்ச கற்பனை எப்படி வந்தது?

தன்னைத் தொட்டு இல்லாவிட்டாலும் தள்ளப் பட்ட உபாதியைத் தொட்டு உண்டு.

21. உபாதியைத் தொட்டு எப்படி உண்டு?

பரோட்ச ஞானத்தினால் இல்லை என்ற அம்சம் தள்ளப்பட்டது. பிரத்யக்ஷ ஞானத்தினால் தெறியவில்லை என்ற மறைப்புக்கு காரணம் தள்ளப்பட்டது.

22. பிரத்யக்ஷ ஞானத்திற்கு கேடு சம்பவிக்காதா?

பத்தாமவன் தானே என்று கண்டபிற்பாடு, முன்கண்ட ஒன்பது பேருக்குள் இல்லை என்று கண்டாற் போல, ஆத்மாவே பிரம்மம் என்று கண்ட பின்பு முன்னதாக வழங்கின அகங்காரத்தைத் தான் அல்ல என்று தள்ளுமேயல்லாமல், நான் பிரம்மம் என்ற பிரத்யட்ச ஞானத்தைக் கெடுக்கமாட்டாது.

23. இப்படி பரோட்ச ஞானம் சாஸ்திரம் அல்லது குருவின் மூலம் வருமென்றும், பின் மகாவாக்கிய விசாரத்தினால் பிரத்யட்ச ஞானம் வரும் என்றும் எங்கே கூறியிருக்கிறது?

உத்தாலகர் சுவேதகேதுவுக்கு முந்திப் பரோட்ச ஞானம் சொல்லிப் பின்பு ஒன்பதாந்தரம், பிரத்யட்ச ஞானம் சொன்னாற் என்று சாம வேதத்திலும், வருணன் பிருகுவுக்கு முந்தி பரோட்ச ஞானம் சொல்லி பின்பு ஐந்தாந்தரத்திலே பிரத்யட்ச ஞானம் சொன்னார், என்று யசுர் வேதத்திலும், தேவேந்திரன் முந்தி அவாந்தர வாக்கியத்தினால் பிரம்மத்தைப் பரோட்சமாய் அறிந்து பின் அபரோட்ச ஞானத்தை அறிந்தானென்று ரிக் வேதத்திலும், இந்தப்படி ஆதிசங்கரரும் வாக்கிய விருத்தியிலே கூறியிருக்கின்றார்.

24. ஆதிசங்கரர் வாக்கிய விருத்தியிலே எவ்வாறு கூறியிருக்கிறார்?

அகங்காரமும் கூடஸ்தரும் தொம்(நீ) என்ற பதத்திற்கு அர்த்தம் என்றும், பரோட்சமாய் மாயாஉபாதி உடைத்தாயிருக்கிற உலகுக்கு காரண சைதன்னியமும் (ஈசுரனும்) பிரம்மமும் தத்(அது) என்ற பதத்திற்கு அர்த்தமென்றும் கூறி பின், இவ்விரண்டும் விரோதமாவதால், விட்டும் விடாத இலக்கணையினால், அவனே இவன், இவனே அவன் என்கிற குறியைப்போலக் கூடஸ்தரே பிரம்மம், பிரம்மமே கூடஸ்தர் என்று அறிந்த உடனே, இந்த நாள் வரைக்கும் நாம் பிரம்மமல்ல என்கிற புத்தியும், சகத் காரண ஈசுர சைதன்னியம் பரோட்சம் என்ற புத்தியும் இன்னவிடம் என்று காணாமற்போம். ஆகையினால் பிரத்யட்ச ஞானத்திற்கு மகாவாக்கிய விசாரமே காரணம் என்று சொல்லியிருக்கின்றார்.

25. வாக்கியத்தினால் பிறந்த அறிவெல்லாம் பரோட்சமே அல்லாமற்

எவ்வாறு பிரத்யட்சமாகும்?

வட்டிக்கு ஆசைப்பட்டு முதலும் இழந்தான் என்கிற சொல்போல, பிரம்மம் ஆகவேண்டும் என்றிருந்த சீவனுக்குச் சுயம் சித்தமாக இருந்த பிரத்யட்சமும்(பிரம்மத்தன்மையும்) போய்விடும் என்கிறது வெகு ஆச்சர்யம்(தவறு). நீயே தசமன் என்கிற செல்லும் அவனைப் பிரத்யட் சமாய்க் காட்டவில்லையோ.

26. அந்த உபாதியிருக்கையினாலே சீவனை நேரில் காணலாம் உபாதியற்ற பிரம்மம் நேரில் தெரியாதோ?

இரும்பு பொன் என்கிறது கொண்டு விளங்கு என்கிறது நீங்காதது போல, அந்தக்கரண கூட்டுறவே சீவ உபாதியானாற் போல அதனை தவிர்கிறதே பிர்ம உபாதியாம்.

27. நான் என்கிறது முற்றுந் தள்ளப்பட்டபின், நான் பிரம்மம் என்கிற ஞானம் வரக்கூடுமோ?

நான் என்கிறது முற்றுந் தள்ளப்படாமல் உபாதி மாத்திரம் தள்ளப் பட்டு சைதன்னியம் தள்ளப் படாதபடியினால், நான் பிரம்மம் என்கிற அறிவு வரலாம்.

28. சாட்சி சுயம் பிரகாசமானால் விருத்திக்கு விளங்கக்கூடாது கூடுமென்றால் பிரம்மம் விருத்தியில் சிதாபாசனாலும் அறியப்பட்டுச் சடம் என்ற நிலை அல்லவா?

குடத்தைப் பார்க்க விளக்கும் கண்ணும் வேண்டும், விளக்கை மாத்திரம் பார்ப்பதற்குக் கண் மாத்திரம் போதும் போல, அப்பிரகாசமான பொருளை அறியுமிடத்தில் அப்பொருளைப்பற்றி அறி யாமையை நீக்க விருத்தியும், அதனை அறியச் சிதாபாசனும் வேண்டும். சுயம்பிரகாசமான பிரம்மத்தை அறியுமிடத்தில் அஞ்ஞானத்தைப் போக்க விருத்தி ஒன்றே போதும், சிதாபாசாந்த வெளிச்சம் தேவையில்லை, இருந்தாலும் வெய்யிலில் விளக்குப்போல குன்றி, பிரம்மத்தில் லயமாய்ப் போவான். புத்தி விருத்தி வியாப்தியுண்டு, பல வியாப்தியில்லை யென்று வேதம் சொல்கிறது. இந்த அபரோக்ஷ ஞானமே இவரே நான் என்கிற வேதத்திற்கு அர்த்தம்.

29. ஆதிசங்கரர் பலகாலும் சிரவணம் பண்ணச் சொல்லி விதித் திருக்கிறபடியினாற் பிரத்யக்ஷஞானம் திடமல்லவோ?

வேத சாகைகளின் வேற்றுமையாலும், அவற்றை அனுஷ்டிக்கி றவனுடைய ஆசைகளின் வேற்றுமையாலும், கர்மா வெவ்வேறு விதமாய் சொல்லபட்டிருக்கிறாற்போல ஞான விஷயத்திலும் கூட சந்தேகம், விபரீதம் கூடாது என்ற காரணத்தினால் சிரவணம், மனனம் பண்ணச் சொன்னார்.

30. விபரீத பாவனை யாது?

தகப்பனிடத்தில் விரோதபுத்தி காண்பதுபோலத் தேகமே நான்,

உலகு சத்யம் என்பது.

31. விபரீத பாவனைக்கு காரணம் யாது?

பல ஜன்மங்களில் பிடித்துச் செய்த பிறவி வாசனையே காரணம்.

32. இவ்விபரீத பாவனை எதனாற் போம்?

நானே சத்தியமாயிருக்கிற பிரம்மம் தேகாதிபிரபஞ்சம் மித்யை என்கிற தத்துவ ஞானத்தால் போம்.

33. தத்துவபாவனை பண்ணுகிற வழியேது?

பிரமத்தைப் பலகாலும் தனியாயிருந்து சிந்தனை செய்வதும், ஒரு முமூட்சு(மோட்ச விரும்பி)வரில் அவனுக்கு அதைத்தானே போதிப்பதும், சமமானவர் வரில் ஒருவருக்கு ஒருவர் அதையே போதிப்பதுமான இதைபிரம்ம அப்பியாசம் என்பர்.

34. எந்நேரமும் இதே வேலையாயிருந்தால் குடும்ப காரியம் எவ்வாறு நடைபெறும்?

தத்துவ விசார்ம் பண்ணுகிறவனுடை குடும்ப காரியங்களெல்லாம் ஈசுரனே கவனித்துகொள்வான்.

35. தத்துவ பாவனை எதனால் கூடும்?

ஒரு முனைப்பட்ட மனத்தினால் கூடும்.

36. அந்த ஒரு முனைப்பட்ட மனம் எதனால்? ஈசுர உபாசனையால்.

37. மந்திரசெபம் போலவும் மூர்த்தி தியானம் போலவும் தத்துவபாவனை பண்ணுகிறதற்கு நியமம் உண்டோ?

மந்திரசெபம் முதலானவைகட்கு தெறியக்கூடிய பலன் இல்லாதபடியினால் நியமமும் , நியமம் தப்பினால் அபாயம் உண்டு. உணவு உண்டால் பசியைபோக்குகிறார்போல தத்துவ பாவனையும் விபரீத பாவனையை போக்குகிறது. தெறியக்கூடிய பலன் என்பதால் நியமம் தேவையில்லை.

38. பிரம்ம அப்யாசம் பலவிதமாகச் சொன்னபோதே சிரமமல்லவோ?

சஞ்சலமாயிருக்கிற மனதிற்கு நியமம் பூண்ட செபமும், வேறொன்றைச் சற்றே நினைத்தாலும் கெட்டுப்போகின்ற மூர்த்தி தியானமுமே சிரமமல்லாமல், கூத்துபார்க்கிறது போல அதிக உதாரணங் களோடு கூடிய உற்சாகமூட்டும் கதைகளோடு கூடியிருக்கிற பிர்ம அப்யாசம் சிரமமல்ல. மனதிற்கு விநோதமே.

39. மனது சஞ்சலம் என்பதற்கு பிரமாணம் எது?

தான் போனதே வழியாய்ச் சஞ்சலமே சுபாவமாயிருக்கிற மனதை நிறுத்துகிறது வாயுவை நிறுத்துகிறதற்குச் சரியென்கிற கீதாவசனமும், சமுத்திரத்தைக் குடித்தாலும், நெருப்பை விழுங்கினாலும், இமயமலையைப் பிடுங்கினாலும் கூடும். ஆனால் மனதை நிறுத்த முடியாது என்கிற வாசிட்டமும் பிரமாணம்.

40. இவ்வாறு சஞ்சலமாயிருக்கிற மனதிற்குச் சின்மாத்திரமே ஆத்மா

மற்றுளதெல்லாம் மித்யை என்கிற நிதித்யாசனமும் சிரமமல்லவா?

காவியம், தர்க்கம், வேளாண்மை முதலியவைகளிலே விழுந்த மனதிற்கே சிரமம்.

41. இப்படியானால் உணவு நித்திரை முதலியவைகளும் மனதிற்கு சஞ்சலமல்லவோ?

மிகச் சிறிய நேரத்தில் செய்யப்படுகிற உணவாதிகளால் பிரம்ம அப்யாசம் கொட்டுவிடாது. மிக அதிக அளவிலே நேரத்தைச் செலவிடுகிற தர்க்கம் முதலானவைகள் தத்துவ அப்யாசத்தைக் கெடுப்பதால் இவைகளே சஞ்சலம். ஆகையால் தர்க்கம் முதலியவற்றிற்கு இடம் கொடுக்கலாகாது.

42. இப்படி எல்லா வித்தையையும் விட்டாற் சீவிக்கப் போகிறது எப்படி?

இதர சாஸ்திரத்தை விடச்சொன்னால் சீவிக்கிறது எப்படி என்ற தவறான கருத்தை விட்டு விடு.

43. ஞானியாயிருக்கிற சனகன் அரசகாரியம் செய்யவில்லையோ?

திடஞானத்தினால் சனகன் சொற்ப அரசகாரியம் செய்தான். உனக்கும் திடஞானம் உண்டானால் பிராரத்த வசத்தினாற் தர்க்கபாடம் முதலானவைகளைச் செய்யலாம்.

44. இப்படி பிராரத்தம் என்று அநாசாரத்தை பண்ணலாமோ?

கர்மத்தை ஒருவராலும் மாற்றமுடியாது.

45. அப்படியானால் ஞாநிக்கும் அஞ்ஞாநிக்கும் பேதம் ஏது?

வழிப்போக்கர் இருவருக்கும் தாங்கள் செல்லவேண்டி ஊர் ஒன்றே, ஆனாலும் அவ்வூரைப்பற்றி அறிந்தவன் கவலையில்லாமல் செல்ல, அறியாதவன் துன்பப்பட்டுப் கொண்டு செல்வது போல ஞாநிக்கும் அஞ்ஞாநிக்கும் பிராரத்தம் சரியானாலும் ஞானி தான் அக் காரியங்களைச் செய்யவில்லை என்ற திட எண்ணத்துடன் இருப்பன். அஞ்ஞானி நான் செய்கிறேன். நான் அனுபவிக்கிறேன் என்றே துன்பப்படுவான்.

46. இவரே நான் என்கிற அபரோக்ஷ ஞானம் அறியப்பட்டது. யாருக்குப் போக நிமித்தமாய் எந்தப் போகத்தைக் குறித்துச் சரீர துக்கத்தை அனுபவிப்பன் என்ற வாக்கியத்திற்கு அர்த்தமேது?

நான் அதுவாய் இருக்கிறேன் என்ற. திடஞானம் வந்தவனுக்கு விஷயங்களும், அவற்றை அனுபவிப்பானுமில்லை.

47. பிராரத்தப் போகம் புசிக்கும் போது இந்த இருவகையுமில்லை என்கிறது எப்படி?

இந்திர சாலத்திற் கந்தர்வ நகரத்தைப் பார்க்கிறவன் ஒரு போகத்தையும் விரும்பாமல் சிரித்து விட்டுப் போகிறாற்போல, திட ஞானிக்கு உலகு பொய்யாய் போன படியினாலே, விஷயமும் புசிக்கிறவனுமில்லாமற் எண்ணையற்ற விளக்குபோல் ஆசை, எண்ணம் எல்லாம் அணைந்துபோகும்.

48. பிராரத்த போகத்தைப் புசித்தால் கேடு ஏது?

கேடு இல்லை. விசாரணை செய்பவன் மேல் பார்வைக்கு அழகாக இருக்கிற போகங்களிலே ஆசை வைப்பதில்லை. குற்றங்களை பார்ப்பதால் அவைகளை விலக்கிவிடவே நினைப்பான்.

**49. அனுபவிப்பதற்கிடமானவைகளில் என்ன என்ன குற்றம் இருக்கிறது?**

பணத்தைத் தேடுவதிலும், அதை காப்பாற்றுவதிலும் துக்கமே அல்லாமல் சுகம் இல்லை. மாமிசம், தோல், எலும்பு முதலானவைகளால் பூட்டப்பட்ட பெண்ணினுடைய சரீரத்தில் எதுதான் உயர்ந்த வஸ்துவாக இருக்கிறது. புசித்தாலும் விடத்தை தின்னாதது போல ஞானி இவற்றை விரும்பான். இத்தகைய குற்றமுள்ள விஷயங்களைப் பிராரத்த கர்மத்தால் அனுபவிக்க நேர்ந்தாலும் துக்கத்துடனே அனுபவிப்பனே அல்லாமல் சுகத்துடன் அனுபவியான்.

**50. அனுபவிப்பதில் துக்கம் ஏது?**

இன்னும் இந்தக் கர்மம் தொலையவில்லையே என்கிறதே துக்கம்.

**51. பிரம்ம ஞானம் இப்படி கிலேசமாயிற்றே?**

இங்கு இந்த துக்கம் சம்சாரத்தில் ஏற்படும் துக்கமல்ல. வைராக்யமே தான் இது.

**52. இந்த விரக்தி எதனால் வந்தது?**

உலகு மாயாமயம் என்கிற திடஞானத்தினால் வந்தது. ஆகையினால் ஞானி கிடைத்தது கொண்டு திருப்தி அடைவன். அஞ்ஞானிக்கு எத்தனைப் போகம் கிடைத்தாலும் திருப்தி அடையான்.

**53. அஞ்ஞானிக்குப் போகமெல்லாம் புசித்த பிற்பாடாகிலும் திருப்தி வாராதோ?**

மென்மேலும் நெய்யை விட்டதனால், அக்கினி அணைந்ததானால் அஞ்ஞானிக்கு போகத்தில் ஆசை அடங்கும். மற்றபடி வைராக்யத்தினால் மட்டுமே ஆசையடங்கும்.

**54. ஞானியும் கர்ம வசத்தினாற் கிடைக்கிற போகம் புசிக்கிற வழியே அழுந்திப் போகானோ?**

விரோதி அரசனால் பிடிபட்டுப் பின் விடுவிக்கப்பட்ட அரசனுக்கு ஒரு கிராமம் கிடைத்தது கொண்டு சுகப் படுவது போல ஞானியும் கிடைத்தது கொண்டு திருப்தி அடைவன். அறிந்து திருடுகிற திருட்டு திருட்டாகாதது போல பிராரத்த கர்மம் மேன்மேலும் ஆசை எண்ணங்களைத் தூண்டாது.

**55. இத்தகைய விவேகம் மனதில் உறுதியாக இருந்தால் பிராரத்த கர்மம் மேல் எழுந்துள்ள ஆசையை எப்படி உண்டாக்கும்?**

இச்சை, அனிச்சை, பரவிச்சை என்று பிராரத்தம் மூன்று வகையாய் இருக்கையினாலே ஆசையும் வரலாம்.

**56. இது ஆகாது என்கிறதிலே யாருக்காவது ஆசை வருமோ?**

அபத்தியம் பண்ணுகிறவனுக்கும், திருடுகிறவனுக்கும், அரச குலப் பெண்ணின் மீது ஆசை பண்ணுகிறவனுக்கும் தனக்கு ஆகாது(ஆபத்து) என்று அறிந்திருந்தும் ஆசை ஏன் வந்தது. ஆகையினால் இதை ஈசுரனாலும்

நீக்கமுடியாது. ஞானம் வந்தாலும் அவனவன் பிரகிருதி(குணம்) போகாது என்கிற கீதா வசனமே பிரமாணம்.

57. இக்கூற்று ஏழைகளுக்காக இரங்கிச் சொல்லப்பட்டுள்ளது. சாமர்த்தியம் உண்டானால் பிராரத்த கர்மத்தை மறிக்கலாம் அல்லவா?

அவ்வாறானால் நளன், ராமர், பாண்டவர்கள் துக்கப் பட காரணமே இல்லையே, ஈசுரனும் பஞ்ச காரியங்கள் செய்ய வேண்டிய காரணமேது. ஆகையால் ஈசுர ஆணையை(பிராரத்தத்தை) ஒருவராலும் நீக்கப்படக்கூடாது.

58. இச்சா பிராரத்த பலன் அறியப்பட்டது. இனி அனிச்சா பிராரத்தமாவது ஏது? பிரமாணந்தான் ஏது?

நாம் மனப்பூர்வமாக பண்ணக்கூடாது என்று இருக்கிற காரியத்தைக் கட்டாயத்தினாலே நம்மைக் கொண்டு பண்ணுவிக்கிறவன் யார்? நாம் வேண்டும் என்கிற காரியத்தை விலக்குவிக்கிறவன் யார்? என்று கேட்ட அர்ச்சுனனுக்கு, அவனவன் கர்மந்தானே செய்விக்கிறது என்ற கிருஷ்ணனின் வாக்கியமே பிரமாணம்.

59. இனி பரஇச்சா பிராரத்தமாவது எது?

தனக்கு இச்சை அனிச்சை இல்லாதிருந்தாலும் கூடியிருக்கிற வர்களைத் தொட்டு வருகிற சுக துக்கங்களே பரஇச்சா பிராரத்தம்.

60. இப்படியானால் எதை இச்சிக்கப் போகிறான் என்கிற வேதவசனம் ஆசையை மறுக்கச் சொல்வான் ஏன்?

இந்த வேதம் இச்சையை மறுக்கவில்லை. மற்று என்னவெனில் வறுத்த விதையைப் போல வாதிக்கிறது.

61. வாதிக்கிறதாவது ஏது?

வறுத்த விதை முளையாவிட்டாலும் உண்பதற்கு உதவுகிறாற் போல ஞானியினுடைய ஆசையும் அகப்பட்டதோடு திரும்பும் அல்லால் மென்மேலும் வினை கொண்டு காம சங்கற்பங்களைப் பண்ணாததே வாதை.

62. இவனுக்கு இப்படி விஷயத்திலே ஆர்வம் எதனால் உண்டாகவில்லை?

விஷயம் சத்தியம் என்கிற பிராந்தி இல்லாதபடியினால் இதிலே ஆர்வமில்லை.

63. விஷயப் பிராந்திக்கு குறிகள் ஏது?

நமக்கு இருக்கிற போகங்களெல்லாம் நாளுக்கு நாள் அதிகரிக்க வேண்டும், ஒருகாலும் மாறாத ஐஸ்வர்யமாக இருக்கவேண்டும். இடையிலே தடைகள் வாராதிருக்கவேண்டும் என்கிற தீவிர எண்ணம்.

64. இது எதனாற் போகும்?

வருகின்ற வினை வாரமற் இருக்க போகிறதில்லை. வாராத வினை ஒருக்காலும் வரப்போகிறதுமில்லை, என்கிற அறிவே அந்த தவறான கருத்தைத் தள்ளும்.

65. ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் பொதுவாய் இருக்கிற ஒரு விஷயம் ஒருத்தருக்கு பிராந்தியைக் கொடுப்பான் ஏன்? ஒருவருக்கு போதத்தைக்

கொடுப்பான் ஏன்?

தனக்கு அடைவில்லாததை அடையவேண்டும் என்று சங்கற்பித்த பிராந்தனுக்குத் துக்கத்தைக் கொடுக்கும். இது மாயாமயம் அல்லவா. உள்ளபடி முடியும் என்கிற ஞானிக்கு எண்ணத்தையே உண்டாக்காதது துக்கத்தை எப்படிக் கொடுக்கும்.

66. இந்த உலகை மாயாமயம் என்று பார்க்கிறது எப்படி? இதில் கவர்ச்சி எப்படி போகும்?

சொப்பனம் இந்திரஜாலம் போலவும் இன்னபடி வரும், இன்னபடி போகும் என்று தீர்மானிக்க முடியாமல் தோன்றி அழிந்து போவதால் மாயாமயம் என்று பார்க்க, அப்போது சொப்பனத்திற்கு சமானம் சாக்கிரம் (விழிப்பு) என்கிற நிலை உரைத்தால் இதில் கவர்ச்சி போகும்.

67. இந்த தத்துவ ஞானத்திற்குக் கண்டிப்பு எதிலே? பிராரத்த கர்மத்திற்குக் கண்டிப்பு எதிலே?

தத்துவ ஞானத்திற்கு 1) உலகு மாயக்கூத்து என்றும் 2) சொப்னத்திற்குச் சமானம் இந்த விழிப்பு (உலகு) என்பதிலே தான் கண்டிப்பு.

பிராரத்தத்திற்குச் சீவனுக்கு அவனுடைய புண்ணிய பாவங்களுக்குத் தக்கபடி சுக துக்கங்களைக் கொடுப்பதில் தான் கண்டிப்பு.(உலகு பொய்யாகும் பொழுது இந்தப்பிராரத்த அனுபவமும் பொய்யே).

68. பிராரத்த கர்மம் ஞானத்தைக் கெடாதோ?

சகத்தைச் சத்தியமாகத் தோற்றுவித்துப் பிராரத்த கர்மம் போகத்தைக் கொடுத்தால் அப்போது ஞானத்திற்கு விரோதம். உலகு மித்யை என்கிற ஞானத்தைக் கெடுக்காமல், சொப்பனம் இந்திரஜாலம் போலப் போக அனுபவங்கள் கொடுப்பதனால் பிராரத்தம் ஞானத்தை கெடுக்காது. மேலும் அனுபவிக்கிறதினால் மாத்திரம் சத்தியத் தன்மை ஏற்பட்டுவிடாது. கனவு விசயங்கள் பொய்யாக இருந்தாலும் அனுபவம் கொடுக்கும்.

69. ஞானந்தான் பிராரத்த கர்மாவைக் கெடுக்காதோ?

ஞானம் வந்தவுடனே, உலகம் இல்லாமல் செய்யக்கூடியதேயானால் பிராரத்த உலகைக்கெடுக்கும். அப்படிச்செய்யாமல் உலகு மாயாமயம் என்று அறிவதனால் உலகுக்கு மறைவு ஏற்படாது. ஆகவே ஞானத்தினால் பிராரத்த கர்மாவும், பிராரத்த கர்மாவினால் ஞானமும் கெட்டுப்போகாது. ஒன்று மற்றொன்றுக்கு விரோதியல்ல.

70. எந்தநிலையில் இவனுக்கு உலகு தன்மயமாயிருக்குமோ, அந்த நிலையில் யார், எதை, எதனால் பார்க்க முடியும்? எதை முகர முடியும்? என்கிற வேதம், ஞானம் வந்தவுடனே சகலமும் மறைந்து போகும் என்றல்லவா சொல்கிறது ஆகையினால் ஞானிக்குப் பிராரத்த போகம் எப்படிக்கூடும்?

இந்த வேதம், சுழுத்தி நிலையையும், விதேக கைவல்ய நிலையையும் கருத்தில் கொண்டு சொல்கிறது. சீவன் முத்தியைச்சொல்லவில்லை என்று வியாச சூத்திரம் சொல்லுகிறது.

71. ஞானம் வந்தவுடனே, உலகம் மறைந்துவிடும் என்பதே உண்மையல்லவா?

அப்படியானால் யாக்ஞவல்கியர் முதலானோருக்கு ஆசாரியராயிருக்கும் தன்மை ஏற்படாது. ஆனால் யாக்ஞவல்கியர் முதலானோர் ஞானம் வந்த பின்பு சாஸ்திரங்களை இயற்றிச் சீடர்களுக்கு உபதேசித்தது, உண்மை ஞானம் உலகை துடைக்காது.

72. அவர்களுக்கு உலகம் தோற்றாத நிருவிகற்ப சமாதியிலேதான் ஞானம் உண்டு?

இவ்வாறு பார்க்கில் உலகு தோன்றாத சுழுத்தியும் ஞானமாக வேண்டும்.

73. ஆம். சுழுத்தியிலே நான் பிர்மம் என்ற ஞானம் இல்லை தானே ?

ஆகையினாலே நான் பிர்மம் என்கிற சீவன் முத்தியே ஞானம். உலகு மறைகிறதல்ல.

74. இந்த இரண்டும் கூடியே ஞானம் ஆகாதோ?

அப்படியானால் உலகம் தோற்றாமைக்கும் பாதிஞானம் உள்ளவைகள் ஆகும். முழுமையான ஞானம் ஆகாது. உலகு தோற்றாமைக்கு ஆத்மஞானம் இல்லையே என்று தான் சொல்ல வேண்டி வரும்.

75. ஆகையினால் ஆத்ம விசாரமே ஞானம் அல்லாமல், உலகத்தோற்றம் மறைகிறது இல்லை அல்லவா?

ஆத்ம தத்வ அறிவு தான் ஞானம் என்ற உண்மை தெரிந்தபோதே செய்யவேண்டியதெல்லாம் செய்து முடித்தவன். அறியவேண்டியதெல்லாம் அறிந்து முடித்தவன் ஆகிறாய்.

76. பொல்லாத மனதை நிறுத்தத் தேவையில்லையோ?

விருப்பமுள்ள பொருளை மாயாமயம் என்று பார்க்கிறது தானே, மனதை நிறுத்துகிறது என்று அர்த்தம்.

77. ஆசை என்பது அறியாமைக்கு அடையாளம் என்று இருப்பதால் அறிஞனிடம் எவ்வாறு ஆசைகூடும்?

ஆசைப்பட்டாலும் அறிவற்றவனைப் போல் ஆசைப்படமாட்டான் என்று அர்த்தம் பண்ணிக் கொண்டால்தான் இருவகையான சாஸ்திர வாக்கியங்களுக்கும் விரோத மன்னியில் சரியான அர்த்தம் கூடும்.

78. எந்த போகத்தை இச்சிக்கப்போகிறான் என்ற சொல்லுக்கு அர்த்தம் இதுவரை விளங்கினாற் போல அனுபவிக்கிறவன் யார் என்று கூறவேண்டும்?

அனுபவிக்கிறவனே இல்லை.

79. அனுபவிக்கிறவன் எதனால் இல்லை?

அனுபவிப்பவன் 1) கூடஸ்தன் எவ்வித பற்றுமற்ற தன்மை உடையவனாதலால் அனுபவிப்பவன் ஆகான். 2) சிதாபாசனுக்கு(சீவன்) தனியே இருப்பில்லாததால் அவனும் அனுபவிப்பவன் அல்ல. என்றால் அனுபவிப்பவன் என்று ஒருவன் தெரிகிறானே. அவன் யார் என்றால் இரண்டும்(கூடஸ்தனும் சிதாபாசனும்) கலந்தவன், என்று சொல்லுகிறதே

அல்லாமல் விவேகம் பண்ணினால் அனுபவிப்பவனே இல்லை.

80. எப்படியானாலும் ஆத்மா அனுபவிப்பவன் தானே?

ஆத்மா யாரென்று விசாரிக்குமிடத்தில் சகல வேதங்களும் இந்த இரண்டும் கலந்தவனிடமிருந்து ஆரம்பித்துக் கூடஸ்தன் மிஞ்ச வைக்கப் படுகிறான் கூடஸ்தரே ஆத்மா என்கிறது.

81. இரண்டும் கலந்தது எவ்வாறு?

அறிவில்லாமையினால், (சீவன் வேறு, கூடஸ்தன் வேறு என்ற அறிவில்லாமையினால்)கூடஸ்தனிடமுள்ள சத்யத்தன்மையை தன்மேல் ஏற்றிக் கொண்டு, தன்னிடம் உள்ள அனுபவிக்கிறவன் என்ற தன்மையையும் உண்மை யென்று நினைத்துக் கொண்டு அத்தன்மையை விட்டு விடுவதற்கு ஒரு நாளும் விரும்புவது கிடையாது.

82. இவ்வாரானால் இவ்விடத்தில் பண்ண வேண்டிய காரியம் ஏது?

உலக வாழ்க்கையிலே அனுபவிக்கிறவன், பிரியமாயுள்ள பொருள்களைவிட தன்னைப்பிரியமாய்க் காண்கிறார் போல, விவேகியும் கூடஸ்தருக்கு அன்னியமாயுள்ளவைகளையெல்லாம் பிரியமல்லாதது என்று தள்ளி, கூடஸ்தரிடத்திலே அதிகப் பிரியத்தைக் காணவேண்டும்.

83. பிரியமாய்க் காண்கிறது எப்படி?

பெண், சந்தனம், மாலை, தங்கம் முதலியவைகளில் (1) சாதாரண மனிதன் வைக்கிற ஆசையையும், (2) வாதங்கள், தேர்வுகளில் வெற்றி பெற நினைப்பவன் சாத்திரங்கள் முதலியவற்றை இடைவிடாது எவ்விதம் முயற்சிக்கிறானோ, (3) சுவர்க்கம் முதலியதை அடைய வேண்டுமென்கிற ஆசையினால் தியானம், யாகம் உபாசனை முதலானதை எப்படிச் செய்கிறானோ, (4) அணிமா முதலிய சித்திகளை அடைய விருப்பத்தினால் மனதை யோகி எவ்வாறு கஷ்டப்பட்டு அடக்குகிறானோ அதைவிட அதிக விசுவாசத்துடன் கூடஸ்தரிடத்தில் பிரியம் காணவேண்டும்.

84. கூடஸ்தரிடத்தில் பிரியம் பண்ணினால் பலன் ஏது?

சாதாரண மனிதன், வித்வான், பக்தன், யோகீ ஆகிய நான்கு பேர்கள் எவ்விதம் முயற்சி செய்தே பலனை அடைகிறார்களோ அவ்விதம் முத்தியை அடைய விருப்பம் உள்ளவன் நன்கு முயற்சி எடுத்துக்கொண்டு தேகம் முதலியவைகளில் இருந்து தன்னைப் பிரித்து கூடஸ்தராயிருக்கிற தன்னை மூன்று நிலைகளையும் கடந்தவராய், ஏகராய், சச்சிதாநந்தராய், சதாசிவமாய்க் கண்டவனுக்குச் சொப்பனம் போல புண்ணிய பாவ கர்மத் தொடக்கற்று முத்தனாவான்.

85. இப்படிக் கண்டவனுக்குப் புசிக்கிறவன் யார் என்று வகுப்பற்றது?

ஞாநியாயிருக்கிற சிதாபாசனுக்கு.

86. இவன் சாட்சியை விட்டு இராதபடியினால், இவனைப் பற்றிய போகங்கள் சாட்சியினிடத்திலும் அரோபிக்கப்படாதோ?

சிதாபாசன், ஓர் அவஸ்தையிலே கண்டது, ஓர் அவஸ்தையிலே காணாத

மாயாமயத்திற்கு உட்பட்டவன் ஆனபடியினால், தானில்லாமற் போகிறவனாகக் கண்டு, ஏங்கிச் சாகக்கிடக்கிறவன் திருமணம் செய்து கொள்ள விரும்பாதது போலத், தனக்கு உட்பட்ட போகம் வேண்டான். முன்போலத் தான் புசிக்கிறவன் என்று சொல்லுதற்கு மூக்கில்லாதவன் போலே குன்றிப், பிராரத்த போகம் புசிக்கிறபடியினால் இதை எப்படி சாட்சியினிடத்தில் ஆரோபிப்பான். ஆகையினால் வேதமும் புசிக்கிறவன் இல்லை என்று கூறுகிறது.

87. சரீரத்தை ஒட்டியாவது இவனுக்குத் துக்கமில்லையோ?

ஞாநிக்கு மூன்று சரீரங்களிலும் நான் எனது என்ற எண்ணம் போய்விட்டபடியினால், மூன்று சரீரத்துக்குள்ள நோய்களும் இவனைத்துன்புறுத்தாது.

88. மூன்று சரீரங்கள், அவைகளின் நோய்கள், அது இவனை துன்பப் படுத்தாது ஏன்?

தூலம் (தடித்த சரீரம்), சூக்குமம்(பிராணன், மனம், புத்தி, இவற்றோடு கூடியது) காரணம் (முன் சொன்ன இரண்டுக்கும் காரணம்) என்று சரீரங்கள் மூன்று. இதிலே வாதம் பித்தம் சிலேத்துமம் சம்பந்தமான துர்நாற்றத்துடனிருப்பது, காய்ச்சல், ஒடிந்து போவது முதலான வியாதியுடன் கூடியிருப்பது தூல சரீரம். சூக்கும சரீர வியாதிகள்-காமம், கோபம், லோபம் முதலியவைகளும், சமம்(மனோ நிக்கரகம்) தமம்(இந்திரியத்தடை) முதலியவை ஏற்படுவதினாலும், ஏற்படாததினாலும் மனிதனைப் பாதிக்கின்றன. காரணசரீரத்தில்(தூங்கும் போது ) ஆத்மா நாசத்தையே அடைந்தவன்போல் இருந்து கொண்டு தன்னையும் வேறுஎதையும் அறிகிறதில்லை. தவிரவும் காரண சரீரம், பின்னால் ஏற்படபோகும் (தூல, சூக்கும)துக்கங்களுக்கு விதையாக இருக்கிறது. நூலைப் பிரித்தால் புடவையில்லாதது போலவும், மண்ணை விட்டுக் குடம் இல்லாதது போலவும் அதற்குச் சொன்ன நோய்களைவிட்டால் அந்த அந்தச் சரீரங்களே இல்லை. இம்மூன்று சரீரங்களுக்கும் சொன்ன வியாதியே சுபாவசித்தம் போலச்சிதாபாசனுக்கு (சீவன்) பிரகாசமே சுபாவமே அல்லாமல் அவனுக்கு ஒரு நோயும் சுபாவமல்ல. இப்படிச் சிதாபாசனுக்கே முதலாயில்லாத வியாதி, ஆத்மாவாகிய தனக்கு வரக்கணக்கில்லை ஆகையினால் வேதமும் ஞாநிக்குச் சரீரத்தை ஒட்டிய துக்கம் இல்லை என்கிறது .

89. இப்படி இல்லாத துக்கம் முன்னால் எப்படித் துண்புறுத்தியது?

அறியாமையினால் மனைவி மக்கள் துன்பப்படுவதைத் தான் துன்பப்படுபவன் என்கின்ற மூர்க்கன் போல மூன்று சரீரங்களையும் சாட்சியையும் கூட்டி தன்ரூபமாய் எண்ணிக் கொண்டுச் சரீரம் துன்பப்படுவதை தான் துன்பப்படுவதாகப் பிரமிப்பன்.

90. ஞானம் வந்த பின்பாகிலும் துன்பப்படாமல் இருக்கவேண்டுமே அல்லாமல்

திரும்பத் துன்படுவானேன்?

விவேகத்தினால் அறியாமையைத் தள்ளித் தன்னைச் சாட்சியாக அறிந்தபின் முந்தின துன்பம் போய்விட்டது. இந்த அற்பப்பொருளுக்காக ஏன் ஓடி இடுப்பைமுறித்துக் கொண்டோம் என்கிறதுபோல இல்லாத சம்சாரத்தை(அறியாமையை ) ஏன் மேலே போட்டுக்கொண்டோம் என்கிற வெறுப்பு (வருத்தம்) தவிர துன்பமில்லை.

91. அறிவு ரூபமாகிய யான் சரீரம் முதலானவைகட்கு வேறானவன் என்று அறிந்தாற் போதாதோ? தேகம் நானல்ல என்று பலவிதமாக எந்நேரமும் எண்ண வேண்டுமோ?

இல்லாத சம்சாரத்தை (ஆத்ம)சாட்சியாகியதின் பேரில் ஏற்றினேன். அதைபொருத்துக் கொள்ளும் என்றும் பண்ணின பாவம் போக பிராயச்சித்தம் பண்ணிக் கொள்கிறாற் போலவும் முன் பிறவிகளிலே செய்த புண்ணிய பாவக்கூட்டங்கள் போகத் தக்கதாகவும் திரும்ப திரும்ப தேகம் முதலான வைகள் நானல்ல என்று எண்ணுவது. மிலேச்சர் (வேற்று மதத்தவர்), கையில் அகப்பட்ட, சாஸ்திரங்களை முறையாக ஓதிவரும் பிராம்மணன் அப்பாவம் நீங்க பிராயச்சித்தம் பண்ணி பிராம்மணருடன் கூடினபின்பும் மிலேச்சர்களைக்கண்டால் ஒடுகிறார்போல தேகம் நானல்ல என்று திரும்ப திரும்ப எண்ணுதல்.

92. ஞாநியானவன் முன்போல உலகவிவகாரம் பண்ணாமற் நாணுவானேன்?

தன் பெண் குறியில் குட்டம் பிடித்த வேசி அறிந்தவர் முன் நாடகமாட நாணுகின்றாற் போலச், சீவனும் தான் மாயாமயம் என்று அறிந்த பின் தன்னைக் கர்த்தா என்று சொல்ல நாணுவான்.

93. ஞானம் வந்தபின் நாணமும் நடுக்கமும் வரலாமோ?

அரச குமாரன் அரச பதவில் உள்ள ஆசையினால் அரசனைப்போலவே நடந்து கொள்கிறாற் போல, பிரம்மத்தை அறிந்தவன் பிரம்மமேயாவன் என்ற வேதவசனம் கேட்டுப் பிரம்மரூபத்தைக் கம்பீரமாகத் திரும்பத் திரும்ப என்நேரமும் எண்ணுவதே அல்லால், பயப்படுவதில்லை.

94. பிரமஞானம் சீவன் நான் என்கிற தவறான எண்ணத்தை நீக்க வந்த படியினால், எவனாகிலும் தான் சாக மருந்து குடிப்பானோ?

கங்கையில் மூழ்கி இறந்தால் தேவனாகலாம் என்ற மகிழ்ச்சியினாற் கங்கையில் மூழ்குவது போலப் பிர்மமாகலாம் என்ற மகிழ்ச்சியால் ஞானம் அப்யாசிப்பன்.

95. கங்கையில் மூழ்கினவுடனே தேவனாகிறாற் போல, ஞானம் அப்யாசிக் கிறவன் உடனே பிரம்மம் ஆகவில்லையே?

சரீரத்தை ஆரம்பித்த பிராரத்த கர்மம் முடிந்து சரீரம் நீங்கும் காலம் வரை மனிதன் என்கிற பேர் நிற்கிறாற் போல, பிராரத்தக் கட்டில் உள்ள தேகம் நீங்கும் காலம் வரை சீவன் என்கிற பேர் நீங்காது.

96. கயிறு என்று அறிந்த பின் பாம்பு என்ற பயம் போகவில்லையா?

ஆம். ஆனால் பாம்பு என்றபயம் போக சிறிது காலம் தேவைப்பட்டது போலவும், தன் உடன் வந்தவன் காணவில்லையே என்று வருத்தப்பட்டு இடித்துக் கொண்ட புண் வலி சிறிது சிறிதாக நீங்குவது போலவும், ஆரம்பமான பிராரத்த கர்மபோகமும் அனுபவித்தே நீங்கும்.

97. ஞானம் வந்த பின்னும் பிராரத்த துக்கம் இருந்தாற் துக்க நீக்கம் என்கிற ஆறாம் ஞானநிலை எவ்வாறு கூடும்?

தன்னுடன் வந்த பத்தாவது ஆளைச் சாகாமற் கண்ட சந்தோஷம் புண்வேதனையைத் தெறிய ஒட்டாதது போல, தானே பிரம்மம் என்று முத்தனான சந்தோஷம், பிராரத்த துக்கத்தைத் தெரியவொட்டாது. ஆகையால் ஆறாவது அவஸ்தை கூடும்.

98. சிதாபாசனுடைய ஆறாவது அவஸ்தையும் தெறிந்தது. இனித் தடையற்ற ஆனந்தத்தை விவரமாய்கூற வேண்டும்?

இந்த உலகம், சுவர்க்கலோகம் குறித்துப் பண்ண வேண்டிய கர்மமெல்லாம் பண்ணி முடிந்தபடியினால், மோட்சமும்(ஆத்மாவும்) பிரம்மமும் நாம் என்று அறிந்தபடியினால் மனதிலே ஒரு குறையுமில்லை என்று அறிந்தது கொண்டு தடையற்ற ஆனந்தம் உண்டு.

99. வேதத்தில் சொல்லப்பட்ட கர்மம், பக்தி, யோகம் என்று சொல்லப்பட்ட காண்டம் மூன்றிலும் சொன்ன காரியத்தில் ஒன்றும் பண்ணாமல் இருக்கையிலும் எல்லாம் பண்ணிமுடிந்தவன் என்றது எப்படி ?

எல்லாம் முடிந்த விஷயம் என்பதை ஞாநியினுடைய பழக்கவழக்கங்களில் இருந்து அறியலாம்.

100. பண்ணவேண்டியது, அறியவேண்டியது எல்லாம் தேவையற்றுப் போனது என்பவற்றை எனக்கு தெறியச் சொல்லவேண்டும்?

நான் துக்கி என்கிற அஞ்ஞானிகள் மனைவி, மக்கள் முதலானதை விரும்பி தேடட்டும். உத்தமமான ஆனந்தம் நிரம்பிய நான் எதை ஆசைப் பட்டு அலையவேண்டும். மேல் உலகம் செல்ல விரும்புபவர்கள் அதற்கான புண்ணிகர்மாக்களை செய்யட்டும். எல்லா உலகமாகவே இருக்கும் நான் எதற்கு கர்மாக்களைச் செய்யவேண்டும். பிரமலோகத்தை அடைய வேண்டியவனுக்கு வேத சாத்திரம் கற்கவேண்டும். எனக்கோ எவ்வித செயலும் இல்லாததனால் அதில் அதிகாரம் இல்லை. தத்துவத்தை அறியாதவர்கள் வேதத்தைக் கேட்கட்டும். அறிந்த எனக்குத் தேவையில்லை. வேதங்களில் சந்தேகம் உள்ளவனுக்கு மனனம் பண்ணவேண்டும். தேகம் நாம் என்று ஒருக்காலும் எண்ணோம். சந்தேகமற்ற பிரம்மமாயிருக்கிற நமக்கு மனனம் தேவையில்லை. தவறான எண்ணம் உள்ளவர் வேதக்கருத்துகளில் தெளிவு அடையவேண்டும். தேகமே ஆத்மா என்ற விபரீத எண்ணம் வராத எனக்கு தெளிவு தேவையில்லை. எதனால் எனக்கு விபரீத எண்ணம் கிடையாதோ அதனால் எனக்கு சமாதியும் கிடையாது. கேட்டல், சிந்தித்தல், தெளிதல் ஆகியவை அனைத்தும் அந்த கரணத்துக்கே

ஆகையால் பண்ணவேண்டியதெல்லாம் பண்ணி முடிந்தது.

101. சரீர விவகாரம் இருக்கும்போதே உமக்கு எப்படி விபரீத எண்ணம் இல்லை? தூக்கம், பிட்சை, குளித்தல், சுத்திசெய்தல் இந்த நான்கும் நீர் பண்ணக் கண்டோமே?

விவகாரம் குலாலச்சக்கரம் போல, வாசனைபலத்தினால் நடக்கிறது நான் செய்கிறேன் என்ற விபரீத எண்ணம் இல்லை. ஒருவன் நெருப்பு என்று சொன்னது கொண்டு குன்றிமணிச்செடி வேகாதது போல, நீர் நம்மை கர்த்தா என்று சொன்னது கொண்டு நாம் தூக்கம் முதலானவைகளைப் பண்ணினவன் ஆகோம்.

102. இப்படி வாசனையினால் வருகிற விவகாரமும் போக வேண்டாமோ?

பிராரத்த கர்மம் இருக்கு மட்டும் விவகாரம் போகாது.

103. உம்முடைய விவகாரத்திற்கு விதியேது?

உயர்ந்த, தாழ்ந்த, மத்திம காரியங்கள் பிராரத்த பிரிவின்படி நடக்கிறதே விதி.

104. அப்படியானால் உம்மிடத்தில் சகலருக்கும் அவமரியாதை வரும். உம்மைப் பெரியவர் என்று ஞானம் கேட்பாரும் இல்லை, உம்முடைய ஞானம் உமக்கே பிரயோசனம். பிறரை ஈடேற்றாதே?

நான் செய்ய வேண்டியதெல்லாம் செய்து முடித்தவன் ஆனாலும், உலக மக்களின் நெறிப்படி நான் இருக்கிறேன். தேவதைகளை அர்ச்சித்தல், குளித்தல், சுத்தி செய்தல், பிட்சை முதலியவற்றை சரீரம் செய்யட்டும். வாக்கு பிரணவத்தை உச்சரிக்கட்டும். உபநிடதங்களை வாசிக்கட்டும். மூர்த்தி தியானம், பிரமத்தியானத்தை மனது பண்ணட்டும். இவைகளை நான் என்ற ஆத்மா பண்ணினவனுமல்ல, நான் பண்ண சொன்னவனுமல்ல. இப்படி நாம் இருப்பதால் கர்மாவில் ஈடுபாடு உள்ளவர்களுக்கும் நமக்கும் சண்டையில்லை. நம்முடைய ஞானம் பலருக்கும் உபகாரமாம்.

105. கர்மத்திற்கு நிபந்தனைகள் யாவை? ஞானத்திற்கு நிபந்தனைகள்யாவை?

ஞாநியால் பொய் என்று தள்ளப்பட்ட மனம் வாக்கு சரீரம் இவைகளை கொண்டு கர்மி காரியங்களைப் பண்ணட்டுமே. இம் மூன்றுமே கர்மத்திற்கு நிபந்தனைகள் அல்லாமல் சாட்சியினிடத்திலே இல்லை. ஞானத்திற்கு நாம் அசங்கன் என்கிறதிலே நிர்பந்தமல்லாமல் மூன்று வித கரணங்களிடத்தில் நிர்பந்தமில்லை. திரிவித கரணத்திற்கும் கர்மத்தை விளக்கத்தேவையில்லை. ஞாநி தன்னைப்பிரம்மம் என்று அறிந்தது கொண்டு கர்மிக்கு கேடு ஏது?

106. இப்படி எல்லோரும் அறியாமல், ஆத்மாவை மூன்று வித கரணத்தோடே கூடக் கர்த்தா என்கிற கர்மிகளும், ஞானம் வந்தவுடனே மூன்று வித கரணத்திற்கும் ஒரு வித கர்மமும் வேண்டாம் என்று இருக்கிற ஞாநிகளும் ஒருவருக்கொருவர் சண்டைக்கு நிற்பானேன்?

செவிடர்கள் கதை கேட்டார்போல அவர்கள் அஞ்ஞானத்தினாலே

சண்டைக்கு நிற்கிறார்கள்.

107. ஞானிக்கு பிரவிருத்தி (ஒன்றை அறியவேண்டும்) காரியம்வேண்டாம் என்பது இருக்கட்டும். நிவிருத்தி(எல்லாவற்றிலிருந்தும் விலகல்) தர்மம் வேண்டாமோ?

அறிந்தவன் அறிந்து விட்டபடியால் அறியவிரும்பமாட்டான். ஆகையால் பிரவிருத்தி அவனுக்கு உபயோகப் படாது என்றால், அறிந்தவன் அறிந்திருக்கிற படியால் மறுபடியும் அறிவது கிடையாது. ஆகையால் அதற்கு சாதனமான நிவிருத்தி தேவையில்லை.

108. நிவிருத்தி ஞானத்திற்குச் சாதனமல்லவோ?

அறிந்தபின் சாதனம் எதற்கு.

109. தோற்றுகிற சகத்தினால் மீண்டும் அஞ்ஞானப் பிராந்தி வந்தாலும் சாதனத்தை அப்யாசித்தால் குறைவில்லையே?

உயிரோடு இருக்கிற எலியே பூனையைக் கொல்லாதென்றால் செத்துப் போன எலி பூனையைக் கொல்லப் போகிறது என்றாற் போலவும், பாசுபத அம்பினால் கொல்லப்படாதவனை, அற்பமான அம்பினால் கொல்லப் படுமென்றாற் போலவும், அநாதியிலே அஞ்ஞானமும் அதன் காரியங்களான ஆவரணம், விட்சேபம் எல்லாம் சேர்ந்து கொல்லப்படாத அறிவே தானாகிய திடஞானத்தினாலே கொல்லப்பட்டிருக்கிற அஞ்ஞான தற்காரியங்கள் திரும்பவும் கட்டுப்படுத்தும் என்கிறது உன் புத்தி குறைவே ஒழிய வேறில்லை.

110. அஞ்ஞானம் அதன் கார்யங்களாகிய காமம், கர்மா நீக்கப்பட்டு போனாலும், சகத்துத் தோற்றுகிறதைக் கண்டுச் சாதனம் அப்யாசிக்க வேண்டாமோ?

தோற்றினால் என்ன, இத்தனையும் நாமல்லவோ கொன்றோம் என்று படுகளம் பார்க்கிற போத அரசனுக்கு அதனாற் திருப்தியே ஒழியப் பீதியில்லை. இப்படிப்பட்ட போத ராசனுக்குத் தேகாதிகளிடமிருந்து வருகிற பிரவிருத்தி நிவிருத்தியினால் தான் பிரயோசனம் ஏது.

111. பிரவிருத்தியாகாது, நிவிருத்தி ஆகும் என்பது யாருக்கு?

சுவர்க்க மோட்சத்தைக் குறித்துப் பிரயத்தனம் பண்ணுகிற அஞ்ஞானிக்கு ஆகும்.

112. அப்படிப்பட்ட அஞ்ஞானிகளோடு ஞானி கூடியிருக்கும் போது செய் காரியம் ஏது?

குழந்தைகள் தகப்பனை அடித்தாலும் வைதாலும் மனதிலே வருத்த மில்லாமற் சீராட்டுகிறார் போல அஞ்ஞானிகள். பழித்தாலும் பூசித்தாலும் திரும்பத் தான் அப்படிச் செய்யாமல் அவர்களுக்குச் சம்மதமாக மனம், வாக்கு, சரீரம் இவைகளால் கர்மத்தைப் பண்ணிக்கொண்டு அவர்களுக்கு ஞானம் ஏற்றுவிக்கிறதே செய்யும் காரியம்.

113. ஞானிக்கு ஞான அப்பியாசம் பண்ணுகிற பேர்களுடனே கூடியிருக்கும் போது செய்காரியம் ஏது?

ஞானங்களைப் போதித்துக் கர்மங்களைத் தூஷித்துக் கர்மாதிகளைத் துறந்து காட்டவேண்டும்.

114. ஞானி தனித்திருக்கும் போது செய்காரியம் ஏது?

செய்யவேண்டியதெல்லாம் செய்து முடித்தாயிற்று என்ற தன்னுடைய ஆனந்தத்தைக் கண்டு களித்து மகிழ்ந்து, பிரம்மமே நாம் என்று அறிய என்ன புண்ணியம் பண்ணினோமோ. நம்முடைய அஞ்ஞானம் எந்த வழிபோயிற்றோ.

நாம் பண்ணின அதிஷ்ட முயற்சியினாலே நமக்கொரு சம்சாரமும் இல்லாமற் போயிற்றே. நமக்கு பிரம்மாநந்த நிலை வெட்டவெளியாகத் தோற்றக்கிடைத்ததே உலகிலே எல்லோரையும் பிடித்த நான் கர்த்தா என்கிற அகங்காரம் நமக்குத் தேவையற்று போன பாக்கியம் ஏதோ ? எல்லாராலும் அடையவேண்டுமென்கிற பிரம்மம் நாம் ஆனோமே, நமக்கு இத்தனை பாக்கியத்தையும் கொண்டு வந்து விட்ட சாத்திரத்தைப் புகழ்வோமோ இந்த சாத்திரத்தை அனுபவத்திற்கு வர பயிற்றுவித்த குருவைப் புகழ்வோமோ, என்ன புண்ணியத்தினால் இப்படிப்பலித்ததோ, நம்முடைய புண்ணியத்திற்கும், நம்முடைய ஞானத்திற்கும், நம்முடைய ஆனந்தத்திற்கும் உவமை காணோம் என்று எந்நேரமும் தன் சுபாவ ஆனந்தத்திலே அனுபவமாய் அனுபவிக்கிறதே செய்காரியம்.

இந்த திருப்தி தீபிகையை எந்நேரமும் சிந்தித்துக் கொண்டிருப் பவனுக்குப் பிரம்மாநந்தத்தில் அழுந்தி நித்திய திருப்தனாய் இருப்பன்.

---

# 3. கூடஸ்ததீபம்

முன் அத்யாயங்களில் கூடஸ்தன் என்று சொல்லி வந்த பிரத்யக் ஆத்மா(உள்ளேயுள்ள ஆத்மதத்துவம்) சுத்த அறிவு ரூபமாயிருந்து கொண்டு உள்ளேயும் அளவுக்கு உட்பட்டது போல் எப்படி இருக்கிறது என்பதையும், அதை சீவன் எப்படி அறிந்து கொள்ள முடியும் என்பதையும் இந்த அத்யாயத்தில் வித்யாரண்ய குருவானவர் பலவித உதாரணங்கள் மூலமாக விவரித்துச் சொல்கிறார்.

1. நீ என்ற பதத்திற்கு மேல் எழுந்தவாரியான அர்த்தம் யாது? உண்மையான அர்த்தம் யாது? இந்த இருவகையும் பொருந்தி இருக்கிறதற்கு உதாரணமேது?

நீ என்ற பதம் மேல் எழுந்தவாரியாக சிதாபாசனையும், உண்மையாக கூடஸ்தர். உதாரணம் எது என்றால் கண்ணாடியிற் பிரதிவிம்ப வெய்யிலும், சுபாவ வெய்யிலும் ஒருமைப்பாடாய் ஒரு சுவரை விளக்குகிறாற் போலக் கூடஸ்தரும் சிதாபாசனும் ஒருமைப்பாடாய் ஒரு தேகத்தை அறிகிறார்கள்.

2. இவர்கள் இருவரும் எதனால் ஒருமைப்பாடாய்த் தோற்றுகிறார்கள்? இவர்களைப் பகுத்தறியும் வழி ஏது?

அறியாமையினாற் ஒருவராகத் தோற்றுகின்றது. ஒரு காலத்தில் ஏகதேசமாய்த் தோன்றி மறைகிற சிதாபாசனையும் நித்திய பிரகாச மாயிருக்கிற கூடஸ்தரையும், ஏகதேச உபாதியினால் உலைகின்ற வெய்யிலையும் அகண்ட வெய்யிலையும் போலக் குறிப்பினால் அறியலாம்.

3. சரீரத்திற்கு வெளியே விடயங்களின் அறிவு வரும்போது எவ்வாறு கூடஸ்தரையும் சிதாபாசனையும் பிரித்து அறிவது?

குடத்தினுடையது போன்ற உருவத்தை மட்டும் கொண்ட புத்தி விருத்தியில் பிரதிவிம்பித்திருக்கும் சைதன்யம்(சிதாபாசன்) (குடத்தை மாத்திரம் தான் பிரகாசிக்கச் செய்யும்) குடம் அறியப்பட்டு இருக்கிறது என்பது பிரம்ம சைதன்னியத்தினால் பிரகாசிக்கிறது. குடம் என்று அறிந்தவுடன் அணைந்தவன் சிதாபாசன் அதனைக்கண்டவன் கூடத்தன்.

4. குடத்தை பற்றிய ஞானம் வருகிறதற்கு முன்னும் பின்னும் குடத்திலே கூடத்தர் இருந்ததற்கு அடையாளமேது?

இரண்டு காலத்திலும் சைதன்னியத்துடன் அறிவு இருந்தே இருக்கிறது. அந்தந்த காலத்தில் அறியப்படும் விஷயம் மாத்திரம் அஞ்ஞானத்தினால் அறியப்படவில்லை என்றும், பின்னர் அறியப்பட்டு விட்டது என்றும் வேறுபடுகிறதே தவிர அறிவில் வித்யாசமில்லை.

5. ஞானமாவது ஏது?

ஈட்டியைப்போல சிதாபாசனை முன்னிட்டுக் கொண்டிருக்கும் சிதாபாசந்த புத்தி விருத்தியே ஞானம்.

6. அஞ்ஞானமாவதேது?

தனக்கு எனத் தோற்றமில்லாமையே அஞ்ஞானம்.

7. புத்தி விருத்திக்கு முன் சிதாபாசனில்லாத படியினால் அறியப்படாத குடம் கூடத்தன் தானே அறிய வேண்டும். விருத்திக்குப் பின் அறியப்பட்டது குடம் என்கிறது சிதாபாசனால் அறியலாம். கூடத்தர் என்கிறது வேண்டாமோ?

குடம் என்று அறிந்தவுடன் சிதாபாசன் அணைந்து போனபடியினாலும், அந்த அவசரத்தில் கூடத்தரைத் தவிர வேறு அறிவு இல்லாதபடியினாலும், விருத்திக்கு முன் அறியப்படாததை அறிந்திருந்த கூடத்தர்தானே விருத்திக்குப்பின் அறியப்பட்டது என்கிறதையும் தோற்றுவிக்கிறதற்கு சந்தேகம் தேவையில்லை. ஆகையால் இரண்டு காலத்திலும் குடத்தை அறிகின்றவர் கூடத்தர்தானே.

8. குடஅறிவு வந்தவுடனே சிதாபாசன் நட்டமாய்ப்போனாலும், அவனோடு கூட நட்டமாகாதிருக்கின்ற விருத்தியினால் குடம் அறியப்பட்டது என்று தோற்றலாம். கூடத்தரால் என்கிறது தேவையில்லையே?

சிதாபாசனில்லாத புத்திவிருத்தி மற்ற உணரும் கருவிகளைவிட உயர்ந்தது ஆனாலும் வெள்ளைமண் போலச் சடம் ஆனபடியினால், குடம் அறியப்பட்டதைத் தோற்றுவிக்கமாட்டாது. கூடத்தார்தானே தோற்றுவிக்கிறார்.

9. கூடத்தரிடத்திலே கற்பிக்கப்பட்ட குடம் அஞ்ஞானத்துடனே கூடினாலும் விருத்தியுடனே கூடினாலும் அறியப்பட்டதென்னக் கூடாமல் போனால் அறியப்பட்டது என்கிற பேர் எதனால்?

சுத்தசைதன்னியம் புத்தியில் பிரதிபலித்து சிதாபாசனாக ஆனால் தான் உலகத்தில் உள்ள பொருட்கள் அறியப்பட முடியும்.

10. சைதன்யத் தொடக்குத்தானே அறியப்பட்டதற்கு மூலமானால், முன் சாட்சி சைதன்யத்துடனே கூடினது கொண்டு அறியப்பட்டதாக ஒண்ணாததோ?

விருத்திக்குப்பின் பிரதிபலன சைதன்னியத்திற்கே பிரயோசனம் ஆகவேண்டுமே அல்லால் முன்னிருந்த கூடத்தருக்குப் பிரயோசனம் என்னக் கூடாது.

11. அறியப்படாததைத் தோற்றுவிக்கும் நிமித்தம் அஞ்ஞானம் இருப்பது போல, அறியப்பட்டதை தோற்றுவிக்கும் நிமித்தம் புத்தி போதும். சிதாபாசனால் என்ன பிரயோசனம் ?

பிரகாச ரூபமான சிதாபாசன் இல்லாத புத்திவிருத்தி வெள்ளை மண் போல அறிவற்றதால், அறியப்பட்டதைத் தோற்றுவிப்பதற்குக் காரணம் ஆகாது.

12. முடிவுதான் ஏது?

உலகப் பொருட்களிலே சிதாபாச ரூப பல விருத்தியினாலே (புத்தி விருத்தியும் சிதாபாச ரூப பிரகாசமும் கூடியே) அறியப்பட்டதென்னும் ஞானம் எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

13. ஆயினும் சிதாபாசனைக் கற்பிக்கிறது சரியல்ல . எதனால் எனின் பிரம்ம சைதன்னிய ரூபமாகவே பலம் இருத்தலால். பிரமசைதன்னியம் பிரமாணத்தின் பிரவிருத்திக்கு முன்னே இருத்தலாலும், பலமோ பிரமாணத்தின் பிரவிருத்திக்குப் பின்னே உண்டாவதலாலும் பிரம சைதன்னியம் பலமல்ல.

பிரம சைதன்னியத்தைக் கூடத்தரென்று விவகரித்ததற்கு விபரம்:- மொழிபெயர்த்த ஆசிரியர் கூடத்த பிரமங்களுக்கு வேற்றுமை இல்லாமை பற்றி , மூல சுலோகத்தில் குடத்தில் பிரமசைதன்னியம் முன்னும் பின்னும் உள்ளது என்பதைக் கூடத்தர் என்றே விவகரித்தனர்.

14. இப்படியானால் கூடத்தருக்கும் சிதாபாசனுக்கும் வேற்றுமை ஏது?

குடத்தை மாத்திரம் காண்கிறவன் சிதாபாசன். குடம், புத்தி விருத்தி, சிதாபாசன் இம்மூன்றையும் காண்கிறவர் கூடத்தர்.

15. இப்படியானால் எல்லாச் சாஸ்திர ஆசிரியர்களும் பொருளின் ஞானத்தில் இரண்டு சைதன்னியத்தையும் ஏன் பகுத்து சொல்லவில்லை?

கூடத்தர் என்ற சொல்லால் ஞானத்தின் ஞானம் என்று பேரிட்டு பகுத்தறிவர்.

16. தேகத்திற்கு வெளியே சிதாபாசனையும் கூடத்தரையும் பிறித்து அறிந்தாற் போலத் தேகத்திற்கு உள்ளாகவும் இவர்கள் இருவரையும் பிறித்தறியும் வழி யாது?

வெளியில் இது என்கிற விருத்தியும், குடம் முதலியவைகள் அதற்கு விஷயமும் அவைகளின் உடன்பாடு , எதிர்மறையும் அறிகிறவரே சாட்சி என்றும் அறிகிறாற் போல தேகத்திற்குள்ளும் நான் என்கிற விருத்தியும் காமம் கோபம் முதலியவை அதற்கு விஷயமும் இவைகளின் உடன்பாடு எதிர்மறைகளை அறிகிறவர் சாட்சி.

17. உள்ளே சிதாபாசனின் தோற்றம் எப்படி? சாட்சி(கூடத்தர்)யின் தோற்றம் எப்படி?

காய்ச்சின இரும்பில் இருக்கிற நெருப்பு அந்த இரும்பை மாத்திரம் தோற்றுவிக்கிறதே அல்லாமல் மற்றொன்றையும் தோற்றுவிக்காதது போல, காமக் கோப முதலியன நான் என்ற விருத்தியிற், கலந்திருக்கிற சிதாபாசனும் தான் மாத்திரம் தோற்றுகிறதே அல்லாமல் அன்னியமாயிருக்கிறதைத் தோற்றுவிக்க மாட்டான். சாக்கிர, சொப்பனத்தில் விருத்திகளையும், விருத்திகளின் இடைவெளியையும், சுழுத்தி மூர்ச்சை சாமாதிகளில் இவைகள் இல்லாததையும் தோற்றுவிக்கிர நிர்விகார சைதன்யமே கூடத்தர்.

18. வெளியில் விருத்தியில் அறியப்பட்டதையும் அறியப்படாததையும் காண்கிற

வழியாகக் கூடத்தரைக்காண்பித்தது போல், உள்ளில் விருத்தியிலும் அதன் வழியாகக் காண்பியாமல் வேறோரு வழியாக காண்பித்தது ஏது?

உள்ளில் விஷயமான விருத்தியானது, வெளியிலுள்ள குடம் போல ஞானம் அஞ்ஞானம் இரண்டோடும் கூடாதது கொண்டு அந்த வழி தேவையில்லை.

19. விருத்தியில் அஞ்ஞான வியாப்தி, ஞானவியாப்தி இரண்டும் ஏன் இல்லை?

விருத்தியானது குடம் போலத் தனக்கன்னியமாகாதபடியினால் ஒருக்கால் ஞான வியாப்தி வந்தது என்னக்கூடாது அன்னிய பதார்த்தத்திலே அஞ்ஞானத்தைப் போக்குகிறபடியினால் இந்த விருத்தியில் அஞ்ஞான வியாப்தி வரக்கணக்கில்லை.

20. இப்படி உள்ளிலும் புறம்பிலும் நான் என்று தோற்றுகிற சைதன்னியம் இருவகை என்று சாதித்ததற்கு பிரயோசனம் ஏது ?

இந்த சைதன்னியம் இரண்டிற்குள்ளே, கற்பிதமாக இருக்கிற சிதாபாசன் பிறப்பு இறப்போடு கூடிய சம்சாரி என்றும், கூடத்தராய் சுபாவமாய் இருக்கிற தனக்கு ஒருக்காலும் சம்சாரம் இல்லை என்கிறதே பிரயோசனம்.

21. புத்தியிலே வளைபட்ட கூடத்த சைதன்னியம் சம்சாரியாகட்டும், சிதாபாசன் ஆகவேண்டாமே?

அசங்க சைதன்னியத்திற்கு ஒரு காலத்தில் வளைபட்டது கொண்டு சம்சாரம் வருமேயானால், குடம் குதிர்களிலே வளைபட்ட சைதன்னித்திற்குச் சம்சாரம் வரக்காணோம்.

22. குடம் போல அந்தக்கரணம் அசுத்தம் அல்லவே, சுத்தத்திலே வளை பட்டாற் சம்சாரம் வரும் ?

வெண்கல மரக்காலால் அளந்தது கொண்டு அளக்கப்பட்ட பொருள் இரண்டு மூன்று பங்கு ஆகாதது போலச் சுத்தமான அந்தக்கரணத்தினால் அதிசயம் ஒன்றுமில்லை.

23. மரப்படி வெண்கலப் படி ஒன்றானாலும், வெண்கலத்திலே பிரதிவிம்பம் கண்டாற் போலக், கடத்திலும் புத்தியிலே பிரதிவிம்பம் அதிசயமல்லவோ?

அப்படியானால் இந்தப் பிரதிவிம்பம் தான் சிதாபாசன். இவனுக்கே சம்சாரம். ஆத்மாவிற்கு இல்லை.

24. உபாதியை தவிர ஆபாசனுக்கு வேறு சொரூபம் இல்லாதபடியினால் அந்தக்கரணத்திற்கே சம்சாரம் இருக்கட்டும் சிதாபாசனுக்கு சம்சாரம் வேண்டாமே?

இப்படியானற் சரீரத்தைத் தவிர அந்தக்கரணத்தைப் புறம்பாக காணப்படாத படியினாற் சரீரத்திற்கே சம்சாரம் ஆகவேண்டும்.

25. சரீரம் மரித்தாலும் புத்தி மரியாது என்கிற சாஸ்திரத்தினால் சரீரத்தை தவிர அந்தக்கரணம் வேறாக வேண்டும்?

இப்படியானாற் புத்தியைத் தவிரச் சிதாபாசனும் வேறே உண்டென்று பிரவேச உபநிடத்திலே சொன்னபடியினால் சிதாபாசனுக்கே சம்சாரம்.

அந்தக்கரணத்திற்குத்தேவையில்லை.

26. பிரவேச உபநிடத்திலே புத்தியோடு கூடினவனுக்கே சரீரப் பிரவேசம் சொல்லுகிறது. புத்திக்கு அப்பாற்பட்டவனுக்குச் சொல்லவில்லையே?

சடந்தேகம் என்கிற வாக்கியம்,நாம் இல்லாவிட்டாற்சரீரங்களும், இந்திரியங்களும் சீவிக்கமாட்டாதென்றும், ஆத்மா பிரவேசித்தார் என்கிறபடியினால் அந்தக்கரணத்திற்கு அன்னியனாய் இருந்தவனுக்கே பிரவேசம் சொல்லுகிறது.

27)அந்தக்கரணத்திற்கு அப்பாற்பட்டவன் அசங்கனல்லவோ, அவனுக்கு எப்படி பிரவேசம்கூடும்?

என்றால் இவருக்குச் சிருஷ்டிதான் எப்படிக் கூடும்.

28) அசங்கனுக்குப்பிரபஞ்ச சிருஷ்டியில்லையே, மாயாகற்பி தனுக்கல்லவோ சிருஷ்டி?

பிரவேசம்தானும் மாயா கற்பிதனுக்கே அல்லாமல் அசங்கனுக்கு இல்லை.

29). சிருஷ்டித்தவரும் பிரவேசித்தவரும் கற்பிதம் என்கிறதற்குப் பிரமாணம் ஏது?

மாயை, அவித்யை என்கிற இரண்டும் சீவன் ஈசுரன் என்கிற ஆபாசரைக் கற்பித்தது என்கிற வேதமும், இவர்களை உற்று விசாரித்தால் இல்லாமற் நட்டமாய்ப் போகிற அனுபவமே பிரமாணம்.

30. இப்படிச் சீவன் ஈசுரன் கற்பிதம் என்றும், இவர்கட்கு அப்பாற்பட்டவர் ஆத்மா என்றும் வேதத்திலே பகுத்துச் சொல்கிறதோ?

சீவ ஈசுரர்கள் பூதங்களுடன் சேர்ந்தே உண்டாகி, அவைகளை அனுசரித்தே நாசத்தையும் அடைகிறார்கள் என்றும், அப்பாற்பட்டிருக்கும் கூடத்தர் அழியாதவர் என்றும் மைத்ரேயிக்கு யாக்கியவல்கியர் சொன்னார்.

31. இப்படியானாற் சரீரம் அழியும், சீவன் அழியான் என்கிற வேதத்திற்கு விரோதம் அல்லவா?

இந்த வேதம் பூத பௌதீக மோட்சத்தைச் சொல்லுகிறதல்ல. அஞ்ஞான நிலையில் வேறு உலகம் போவது தான் அர்த்தம். ஆகையால் ஆத்மாவிற்கு அந்நியம் எல்லாம் அநித்தியம்.

32. இப்படிச் சீவனே அநித்தியமானால், நித்தியமாயிருக்கிற பிரமத்தோடே நான் பிரம்மம் என்கிற சமானாதி கரண்யம்(இரண்டு பதங்களுக்கு ஒரு பொருளில் அன்வயிக்கும் (ஒற்றுமை சம்பவிக்கும்) தன்மை) எப்படிக் கூடும்?

முக்கிய சமானாதிக் கரண்யம் கூடாவிட்டாலும், இந்தக் கட்டை எதுவோ அதுவே இந்தப் புருஷன். இங்கு கட்டை என்கிற எண்ணம் புருஷன் என்கிற அறிவினால் நிவிருத்தியாகி விடுகிறது போல, நான் பிரம்மம் என்கிற அறிவினால் நான் கர்த்தா முதலான எண்ணம் முழுவதும் நிவிருத்தியாகி விடுகிறது.

33. ஆனால் பத்மபாத ஆசாரியருடைய பஞ்ச பாதிகாவிற்கு பிரகாசாத்மா

எழுதியிருக்கும் விவரணம் என்ற வியாக்யானத்தில் பாதித்து அர்த்தம் சொல்லக்கூடியதில்லை என்று சொல்லியிருக்கிறாரே?

என்றால் அவர் நீ என்ற பதத்திற்கு கூடத்தன் வரை அர்த்தம் பண்ணிக் கொண்டு சொன்னார்.

34. இப்படிக் கூடத்தரே தானாய் கண்டாற், அது என்ற பதத்திற்கும் நீ என்ற பதத்திற்கும் அர்த்தம் ஏது?

தேகம் இந்திரியம் முதலானவைகளுடன் கூடின சீவனாகத் தோற்றம் அளிப்பதற்கு அதிஷ்டான பிரத்யக்ஷமும், உலகம், சரீரம் படைத்த ஈசுரப் பிராந்திக்கு அதிட்டானப் பிரத்தியட்சமும் அர்த்தம்.

35. அது, நீ என்ற இரு பதங்களுக்கும் ஒரு பிரமத்தைத்தானே ஏக தேசங்களாகச் சொன்னால், இரண்டு பதங்களுக்கும் அர்த்த வேற்றுமை உண்டோ?

கற்பித சரீரத்தையும் உலகத்தையும் தொட்டுப் பேதமே அல்லாமல் அதிட்டான சைதன்யம் ஒன்றே ஒழிய இரண்டில்லை.

36. அனுபவமாய்க் கண்டு கொண்டிருக்கிற சீவ ஈசுரர்களைக் கற்பிதம் என்னக் கூடாது?

சீவ ஈசுரர்கள் அறிவைப் போல ஒரே லட்சணமாய் நிர்ணயமாகாத படியினாலும், சித்தாயும், சடமாயும், நித்தியமாகவும், அநித்தியமாகவும் குழப்பிக் கிடக்கிற படியினாலும் பிராந்தி என்கிறதற்குத் தப்பில்லை.

37. உலகில் ஏக ரீதியாய்த் தோற்றுகிற மயங்கியவனுக்கும், உண்மையை அறிந்தவனுக்கும் உள்ள வேற்றுமை ஏது? புத்தி ஏது? இந்த ஆபாசன் யார்? இங்கு ஆத்மாதான் யார்? இந்த உலகு எப்படி ஏற்பட்டது?

இவ்விடயங்களைத் தீர்மானமாய் அறியாததினால் குழம்பியவனே பிராந்தன். இவைகளைத் தன்தன் சுபாவத்துடன் பகுத்தறிந்து தான் சச்சிதானந்தமென்று நிச்சயிக்கின்றவனே முக்தன் என்கிறதற்கு அடையாளம் என்று வேதம் சொல்லுகிறது.

38. தான் எப்பொழுதும் சச்சிதானந்தராய் இருப்பதற்கு அடையாளம் ஏது?

மாயா விருத்திகள், மனோ விருத்திகள் உண்டாகிறதற்கும், இருக்கிறதற்கும், அழிவதற்கும் சாட்சியாய் இருக்கிற ஆத்மா சத் என்பது கூடும். எல்லாவற்றையும் அறிகிறதனாலே சித் என்பது கூடும். பஞ்ச கோசங்களையும் கைவிட்டாலும் தான் கைவிடப் படாத பொருளான படியினாலே ஆனந்தம் என்பது கூடும். ஆகையினால் இவரே பரமசிவன் என்கிற புராண வசனமே பிரமாணம்.

39. இந்த கூடத்தருக்கு அந்நியமாயிருக்கிற சீவ ஈசுரர், மாயா கற்பிதமான பூத பௌதீகங்கள் போலச் சடமாயிருக்க வில்லையே, சைதன்ய மாயிருக்கின்ற சீவ ஈசுரர்களை மாயாகற்பிதம் என்று சொல்லக்கூடாது?

சகலமான பாண்டங்களெல்லாம் மண்ணிலே பிறந்தாலும், கலச கும்பங்கள் உயர்வாக நிர்மலமாய் இருக்கிறாற் போல, சகலமும் மாயா

கற்பிதங்களானாலும் அவைகளுக்குள்ளே சீவ ஈசுரர்களுக்கு உயர்வு, நிர்மலம்.

40. கலச கும்பங்கள் உயர்வாகக் கருதப்பட்டாலும் சடமாயிருக்கிறாற்போலச் சீவ ஈசுரர்கள் சடமாயிருக்கக் காணோமே?

அன்னத்திற் பிறந்த சரீரம், இந்திரியங்களுக்குள்ளே மனது அறிவு ரூபமாயிருக்கிறாற் போல மாயா கற்பிதங்களுக்குள்ளே சீவ ஈசுரர்கள் அறிவு ரூபமாய் இருப்பது அனுபவம்.

41. மாயைச் சடத்தைக் கற்பிக்கிறதே அல்லாமற் சைதன்யத்தையும் கற்பிக்குமோ?

நம்முடைய தூக்கமே சொப்பனத்திலுள்ள அறிவு ரூபமுள்ள சீவ ஈசுரர்களை உண்டாக்குகிறது. அப்படியிருக்க மகா மாயை இவர்களை உண்டாக்குகிறது என்ற இவ்விஷயத்தில் ஆச்சரியம் ஏது.

42. அற்ப அறிவு முதலான சீவ குணங்களை மாயை கற்பிக்குமேயல்லால், சர்வத்தையும் படைக்கும் தன்மை அறியும் தன்மை, எல்லாவற்றிற்கும் மேலான தன்மை முதலான கல்யாண குணங்களை மாயை கற்பிக்கக் கூடுமோ?

பிள்ளை பெற்றவன் பேரிடுவதற்குச் சிரமம் ஏதும் இல்லாதது போல், ஈசுரனைக் கற்பித்த மாயை அவருக்கு ஏற்ற தொழிலையும் கற்பிக்கிறதில் ஏது சிரமம்.

43. இத்தனைச் சாமர்த்தியமாயிருக்கிற மாயைக்கு ஒரு கூடத்தரைக் கற்பிக்க சக்தி இல்லையோ?

சீவ ஈசுரர்கள் மாயா கற்பிதம் என்று வேதப் பிரமாணம் கண்டாற் போலக் கூடத்தரும் மாயா கற்பிதர் என்று ஒரு வேதப் பிரமாணமும் இல்லை. இவரே உண்மைப் பொருள், ஆதி வஸ்து என்று சகல வேதங்களும் கொண்டாடுகிறது. ஆகவே மாயை கூடத்தரைக் கற்பிக்காது.

44. இப்படி மாயா கற்பிதமான சீவ ஈசுரர்களால் என்ன காரியம் முடியம்?

எண்ணினது முதல் பிரவேசம் வரையுள்ள சிருஷ்டி ஈசுரனால் செய்யப்பட்டது. விழிப்பு முதல் விடுதலை வரையுள்ள அறியாமை சீவனால் செய்யப்பட்டது.

45.. கூடத்தருக்குச் செய்காரியம் ஏது?

அவர் அசங்கரே அல்லாமல் அவரிடத்தில் ஒரு செயலும் இல்லை.

46. இப்படிப் பகுத்துப் பார்ப்பவன் எப்படி இருப்பன்?

இதற்குப் பிரமாண வாக்கியமாக ஸ்ரீ கௌடபாதரின் மாண்டூக்கய காரிகையை உதாரணமாக்குகிறார். உற்பத்தி நாசம் கிடையாது. கட்டுண்டவன், விடுதலை அடைய எண்ணுபவன், முயற்சிப்பவன், விடுபட்டவனும் கிடையாது. சகலமும் மாயா கற்பிதமே அல்லாமற் தனக்குச் சுபாவமாக ஒன்றுமில்லை என்று கலக்கமற தெளிந்திருப்பன்.

47. இப்படி ஒன்றுமில்லாவிட்டாற் சீவேசுரர், ஜகத்து மரியாதை எல்லாம் வேதம் சொல்லி இருப்பானேன்?

அதி சூக்குமமாயிருக்கின்ற ஆத்மாவைக் காட்டும் பொருட்டுத் தூல அருந்ததி நியாயமாகச் சொல்லுகிறது (மிகப் பெரிதான நக்ஷத்திரங்களைக் காட்டி மிக நுட்பமான அருந்ததி நட்சத்திரத்தை காட்டுவது போல).

48. இப்படி அறிந்த விவேகி பிராரத்த தோற்றத்தை எப்படிக் காண்பன்?

சாத்திரம் அறியாதவன் கலங்குகிறாற்போலக் கலங்காமால், மாயை ஆகிற மேகம் பிரபஞ்மாகிற மழையை வேண்டியபடி பெய்தாலும் சிதாகாசமாக இருக்கிற நமக்கு நட்டம் ஏது, லாபம் ஏது என்று கவலை கெட்டிருப்பன்.

இந்தக் கூடத்த தீபிகையை நித்தியம் பார்த்துக் கொண்டிருப்பவன் தானே கூடத்த ரூபமாய் விளங்குவன்.

---

# 4. தியான தீபம்.

முன் அத்தியாயங்களில் உண்மையைப் பற்றிய விசாரணை செய்து ஆத்ம நிச்சயம் அடையவேண்டுமென்று சொல்லப்பட்டது. அவ்வித விசாரணை செய்வதற்கு வேண்டிய தகுதி இல்லாதவர்கள் உட்கருத்தை சாஸ்திரம் மூலமாகவும், பெரியோர் மூலமாகவும் கேட்டறிந்து கொண்டு அதையே தியானம் செய்து கொண்டிருந்தாலும் கூட நாளடைவில் முத்தி நிலை ஏற்பட்டுவிடுமென்று இந்த அத்தியாயத்தில் விளக்கிக் காட்டுகிறார்.

1. விசாரணை செய்யத் தகுதி இல்லாதவர் செய்காரியம் ஏது?

பிர்ம உபாசனையே பண்ணவேண்டியது. சகுன உபாசனை போல் இதற்குக்கிரியை உண்டோ என்னில் பிரம்மத்தை தியானம் பண்ணுகிறதே காரியமல்லாமல் வேறில்லை.

2. இதற்குப் பிரமாணம் ஏது?

தாபநீயம் என்கிற உபநிடதமே பிரமாணம்.

3. தானாயிருக்கிற பொருளை அன்னியமாயிருக்கிற பொருள் போல உபாசிக்கலாமோ?

சம்வாதிப் பிரமை போலக் கண்டும் காணாமல் இருந்தபடியினால் உபாசனை கூடும் (சம்வாதிப் பிரமை – ஒத்து வரக்கூடிய பிராந்தி)

4. சம்வாதிப் பிரமை, விசம்வாதிப் பிரமை யாது?

ஒரு அறைக்குள் இருக்கும் தீபத்தின் வெளிச்சம் வெளியில் தெரிகிறது. மற்றொரு அறையில் ஒரு ரத்தினத்திலிருந்து வெளிச்சம் வெளியில் வருகிறது. தீபத்தின் வெளிச்சத்தை ரத்தினத்தின் வெளிச்சம் என்று ஓடுபவனால் ரத்தினம் அடையப்படுவதில்லை.இதனையே விசம்வாதிப் பிரமை (பிசகான அறிவு) என்பர். ரத்தினத்தின் வெளிச்சத்தைப் பார்த்து ஓடுபவனால் அவசியம் ரத்தினம் அடையப் படுகிறது. ரத்தினத்தின் வெளிச்சத்தில் ரத்தினம் என்று ஏற்பட்ட பிராந்தி சம்வாதிப் பிரமை –(ஒத்து வரக்கூடிய பிராந்தி) என்பர்.

5. பிராந்தியாய் நாடினவனுக்குப் பலன் கொடாது?

விசம்வாதிப் பிரமை பலன் கொடாது. சம்வாதிப் பிரமை நாடிய பலனைக் கொடுக்கும். ஆகையினால் பிரம்ம உபாசனையும் சம்வாதிப் பிரமை போல முத்தியாகிற பலனைக் கொடுக்கும்.

6. இந்த பிரம்ம உபாசனைக்குத் தகுதி உள்ளவன் யார்?

பரோட்ச (மேல் எழுந்த வாரியாக சாத்திரத்தைக் கேட்டவன், படித்தவன்) ஞானியே இதற்கு அதிகாரி.

7. உபாசனை பண்ணுகிற வழி ஏது?

அகண்ட ஆகாச அறிவே நாம் என்கிற பாவனையே வழி.

8. இந்த உபாசனைக்கு உதாரணம் ஏது?

கண்ணாரக் காணாவிட்டாலும் சாத்திரம் சொன்னபடி பாவிக்கின்ற

20. அம்சம்(தனித்தன்மை)அற்ற ஆத்மாவினிடத்திலே, அம்ச கற்பனை எப்படி வந்தது?

தன்னைத் தொட்டு இல்லாவிட்டாலும் தள்ளப் பட்ட உபாதியைத் தொட்டு உண்டு.

21. உபாதியைத் தொட்டு எப்படி உண்டு?

பரோட்ச ஞானத்தினால் இல்லை என்ற அம்சம் தள்ளப்பட்டது. பிரத்யக்ஷ ஞானத்தினால் தெறியவில்லை என்ற மறைப்புக்கு காரணம் தள்ளப்பட்டது.

22. பிரத்யக்ஷ ஞானத்திற்கு கேடு சம்பவிக்காதா?

பத்தாமவன் தானே என்று கண்டபிற்பாடு, முன்கண்ட ஒன்பது பேருக்குள் இல்லை என்று கண்டாற் போல, ஆத்மாவே பிரம்மம் என்று கண்ட பின்பு முன்னதாக வழங்கின அகங்காரத்தைத் தான் அல்ல என்று தள்ளுமேயல்லாமல், நான் பிரம்மம் என்ற பிரத்யட்ச ஞானத்தைக் கெடுக்கமாட்டாது.

23. இப்படி பரோட்ச ஞானம் சாஸ்திரம் அல்லது குருவின் மூலம் வருமென்றும், பின் மகாவாக்கிய விசாரத்தினால் பிரத்யட்ச ஞானம் வரும் என்றும் எங்கே கூறியிருக்கிறது?

உத்தாலகர் சுவேதகேதுவுக்கு முந்திப் பரோட்ச ஞானம் சொல்லிப் பின்பு ஒன்பதாந்தரம், பிரத்யட்ச ஞானம் சொன்னாற் என்று சாம வேதத்திலும், வருணன் பிருகுவுக்கு முந்தி பரோட்ச ஞானம் சொல்லி பின்பு ஐந்தாந்தரத்திலே பிரத்யட்ச ஞானம் சொன்னார், என்று யசுர் வேதத்திலும், தேவேந்திரன் முந்தி அவாந்தர வாக்கியத்தினால் பிரம்மத்தைப் பரோட்சமாய் அறிந்து பின் அபரோட்ச ஞானத்தை அறிந்தானென்று ரிக் வேதத்திலும், இந்தப்படி ஆதிசங்கரரும் வாக்கிய விருத்தியிலே கூறியிருக்கின்றார்.

24. ஆதிசங்கரர் வாக்கிய விருத்தியிலே எவ்வாறு கூறியிருக்கிறார்?

அகங்காரமும் கூடஸ்தரும் தொம்(நீ) என்ற பதத்திற்கு அர்த்தம் என்றும், பரோட்சமாய் மாயாஉபாதி உடைத்தாயிருக்கிற உலகுக்கு காரண சைதன்னியமும் (ஈசுரனும்) பிரம்மமும் தத்(அது) என்ற பதத்திற்கு அர்த்தமென்றும் கூறி பின், இவ்விரண்டும் விரோதமாவதால், விட்டும் விடாத இலக்கணையினால், அவனே இவன், இவனே அவன் என்கிற குறியைப்போலக் கூடஸ்தரே பிரம்மம், பிரம்மமே கூடஸ்தர் என்று அறிந்த உடனே, இந்த நாள் வரைக்கும் நாம் பிரம்மமல்ல என்கிற புத்தியும், சகத் காரண ஈசுர சைதன்னியம் பரோட்சம் என்ற புத்தியும் இன்னவிடம் என்று காணாமற்போம். ஆகையினால் பிரத்யட்ச ஞானத்திற்கு மகாவாக்கிய விசாரமே காரணம் என்று சொல்லியிருக்கின்றார்.

25. வாக்கியத்தினால் பிறந்த அறிவெல்லாம் பரோட்சமே அல்லாமற்

எவ்வாறு பிரத்யட்சமாகும்?

வட்டிக்கு ஆசைப்பட்டு முதலும் இழந்தான் என்கிற சொல்போல, பிரம்மம் ஆகவேண்டும் என்றிருந்த சீவனுக்குச் சுயம் சித்தமாக இருந்த பிரத்யட்சமும்(பிரம்மத்தன்மையும்) போய்விடும் என்கிறது வெகு ஆச்சர்யம்(தவறு). நீயே தசமன் என்கிற செல்லும் அவனைப் பிரத்யட் சமாய்க் காட்டவில்லையோ.

26. அந்த உபாதியிருக்கையினாலே சீவனை நேரில் காணலாம் உபாதியற்ற பிரம்மம் நேரில் தெரியாதோ?

இரும்பு பொன் என்கிறது கொண்டு விளங்கு என்கிறது நீங்காதது போல, அந்தக்கரண கூட்டுறவே சீவ உபாதியானாற் போல அதனை தவிர்கிறதே பிரம உபாதியாம்.

27. நான் என்கிறது முற்றுந் தள்ளப்பட்டபின், நான் பிரம்மம் என்கிற ஞானம் வரக்கூடுமோ?

நான் என்கிறது முற்றுந் தள்ளப்படாமல் உபாதி மாத்திரம் தள்ளப் பட்டு சைதன்னியம் தள்ளப் படாதபடியினால், நான் பிரம்மம் என்கிற அறிவு வரலாம்.

28. சாட்சி சுயம் பிரகாசமானால் விருத்திக்கு விளங்கக்கூடாது கூடுமென்றால் பிரம்மம் விருத்தியில் சிதாபாசனாலும் அறியப்பட்டுச் சடம் என்ற நிலை அல்லவா?

குடத்தைப் பார்க்க விளக்கும் கண்ணும் வேண்டும், விளக்கை மாத்திரம் பார்ப்பதற்குக் கண் மாத்திரம் போதும் போல, அப்பிரகாசமான பொருளை அறியுமிடத்தில் அப்பொருளைப்பற்றி அறி யாமையை நீக்க விருத்தியும், அதனை அறியச் சிதாபாசனும் வேண்டும். சுயம்பிரகாசமான பிரம்மத்தை அறியுமிடத்தில் அஞ்ஞானத்தைப் போக்க விருத்தி ஒன்றே போதும், சிதாபாசாந்த வெளிச்சம் தேவையில்லை, இருந்தாலும் வெய்யிலில் விளக்குப்போல குன்றி, பிரம்மத்தில் லயமாய்ப் போவான். புத்தி விருத்தி வியாப்தியுண்டு, பல வியாப்தியில்லை யென்று வேதம் சொல்கிறது. இந்த அபரோஷ ஞானமே இவரே நான் என்கிற வேதத்திற்கு அர்த்தம்.

29. ஆதிசங்கரர் பலகாலும் சிரவணம் பண்ணச் சொல்லி விதித் திருக்கிறபடியினாற் பிரத்யக்ஷஞானம் திடமல்லவோ?

வேத சாகைகளின் வேற்றுமையாலும், அவற்றை அனுஷ்டிக்கி றவனுடைய ஆசைகளின் வேற்றுமையாலும், கர்மா வெவ்வேறு விதமாய் சொல்லபட்டிருக்கிறாற்போல ஞான விஷயத்திலும் கூட சந்தேகம், விபரீதம் கூடாது என்ற காரணத்தினால் சிரவணம், மனனம் பண்ணச் சொன்னார்.

30. விபரீத பாவனை யாது?

தகப்பனிடத்தில் விரோதபுத்தி காண்பதுபோலத் தேகமே நான்,

உலகு சத்யம் என்பது.

31. விபரீத பாவனைக்கு காரணம் யாது?

பல ஜன்மங்களில் பிடித்துச் செய்த பிறவி வாசனையே காரணம்.

32. இவ்விபரீத பாவனை எதனாற் போம்?

நானே சத்தியமாயிருக்கிற பிரம்மம் தேகாதிபிரபஞ்சம் மித்யை என்கிற தத்துவ ஞானத்தால் போம்.

33. தத்துவபாவனை பண்ணுகிற வழியேது?

பிரமத்தைப் பலகாலும் தனியாயிருந்து சிந்தனை செய்வதும், ஒரு முமுட்சு(மோட்ச விரும்பி)வரில் அவனுக்கு அதைத்தானே போதிப்பதும், சமமானவர் வரில் ஒருவருக்கு ஒருவர் அதையே போதிப்பதுமான இதைபிரம்ம அப்பியாசம் என்பர்.

34. எந்நேரமும் இதே வேலையாயிருந்தால் குடும்ப காரியம் எவ்வாறு நடைபெறும்?

தத்துவ விசாரம் பண்ணுகிறவனுடை குடும்ப காரியங்களெல்லாம் ஈசுரனே கவனித்துகொள்வான்.

35. தத்துவ பாவனை எதனால் கூடும்?

ஒரு முனைப்பட்ட மனத்தினால் கூடும்.

36. அந்த ஒரு முனைப்பட்ட மனம் எதனால்? ஈசுர உபாசனையால்.

37. மந்திரசெபம் போலவும் மூர்த்தி தியானம் போலவும் தத்துவபாவனை பண்ணுகிறதற்கு நியமம் உண்டோ?

மந்திரசெபம் முதலானவைகட்கு தெறியக்கூடிய பலன் இல்லாதபடியினால் நியமமும் , நியமம் தப்பினால் அபாயம் உண்டு. உணவு உண்டால் பசியைபோக்குகிறார்போல தத்துவ பாவனையும் விபரீத பாவனையை போக்குகிறது. தெறியக்கூடிய பலன் என்பதால் நியமம் தேவையில்லை.

38. பிரம்ம அப்யாசம் பலவிதமாகச் சொன்னபோதே சிரமமல்லவோ?

சஞ்சலமாயிருக்கிற மனதிற்கு நியமம் பூண்ட செபமும், வேறொன்றைச் சற்றே நினைத்தாலும் கெட்டுப்போகின்ற மூர்த்தி தியானமுமே சிரமமல்லாமல், கூத்துபார்க்கிறது போல அதிக உதாரணங் களோடு கூடிய உற்சாகமூட்டும் கதைகளோடு கூடியிருக்கிற பிர்ம அப்யாசம் சிரமமல்ல. மனதிற்கு விநோதமே.

39. மனது சஞ்சலம் என்பதற்கு பிரமாணம் எது?

தான் போனதே வழியாய்ச் சஞ்சலமே சுபாவமாயிருக்கிற மனதை நிறுத்துகிறது வாயுவை நிறுத்துகிறதற்குச் சரியென்கிற கீதாவசனமும், சமுத்திரத்தைக் குடித்தாலும், நெருப்பை விழுங்கினாலும், இமயமலையைப் பிடுங்கினாலும் கூடும். ஆனால் மனதை நிறுத்த முடியாது என்கிற வாசிட்டமும் பிரமாணம்.

40. இவ்வாறு சஞ்சலமாயிருக்கிற மனதிற்குச் சின்மாத்திரமே ஆத்மா

மற்றுளதெல்லாம் மித்யை என்கிற நிதித்யாசனமும் சிரமமல்லவா?

காவியம், தர்க்கம், வேளாண்மை முதலியவைகளிலே விழுந்த மனதிற்கே சிரமம்.

41. இப்படியானால் உணவு நித்திரை முதலியவைகளும் மனதிற்கு சஞ்சலமல்லவோ?

மிகச் சிறிய நேரத்தில் செய்யப்படுகிற உணவாதிகளால் பிரம்ம அப்யாசம் கொட்டுவிடாது. மிக அதிக அளவிலே நேரத்தைச் செலவிடுகிற தர்க்கம் முதலானவைகள் தத்துவ அப்யாசத்தைக் கெடுப்பதால் இவைகளே சஞ்சலம்.- ஆகையால் தர்க்கம் முதலியவற்றிற்கு இடம் கொடுக்கலாகாது.

42. இப்படி எல்லா வித்தையையும் விட்டாற் சீவிக்கப் போகிறது எப்படி?

இதர சாஸ்திரத்தை விடச்சொன்னால் சீவிக்கிறது எப்படி என்ற தவறான கருத்தை விட்டு விடு.

43. ஞானியாயிருக்கிற சனகன் அரசகாரியம் செய்யவில்லையோ?

திடஞானத்தினால் சனகன் சொற்ப அரசகாரியம் செய்தான். உனக்கும் திடஞானம் உண்டானால் பிராரத்த வசத்தினாற் தர்க்கபாடம் முதலானவைகளைச் செய்யலாம்.

44. இப்படி பிராரத்தம் என்று அநாசாரத்தை பண்ணலாமோ?

கர்மத்தை ஒருவராலும் மாற்றமுடியாது.

45. அப்படியானால் ஞாநிக்கும் அஞ்ஞாநிக்கும் பேதம் ஏது?

வழிப்போக்கர் இருவருக்கும் தாங்கள் செல்லவேண்டி ஊர் ஒன்றே, ஆனாலும் அவ்வூரைப்பற்றி அறிந்தவன் கவலையில்லாமல் செல்ல, அறியாதவன் துன்பப்பட்டுப் கொண்டு செல்வது போல ஞாநிக்கும் அஞ்ஞாநிக்கும் பிராரத்தம் சரியானாலும் ஞானி தான் அக் காரியங்களைச் செய்யவில்லை என்ற திட எண்ணத்துடன் இருப்பன். அஞ்ஞானி நான் செய்கிறேன். நான் அனுபவிக்கிறேன் என்றே துன்பப்படுவான்.

46. இவரே நான் என்கிற அபரோக்ஷ ஞானம் அறியப்பட்டது. யாருக்குப் போக நிமித்தமாய் எந்தப் போகத்தைக் குறித்துச் சரீர துக்கத்தை அனுபவிப்பன் என்ற வாக்கியத்திற்கு அர்த்தமேது?

நான் அதுவாய் இருக்கிறேன் என்ற. திடஞானம் வந்தவனுக்கு விஷயங்களும், அவற்றை அனுபவிப்பானுமில்லை.

47. பிராரத்தப் போகம் புசிக்கும் போது இந்த இருவகையுமில்லை என்கிறது எப்படி?

இந்திர சாலத்திற் கந்தர்வ நகரத்தைப் பார்க்கிறவன் ஒரு போகத்தையும் விரும்பாமல் சிரித்து விட்டுப் போகிறாற்போல, திட ஞானிக்கு உலகு பொய்யாய் போன படியினாலே, விஷயமும் புசிக்கிறவனுமில்லாமற் எண்ணையற்ற விளக்குபோல் ஆசை, எண்ணம் எல்லாம் அணைந்துபோகும்.

48. பிராரத்த போகத்தைப் புசித்தால் கேடு ஏது?

கேடு இல்லை. விசாரணை செய்பவன் மேல் பார்வைக்கு அழகாக இருக்கிற போகங்களிலே ஆசை வைப்பதில்லை. குற்றங்களை பார்ப்பதால் அவைகளை விலக்கிவிடவே நினைப்பான்.

49. அனுபவிப்பதற்கிடமானவைகளில் என்ன என்ன குற்றம் இருக்கிறது?

பணத்தைத் தேடுவதிலும், அதை காப்பாற்றுவதிலும் துக்கமே அல்லாமல் சுகம் இல்லை. மாமிசம், தோல், எலும்பு முதலானவைகளால் பூட்டப்பட்ட பெண்ணினுடைய சரீரத்தில் எதுதான் உயர்ந்த வஸ்துவாக இருக்கிறது. பசித்தாலும் விடத்தை தின்னாதது போல ஞானி இவற்றை விரும்பான். இத்தகைய குற்றமுள்ள விஷயங்களைப் பிராரத்த கர்மத்தால் அனுபவிக்க நேர்ந்தாலும் துக்கத்துடனே அனுபவிப்பனே அல்லாமல் சுகத்துடன் அனுபவியான்.

50. அனுபவிப்பதில் துக்கம் ஏது?

இன்னும் இந்தக் கர்மம் தொலையவில்லையே என்கிறதே துக்கம்.

51. பிரம்ம ஞானம் இப்படி கிலேசமாயிற்றே?

இங்கு இந்த துக்கம் சம்சாரத்தில் ஏற்படும் துக்கமல்ல. வைராக்யமே தான் இது.

52. இந்த விரக்தி எதனால் வந்தது?

உலகு மாயாமயம் என்கிற திடஞானத்தினால் வந்தது. ஆகையினால் ஞானி கிடைத்தது கொண்டு திருப்தி அடைவன். அஞ்ஞானிக்கு எத்தனைப் போகம் கிடைத்தாலும் திருப்தி அடையான்.

53. அஞ்ஞானிக்குப் போகமெல்லாம் புசித்த பிற்பாடாகிலும் திருப்தி வராதோ?

மென்மேலும் நெய்யை விட்டதனால், அக்கினி அணைந்ததானால் அஞ்ஞானிக்கு போகத்தில் ஆசை அடங்கும். மற்றபடி வைராக்யத்தினால் மட்டுமே ஆசையடங்கும்.

54. ஞானியும் கர்ம வசத்தினாற் கிடைக்கிற போகம் புசிக்கிற வழியே அழுந்திப் போகானோ?

விரோதி அரசனால் பிடிபட்டுப் பின் விடுவிக்கப்பட்ட அரசனுக்கு ஒரு கிராமம் கிடைத்தது கொண்டு சுகப் படுவது போல ஞானியும் கிடைத்தது கொண்டு திருப்தி அடைவன். அறிந்து திருடுகிற திருட்டு திருட்டாகாதது போல பிராரத்த கர்மம் மேன்மேலும் ஆசை எண்ணங்களைத் தூண்டாது.

55. இத்தகைய விவேகம் மனதில் உறுதியாக இருந்தால் பிராரத்த கர்மம் மேல் எழுந்துள்ள ஆசையை எப்படி உண்டாக்கும்?

இச்சை, அனிச்சை, பரவிச்சை என்று பிராரத்தம் மூன்று வகையாய் இருக்கையினாலே ஆசையும் வரலாம்.

56. இது ஆகாது என்கிறதிலே யாருக்காவது ஆசை வருமோ?

அபத்தியம் பண்ணுகிறவனுக்கும், திருடுகிறவனுக்கும், அரச குலப் பெண்ணின் மீது ஆசை பண்ணுகிறவனுக்கும் தனக்கு ஆகாது(ஆபத்து) என்று அறிந்திருந்தும் ஆசை ஏன் வந்தது. ஆகையினால் இதை ஈசுரனாலும்

நீக்கமுடியாது. ஞானம் வந்தாலும் அவனவன் பிரகிருதி(குணம்) போகாது என்கிற கீதா வசனமே பிரமாணம்.

57. இக்கூற்று ஏழைகளுக்காக இரங்கிச் சொல்லப்பட்டுள்ளது. சாமர்த்தியம் உண்டானால் பிராரத்த கர்மத்தை மறிக்கலாம் அல்லவா?

அவ்வாறானால் நளன், ராமர், பாண்டவர்கள் துக்கப் பட காரணமே இல்லையே, ஈசுரனும் பஞ்ச காரியங்கள் செய்ய வேண்டிய காரணமேது. ஆகையால் ஈசுர ஆணையை(பிராரத்தத்தை) ஒருவராலும் நீக்கப்படக்கூடாது.

58. இச்சா பிராரத்த பலன் அறியப்பட்டது. இனி அனிச்சா பிராரத்தமாவது ஏது? பிரமாணந்தான் ஏது?

நாம் மனப்பூர்வமாக பண்ணக்கூடாது என்று இருக்கிற காரியத்தைக் கட்டாயத்தினாலே நம்மைக் கொண்டு பண்ணுவிக்கிறவன் யார்? நாம் வேண்டும் என்கிற காரியத்தை விலக்குவிக்கிறவன் யார்? என்று கேட்ட அர்ச்சுனனுக்கு, அவனவன் கர்மந்தானே செய்விக்கிறது என்ற கிருஷ்ணனின் வாக்கியமே பிரமாணம்.

59. இனி பரஇச்சா பிராரத்தமாவது எது?

தனக்கு இச்சை அனிச்சை இல்லாதிருந்தாலும் கூடியிருக்கிற வர்களைத் தொட்டு வருகிற சுக துக்கங்களே பரஇச்சா பிராரத்தம்.

60. இப்படியானால் எதை இச்சிக்கப் போகிறான் என்கிற வேதவசனம் ஆசையை மறுக்கச் சொல்வான் ஏன்?

இந்த வேதம் இச்சையை மறுக்கவில்லை. மற்று என்னவெனில் வறுத்த விதையைப் போல வாதிக்கிறது.

61. வாதிக்கிறதாவது ஏது?

வறுத்த விதை முளையாவிட்டாலும் உண்பதற்கு உதவுகிறாற் போல ஞானியினுடைய ஆசையும் அகப்பட்டதோடு திரும்பும் அல்லால் மென்மேலும் வினை கொண்டு காம சங்கற்பங்களைப் பண்ணாததே வாதை.

62. இவனுக்கு இப்படி விஷயத்திலே ஆர்வம் எதனால் உண்டாகவில்லை?

விஷயம் சத்தியம் என்கிற பிராந்தி இல்லாதபடியினால் இதிலே ஆர்வமில்லை.

63. விஷயப் பிராந்திக்கு குறிகள் ஏது?

நமக்கு இருக்கிற போகங்களெல்லாம் நாளுக்கு நாள் அதிகரிக்க வேண்டும், ஒருகாலும் மாறாத ஐஸ்வர்யமாக இருக்கவேண்டும். இடையிலே தடைகள் வாராதிருக்கவேண்டும் என்கிற தீவிர எண்ணம்.

64. இது எதனாற் போகும்?

வருகின்ற வினை வாராமற் இருக்க போகிறதில்லை. வாராத வினை ஒருக்காலும் வரப்போகிறதுமில்லை, என்கிற அறிவே அந்த தவறான கருத்தைத் தள்ளும்.

65. ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் பொதுவாய் இருக்கிற ஒரு விஷயம் ஒருத்தருக்கு பிராந்தியைக் கொடுப்பான் ஏன்? ஒருவருக்கு போதத்தைக்

கொடுப்பான் ஏன்?

தனக்கு அடைவில்லாததை அடையவேண்டும் என்று சங்கற்பித்த பிராந்தனுக்குத் துக்கத்தைக் கொடுக்கும். இது மாயாமயம் அல்லவா. உள்ளபடி முடியும் என்கிற ஞானிக்கு எண்ணத்தையே உண்டாக்காதது துக்கத்தை எப்படிக் கொடுக்கும்.

66. இந்த உலகை மாயாமயம் என்று பார்க்கிறது எப்படி? இதில் கவர்ச்சி எப்படி போகும்?

சொப்பனம் இந்திரஜாலம் போலவும் இன்னபடி வரும், இன்னபடி போகும் என்று தீர்மானிக்க முடியாமல் தோன்றி அழிந்து போவதால் மாயாமயம் என்று பார்க்க, அப்போது சொப்பனத்திற்கு சமானம் சாக்கிரம் (விழிப்பு) என்கிற நிலை உரைத்தால் இதில் கவர்ச்சி போகும்.

67. இந்த தத்துவ ஞானத்திற்குக் கண்டிப்பு எதிலே? பிராரத்த கர்மத்திற்குக் கண்டிப்பு எதிலே?

தத்துவ ஞானத்திற்கு 1) உலகு மாயக்கூத்து என்றும் 2) சொப்னத்திற்குச் சமானம் இந்த விழிப்பு (உலகு) என்பதிலே தான் கண்டிப்பு.
பிராரத்தத்திற்குச் சீவனுக்கு அவனுடைய புண்ணிய பாவங்களுக்குத் தக்கபடி சுக துக்கங்களைக் கொடுப்பதில் தான் கண்டிப்பு.(உலகு பொய்யாகும் பொழுது இந்தப்பிராரத்த அனுபவமும் பொய்யே).

68. பிராரத்த கர்மம் ஞானத்தைக் கெடாதோ?

சகத்தைச் சத்தியமாகத் தோற்றுவித்துப் பிராரத்த கர்மம் போகத்தைக் கொடுத்தால் அப்போது ஞானத்திற்கு விரோதம். உலகு மித்யை என்கிற ஞானத்தைக் கெடுக்காமல், சொப்பனம் இந்திரஜாலம் போலப் போக் அனுபவங்கள் கொடுப்பதனால் பிராரத்தம் ஞானத்தை கெடுக்காது. மேலும் அனுபவிக்கிறதினால் மாத்திரம் சத்தியத் தன்மை ஏற்பட்டுவிடாது. கனவு விசயங்கள் பொய்யாக இருந்தாலும் அனுபவம் கொடுக்கும்.

69. ஞானந்தான் பிராரத்த கர்மாவைக் கெடுக்காதோ?

ஞானம் வந்தவுடனே, உலகம் இல்லாமல் செய்யக்கூடியதேயானால் பிராரத்த உலகைக்கெடுக்கும். அப்படிச்செய்யாமல் உலகு மாயாமயம் என்று அறிவதனால் உலகுக்கு மறைவு ஏற்படாது. ஆகவே ஞானத்தினால் பிராரத்த கர்மாவும், பிராரத்த கர்மாவினால் ஞானமும் கெட்டுப்போகாது. ஒன்று மற்றொன்றுக்கு விரோதியல்ல.

70. எந்தநிலையில் இவனுக்கு உலகு தன்மயமாயிருக்குமோ, அந்த நிலையில் யார், எதை, எதனால் பார்க்க முடியும்? எதை முகர முடியும்? என்கிற வேதம், ஞானம் வந்தவுடனே சகலமும் மறைந்து போகும் என்றல்லவா சொல்கிறது ஆகையினால் ஞானிக்குப் பிராரத்த போகம் எப்படிக்கூடும்?

இந்த வேதம், சுழுத்தி நிலையையும், விதேக கைவல்ய நிலையையும் கருத்தில் கொண்டு சொல்கிறது. சீவன் முத்தியைச்சொல்லவில்லை என்று வியாச சூத்திரம் சொல்லுகிறது.

71. ஞானம் வந்தவுடனே, உலகம் மறைந்துவிடும் என்பதே உண்மையல்லவா?

அப்படியானால் யாக்ஞவல்கியர் முதலானோருக்கு ஆசாரியராயிருக்கும் தன்மை ஏற்படாது. ஆனால் யாக்ஞவல்கியர் முதலானோர் ஞானம் வந்த பின்பு சாஸ்திரங்களை இயற்றிச் சீடர்களுக்கு உபதேசித்தது, உண்மை ஞானம் உலகை துடைக்காது.

72. அவர்களுக்கு உலகம் தோற்றாத நிருவிகற்ப சமாதியிலேதான் ஞானம் உண்டு?

இவ்வாறு பார்க்கில் உலகு தோன்றாத சுழுத்தியும் ஞானமாக வேண்டும்.

73. ஆம். சுழுத்தியிலே நான் பிர்மம் என்ற ஞானம் இல்லை தானே ?

ஆகையினாலே நான் பிர்மம் என்கிற சீவன் முத்தியே ஞானம். உலகு மறைகிறதல்ல.

74. இந்த இரண்டும் கூடியே ஞானம் ஆகாதோ?

அப்படியானால் உலகம் தோற்றாமைக்கும் பாதிஞானம் உள்ளவைகள் ஆகும். முழுமையான ஞானம் ஆகாது. உலகு தோற்றாமைக்கு ஆத்மஞானம் இல்லையே என்று தான் சொல்ல வேண்டி வரும்.

75. ஆகையினால் ஆத்ம விசாரமே ஞானம் அல்லாமல், உலகத்தோற்றம் மறைகிறது இல்லை அல்லவா?

ஆத்ம தத்வ அறிவு தான் ஞானம் என்ற உண்மை தெரிந்தபோதே செய்யவேண்டியதெல்லாம் செய்து முடித்தவன். அறியவேண்டியதெல்லாம் அறிந்து முடித்தவன் ஆகிறாய்.

76. பொல்லாத மனதை நிறுத்தத் தேவையில்லையோ?

விருப்பமுள்ள பொருளை மாயாமயம் என்று பார்க்கிறது தானே, மனதை நிறுத்துகிறது என்று அர்த்தம்.

77. ஆசை என்பது அறியாமைக்கு அடையாளம் என்று இருப்பதால் அறிஞனிடம் எவ்வாறு ஆசைகூடும்?

ஆசைப்பட்டாலும் அறிவற்றவனைப் போல் ஆசைப்படமாட்டான் என்று அர்த்தம் பண்ணிக் கொண்டால்தான் இருவகையான சாஸ்திர வாக்கியங்களுக்கும் விரோத மன்னியில் சரியான அர்த்தம் கூடும்.

78. எந்த போகத்தை இச்சிக்கப்போகிறான் என்ற சொல்லுக்கு அர்த்தம் இதுவரை விளங்கினாற் போல அனுபவிக்கிறவன் யார் என்று கூறவேண்டும்?

அனுபவிக்கிறவனே இல்லை.

79. அனுபவிக்கிறவன் எதனால் இல்லை?

அனுபவிப்பவன் 1) கூடஸ்தன் எவ்வித பற்றுமற்ற தன்மை உடையவனாதலால் அனுபவிப்பவன் ஆகான். 2) சிதாபாசனுக்கு(சீவன்) தனியே இருப்பில்லாததால் அவனும் அனுபவிப்பவன் அல்ல. என்றால் அனுபவிப்பவன் என்று ஒருவன் தெரிகிறானே. அவன் யார் என்றால் இரண்டும்(கூடஸ்தனும் சிதாபாசனும்) கலந்தவன், என்று சொல்லுகிறதே

அல்லாமல் விவேகம் பண்ணினால் அனுபவிப்பவனே இல்லை.

80. எப்படியானாலும் ஆத்மா அனுபவிப்பவன் தானே?

ஆத்மா யாரென்று விசாரிக்குமிடத்தில் சகல வேதங்களும் இந்த இரண்டும் கலந்தவனிடமிருந்து ஆரம்பித்துக் கூடஸ்தன் மிஞ்ச வைக்கப் படுகிறான் கூடஸ்தரே ஆத்மா என்கிறது.

81. இரண்டும் கலந்தது எவ்வாறு?

அறிவில்லாமையினால், (சீவன் வேறு, கூடஸ்தன் வேறு என்ற அறிவில்லாமையினால்)கூடஸ்தனிடமுள்ள சத்யத்தன்மையை தன்மேல் ஏற்றிக் கொண்டு, தன்னிடம் உள்ள அனுபவிக்கிறவன் என்ற தன்மையையும் உண்மை யென்று நினைத்துக் கொண்டு அத்தன்மையை விட்டு விடுவதற்கு ஒரு நாளும் விரும்புவது கிடையாது.

82. இவ்வாரானால் இவ்விடத்தில் பண்ண வேண்டிய காரியம் ஏது?

உலக வாழ்க்கையிலே அனுபவிக்கிறவன், பிரியமாயுள்ள பொருள்களைவிட தன்னைப்பிரியமாய்க் காண்கிறார் போல, விவேகியும் கூடஸ்தருக்கு அன்னியமாயுள்ளவைகளையெல்லாம் பிரியமல்லாதது என்று தள்ளி, கூடஸ்தரிடத்திலே அதிகப் பிரியத்தைக் காணவேண்டும்.

83. பிரியமாய்க் காண்கிறது எப்படி?

பெண், சந்தனம், மாலை, தங்கம் முதலியவைகளில் (1) சாதாரண மனிதன் வைக்கிற ஆசையையும், (2) வாதங்கள், தேர்வுகளில் வெற்றி பெற நினைப்பவன் சாத்திரங்கள் முதலியவற்றை இடைவிடாது எவ்விதம் முயற்சிக்கிறானோ, (3) சுவர்க்கம் முதலியதை அடைய வேண்டுமென்கிற ஆசையினால் தியானம், யாகம் உபாசனை முதலானதை எப்படிச் செய்கிறானோ, (4) அணிமா முதலிய சித்திகளை அடைய விருப்பத்தினால் மனதை யோகி எவ்வாறு கஷ்டப்பட்டு அடக்குகிறானோ அதைவிட அதிக விசுவாசத்துடன் கூடஸ்தரிடத்தில் பிரியம் காணவேண்டும்.

84. கூடஸ்தரிடத்தில் பிரியம் பண்ணினால் பலன் ஏது?

சாதாரண மனிதன், வித்வான், பக்தன், யோகீ ஆகிய நான்கு பேர்கள் எவ்விதம் முயற்சி செய்தே பலனை அடைகிறார்களோ அவ்விதம் முத்தியை அடைய விருப்பம் உள்ளவன் நன்கு முயற்சி எடுத்துக்கொண்டு தேகம் முதலியவைகளில் இருந்து தன்னைப் பிரித்து கூடஸ்தராயிருக்கிற தன்னை மூன்று நிலைகளையும் கடந்தவராய், ஏகராய், சச்சிதாநந்தராய், சதாசிவமாய்க் கண்டவனுக்குச் சொப்பனம் போல புண்ணிய பாவ கர்மத் தொடக்கற்று முத்தனாவான்.

85. இப்படிக் கண்டவனுக்குப் புசிக்கிறவன் யார் என்று வகுப்பற்றது?

ஞாநியாயிருக்கிற சிதாபாசனுக்கு.

86. இவன் சாட்சியை விட்டு இராதபடியினால், இவனைப் பற்றிய போகங்கள் சாட்சியினிடத்திலும் அரோபிக்கப்படாதோ?

சிதாபாசன், ஓர் அவஸ்தையிலே கண்டது, ஓர் அவஸ்தையிலே காணாத

மாயாமயத்திற்கு உட்பட்டவன் ஆனபடியினால், தானில்லாமற் போகிறவனாகக் கண்டு, ஏங்கிச் சாகக்கிடக்கிறவன் திருமணம் செய்து கொள்ள விரும்பாதது போலத், தனக்கு உட்பட்ட போகம் வேண்டான். முன்போலத் தான் புசிக்கிறவன் என்று சொல்லுதற்கு மூக்கில்லாதவன் போலே குன்றிப், பிராரத்த போகம் புசிக்கிறபடியினால் இதை எப்படி சாட்சியினிடத்தில் ஆரோபிப்பான். ஆகையினால் வேதமும் புசிக்கிறவன் இல்லை என்று கூறுகிறது.

**87.** சரீரத்தை ஒட்டியாவது இவனுக்குத் துக்கமில்லையோ?

ஞாநிக்கு மூன்று சரீரங்களிலும் நான் எனது என்ற எண்ணம் போய்விட்டபடியினால், மூன்று சரீரத்துக்குள்ள நோய்களும் இவனைத்துன்புறுத்தாது.

**88.** மூன்று சரீரங்கள், அவைகளின் நோய்கள், அது இவனை துன்பப் படுத்தாது ஏன்?

தூலம் (தடித்த சரீரம்), சூக்குமம்(பிராணன், மனம், புத்தி, இவற்றோடு கூடியது) காரணம் (முன் சொன்ன இரண்டுக்கும் காரணம்) என்று சரீரங்கள் மூன்று. இதிலே வாதம் பித்தம் சிலேத்துமம் சம்பந்தமான துர்நாற்றத்துடனிருப்பது, காய்ச்சல், ஒடிந்து போவது முதலான வியாதியுடன் கூடியிருப்பது தூல சரீரம். சூக்கும சரீர வியாதிகள்-காமம், கோபம், லோபம் முதலியவைகளும், சமம்(மனோ நிக்கரகம்) தமம்(இந்திரியத்தடை) முதலியவை ஏற்படுவதினாலும், ஏற்படாததினாலும் மனிதனைப் பாதிக்கின்றன. காரணசரீரத்தில்(தூங்கும் போது ) ஆத்மா நாசத்தையே அடைந்தவன்போல் இருந்து கொண்டு தன்னையும் வேறுஎதையும் அறிகிறதில்லை. தவிரவும் காரண சரீரம், பின்னால் ஏற்படபோகும் (தூல, சூக்கும)துக்கங்களுக்கு விதையாக இருக்கிறது. நூலைப் பிரித்தால் புடவையில்லாதது போலவும், மண்ணை விட்டுக் குடம் இல்லாதது போலவும் அதற்குச் சொன்ன நோய்களைவிட்டால் அந்த அந்தச் சரீரங்களே இல்லை. இம்மூன்று சரீரங்களுக்கும் சொன்ன வியாதியே சுபாவசித்தம் போலச்சிதாபாசனுக்கு (சீவன்) பிரகாசமே சுபாவமே அல்லாமல் அவனுக்கு ஒரு நோயும் சுபாவமல்ல. இப்படிச் சிதாபாசனுக்கே முதலாயில்லாத வியாதி, ஆத்மாவாகிய தனக்கு வரக்கணக்கில்லை ஆகையினால் வேதமும் ஞாநிக்குச் சரீரத்தை ஒட்டிய துக்கம் இல்லை என்கிறது .

**89.** இப்படி இல்லாத துக்கம் முன்னால் எப்படித் துண்புறுத்தியது?

அறியாமையினால் மனைவி மக்கள் துன்பப்படுவதைத் தான் துன்பப்படுபவன் என்கின்ற மூர்க்கன் போல மூன்று சரீரங்களையும் சாட்சியையும் கூட்டி தன்ரூபமாய் எண்ணிக் கொண்டுச் சரீரம் துன்பப்படுவதை தான் துன்பப்படுவதாகப் பிரமிப்பன்.

**90.** ஞானம் வந்த பின்பாகிலும் துன்பப்படாமல் இருக்கவேண்டுமே அல்லாமல்

திரும்பத் துன்படுவானேன்?

விவேகத்தினால் அறியாமையைத் தள்ளித் தன்னைச் சாட்சியாக அறிந்தபின் முந்தின துன்பம் போய்விட்டது. இந்த அற்பப்பொருளுக்காக ஏன் ஓடி இடுப்பைமுறித்துக் கொண்டோம் என்கிறதுபோல இல்லாத சம்சாரத்தை(அறியாமையை ) ஏன் மேலே போட்டுக்கொண்டோம் என்கிற வெறுப்பு (வருத்தம்) தவிர துன்பமில்லை.

91. அறிவு ரூபமாகிய யான் சரீரம் முதலானவைகட்கு வேறானவன் என்று அறிந்தாற் போதாதோ? தேகம் நானல்ல என்று பலவிதமாக எந்நேரமும் எண்ண வேண்டுமோ?

இல்லாத சம்சாரத்தை (ஆத்ம)சாட்சியாகியதின் பேரில் ஏற்றினேன். அதைபொருத்துக் கொள்ளும் என்றும். பண்ணின பாவம் போக பிராயச்சித்தம் பண்ணிக் கொள்கிறாற் போலவும் முன் பிறவிகளிலே செய்த புண்ணிய பாவக்கூட்டங்கள் போகத் தக்கதாகவும் திரும்ப திரும்ப தேகம் முதலான வைகள் நானல்ல என்று எண்ணுவது. மிலேச்சர் (வேற்று மதத்தவர்), கையில் அகப்பட்ட, சாஸ்திரங்களை முறையாக ஓதிவரும் பிராம்மணன் அப்பாவம் நீங்க பிராயச்சித்தம் பண்ணி பிராம்மணருடன் கூடினபின்பும் மிலேச்சர்களைக்கண்டால் ஒடுகிறார்போல தேகம் நானல்ல என்று திரும்ப திரும்ப எண்ணுதல்.

92. ஞாநியானவன் முன்போல உலகவிவகாரம் பண்ணாமற் நாணுவானேன்?

தன் பெண் குறியில் குட்டம் பிடித்த வேசி அறிந்தவர் முன் நாடகமாட நாணுகின்றாற் போலச், சீவனும் தான் மாயாமயம் என்று அறிந்த பின் தன்னைக் கர்த்தா என்று சொல்ல நாணுவான்.

93. ஞானம் வந்தபின் நாணமும் நடுக்கமும் வரலாமோ?

அரச குமாரன் அரச பதவில் உள்ள ஆசையினால் அரசனைப்போலவே நடந்து கொள்கிறாற் போல, பிரம்மத்தை அறிந்தவன் பிரம்மமேயாவன் என்ற வேதவசனம் கேட்டுப் பிரம்மரூபத்தைக் கம்பீரமாகத் திரும்பத் திரும்ப என்நேரமும் எண்ணுவதே அல்லால், பயப்படுவதில்லை.

94. பிரமஞானம் சீவன் நான் என்கிற தவறான எண்ணத்தை நீக்க வந்த படியினால், எவனாகிலும் தான் சாக மருந்து குடிப்பானோ?

கங்கையில் மூழ்கி இறந்தால் தேவனாகலாம் என்ற மகிழ்ச்சியினாற் கங்கையில் மூழ்குவது போலப் பிரம்மாகலாம் என்ற மகிழ்ச்சியால் ஞானம் அப்பாசிப்பன்.

95. கங்கையில் மூழ்கினவுடனே தேவனாகிறாற் போல, ஞானம் அப்பாசிக் கிறவன் உடனே பிரம்மம் ஆகவில்லையே?

சரீரத்தை ஆரம்பித்த பிராரத்த கர்மம் முடிந்து சரீரம் நீங்கும் காலம் வரை மனிதன் என்கிற பேர் நிற்கிறாற் போல, பிராரத்தக் கட்டில் உள்ள தேகம் நீங்கும் காலம் வரை சீவன் என்கிற பேர் நீங்காது.

96. கயிறு என்று அறிந்த பின் பாம்பு என்ற பயம் போகவில்லையா?

ஆம். ஆனால் பாம்பு என்றபயம் போக சிறிது காலம் தேவைப்பட்டது போலவும், தன் உடன் வந்தவன் காணவில்லையே என்று வருத்தப்பட்டு இடித்துக் கொண்ட புண் வலி சிறிது சிறிதாக நீங்குவது போலவும், ஆரம்பமான பிராரத்த கர்மபோகமும் அனுபவித்தே நீங்கும்.

97. ஞானம் வந்த பின்னும் பிராரத்த துக்கம் இருந்தாற் துக்க நீக்கம் என்கிற ஆறாம் ஞானநிலை எவ்வாறு கூடும்?

தன்னுடன் வந்த பத்தாவது ஆளைச் சாகாமற் கண்ட சந்தோஷம் புண்வேதனையைத் தெறிய ஒட்டாதது போல, தானே பிரம்மம் என்று முத்தனான சந்தோஷம், பிராரத்த துக்கத்தைத் தெரியவொட்டாது. ஆகையால் ஆறாவது அவஸ்தை கூடும்.

98. சிதாபாசனுடைய ஆறாவது அவஸ்தையும் தெறிந்தது. இனித் தடையற்ற ஆனந்தத்தை விவரமாய்கூற வேண்டும்?

இந்த உலகம், சுவர்க்கலோகம் குறித்துப் பண்ண வேண்டிய கர்மமெல்லாம் பண்ணி முடிந்தபடியினால், மோட்சமும்(ஆத்மாவும்) பிரம்மமும் நாம் என்று அறிந்தபடியினால் மனதிலே ஒரு குறையுமில்லை என்று அறிந்தது கொண்டு தடையற்ற ஆனந்தம் உண்டு.

99. வேதத்தில் சொல்லப்பட்ட கர்மம், பக்தி, யோகம் என்று சொல்லப்பட்ட காண்டம் மூன்றிலும் சொன்ன காரியத்தில் ஒன்றும் பண்ணாமல் இருக்கையிலும் எல்லாம் பண்ணிமுடிந்தவன் என்றது எப்படி ?

எல்லாம் முடிந்த விஷயம் என்பதை ஞாநியினுடைய பழக்கவழக்கங்களில் இருந்து அறியலாம்.

100. பண்ணவேண்டியது, அறியவேண்டியது எல்லாம் தேவையற்றுப் போனது என்பவற்றை எனக்கு தெறியச் சொல்லவேண்டும்?

நான் துக்கி என்கிற அஞ்ஞானிகள் மனைவி, மக்கள் முதலானதை விரும்பி தேடட்டும். உத்தமமான ஆனந்தம் நிரம்பிய நான் எதை ஆசைப் பட்டு அலையவேண்டும். மேல் உலகம் செல்ல விரும்புபவர்கள் அதற்கான புண்ணிகர்மாக்களை செய்யட்டும். எல்லா உலகமாகவே இருக்கும் நான் எதற்கு கர்மாக்களைச் செய்யவேண்டும். பிரமலோகத்தை அடைய வேண்டியவனுக்கு வேத சாத்திரம் கற்கவேண்டும். எனக்கோ எவ்வித செயலும் இல்லாததனால் அதில் அதிகாரம் இல்லை. தத்துவத்தை அறியாதவர்கள் வேதத்தைக் கேட்கட்டும். அறிந்த எனக்குத் தேவையில்லை. வேதங்களில் சந்தேகம் உள்ளவனுக்கு மனனம் பண்ணவேண்டும். தேகம் நாம் என்று ஒருக்காலும் எண்ணோம். சந்தேகமற்ற பிரம்மமாயிருக்கிற நமக்கு மனனம் தேவையில்லை. தவறான எண்ணம் உள்ளவர் வேதக்கருத்துகளில் தெளிவு அடையவேண்டும். தேகமே ஆத்மா என்ற விபரீத எண்ணம் வராத எனக்கு தெளிவு தேவையில்லை. எதனால் எனக்கு விபரீத எண்ணம் கிடையாதோ அதனால் எனக்கு சமாதியும் கிடையாது. கேட்டல், சிந்தித்தல், தெளிதல் ஆகியவை அனைத்தும் அந்த கரணத்துக்கே

ஆகையால் பண்ணவேண்டியதெல்லாம் பண்ணி முடிந்தது.

101. சரீர விவகாரம் இருக்கும்போதே உமக்கு எப்படி விபரீத எண்ணம் இல்லை? தூக்கம், பிட்சை, குளித்தல், சுத்திசெய்தல் இந்த நான்கும் நீர் பண்ணக் கண்டோமே?

விவகாரம் குலாலச்சக்கரம் போல, வாசனைபலத்தினால் நடக்கிறது நான் செய்கிறேன் என்ற விபரீத எண்ணம் இல்லை. ஒருவன் நெருப்பு என்று சொன்னது கொண்டு குன்றிமணிச்செடி வேகாதது போல, நீர் நம்மை கர்த்தா என்று சொன்னது கொண்டு நாம் தூக்கம் முதலானவைகளைப் பண்ணினவன் ஆகோம்.

102. இப்படி வாசனையினால் வருகிற விவகாரமும் போக வேண்டாமோ?

பிராரத்த கர்மம் இருக்கு மட்டும் விவகாரம் போகாது.

103. உம்முடைய விவகாரத்திற்கு விதியேது?

உயர்ந்த, தாழ்ந்த, மத்திம காரியங்கள் பிராரத்த பிரிவின்படி நடக்கிறதே விதி.

104. அப்படியானால் உம்மிடத்தில் சகலருக்கும் அவமரியாதை வரும். உம்மைப் பெரியவர் என்று ஞானம் கேட்பாரும் இல்லை, உம்முடைய ஞானம் உமக்கே பிரயோசனம். பிறரை ஈடேற்றாதே?

நான் செய்ய வேண்டியதெல்லாம் செய்து முடித்தவன் ஆனாலும், உலக மக்களின் நெறிப்படி நான் இருக்கிறேன். தேவதைகளை அர்ச்சித்தல், குளித்தல், சுத்தி செய்தல், பிட்சை முதலியவற்றை சரீரம் செய்யட்டும். வாக்கு பிரணவத்தை உச்சரிக்கட்டும். உபநிடதங்களை வாசிக்கட்டும். மூர்த்தி தியானம், பிரமத்தியானத்தை மனது பண்ணட்டும். இவைகளை நான் என்ற ஆத்மா பண்ணினவனுமல்ல, நான் பண்ண சொன்னவனுமல்ல. இப்படி நாம் இருப்பதால் கர்மாவில் ஈடுபாடு உள்ளவர்களுக்கும் நமக்கும் சண்டையில்லை. நம்முடைய ஞானம் பலருக்கும் உபகாரமாம்.

105. கர்மத்திற்கு நிபந்தனைகள் யாவை? ஞானத்திற்கு நிபந்தனைகள்யாவை?

ஞாநியால் பொய் என்று தள்ளப்பட்ட மனம் வாக்கு சரீரம் இவைகளை கொண்டு கர்மி காரியங்களைப் பண்ணட்டுமே. இம் மூன்றுமே கர்மத்திற்கு நிபந்தனைகள் அல்லாமல் சாட்சியினிடத்திலே இல்லை. ஞானத்திற்கு நாம் அசங்கன் என்கிறதிலே நிர்பந்தமல்லாமல் மூன்று வித கரணங்களிடத்தில் நிர்பந்தமில்லை. திரிவித கரணத்திற்கும் கர்மத்தை விளக்கத்தேவையில்லை. ஞாநி தன்னைப்பிரம்மம் என்று அறிந்தது கொண்டு கர்மிக்கு கேடு ஏது?

106. இப்படி எல்லோரும் அறியாமல், ஆத்மாவை மூன்று வித கரணத்தோடே கூடக் கர்த்தா என்கிற கர்மிகளும், ஞானம் வந்தவுடனே மூன்று வித கரணத்திற்கும் ஒரு வித கர்மமும் வேண்டாம் என்று இருக்கிற ஞாநிகளும் ஒருவருக்கொருவர் சண்டைக்கு நிற்பானேன்?

செவிடர்கள் கதை கேட்டார்போல அவர்கள் அஞ்ஞானத்தினாலே

சண்டைக்கு நிற்கிறார்கள்.

107. ஞானிக்கு பிரவிருத்தி (ஒன்றை அறியவேண்டும்) காரியம்வேண்டாம் என்பது இருக்கட்டும். நிவிருத்தி(எல்லாவற்றிலிருந்தும் விலகல்) [illegible] வேண்டாமோ?

அறிந்தவன் அறிந்து விட்டபடியால் அறியவிரும்பமாட்டான். ஆகையால் பிரவிருத்தி அவனுக்கு உபயோகப் படாது என்றால், அறிந்தவன் அறிந்திருக்கிற படியால் மறுபடியும் அறிவது கிடையாது. ஆகையால் அதற்கு சாதனமான நிவிருத்தி தேவையில்லை.

108. நிவிருத்தி ஞானத்திற்குச் சாதனமல்லவோ?

அறிந்தபின் சாதனம் எதற்கு.

109. தோற்றுகிற சகத்தினால் மீண்டும் அஞ்ஞானப் பிராந்தி வந்தால் சாதனத்தை அப்யாசித்தால் குறைவில்லையே?

உயிரோடு இருக்கிற எலியே பூனையைக் கொல்லாதென்றால் செத்துப் போன எலி பூனையைக் கொல்லப் போகிறது என்றாற் போலவும், [illegible] அம்பினால் கொல்லப்படாதவனை, அற்பமான அம்பினால் [illegible] படுமென்றாற் போலவும், அநாதியிலே அஞ்ஞானமும் அதன் காரியமான ஆவரணம், விட்சேபம் எல்லாம் சேர்ந்து கொல்லப்படாத அறிவே ஞானமே திடஞானத்தினாலே கொல்லப்பட்டிருக்கிற அஞ்ஞான [illegible] திரும்பவும் கட்டுப்படுத்தும் என்கிற உன் புத்தி குறைவே ஒழிய வேறில்லை.

110. அஞ்ஞானம் அதன் காரியங்களாகிய காமம், கர்மா நீக்கப்பட்டு போனாலும், சகத்தைத் தோற்றுகிறதைக் கண்டுச் சாதனம் அப்யாசிக்க வேண்டாமோ?

தோற்றினால் என்ன, இத்தனை நாளல்லவோ [illegible] படுகளம் பார்க்கிற போத அரசனுக்கு அதனால் திருப்தியே [illegible] இப்படிப்பட்ட போத ராசனுக்குத் தேவாதிகளிடமிருந்து வருகிற [illegible] நிவிருத்தியினால் தான் பிரயோசனம் வரும்.

111. பிரவிருத்தியாகாத [illegible]

சுவர்க்க மோட்ச[illegible]

ஆகும்.

112. அப்படி[illegible] ஞானி [illegible]

காரியம் ஏ[illegible]

குழந்தை[illegible]

மில்லாம[illegible]

திரும்பத்[illegible]

வாக்கு.

ஞானம் ஏ[illegible] செய்யும் [illegible]

113. ஞானிக்கு ஞான அப்பியாசம் பண்ணுகிற பேர்களுட[illegible] குகும் போது செய்காரியம் ஏது?

ஞானங்களைப் போதித்துக் கர்மங்களைத் தூஷித்துக் கர்மாதிகளைத் துறந்து காட்டவேண்டும்.

114. ஞானி தனித்திருக்கும் போது செய்காரியம் ஏது?

செய்யவேண்டியதெல்லாம் செய்து முடித்தாயிற்று என்ற தன்னுடைய ஆனந்தத்தைக் கண்டு களித்து மகிழ்ந்து, பிரம்மமே நாம் என்று அறிய என்ன புண்ணியம் பண்ணினோமோ. நம்முடைய அஞ்ஞானம் எந்த வழிபோயிற்றோ.

நாம் பண்ணின அதிஷ்ட முயற்சியினாலே நமக்கொரு சம்சாரமும் இல்லாமற் போயிற்றே. நமக்கு பிரம்மாநந்த நிலை வெட்டவெளியாகத் தோற்றக்கிடைத்ததே உலகிலே எல்லோரையும் பிடித்த நான் கர்த்தா என்கிற அகங்காரம் நமக்குத் தேவையற்று போன பாக்கியம் ஏதோ ? எல்லாராலும் அடையவேண்டுமென்கிற பிரம்மம் நாம் ஆனோமே, நமக்கு இத்தனை பாக்கியத்தையும் கொண்டு வந்து விட்ட சாத்திரத்தைப் புகழ்வோமோ இந்த சாத்திரத்தை அனுபவத்திற்கு வர பயிற்றுவித்த குருவைப் புகழ்வோமோ, என்ன புண்ணியத்தினால் இப்படிப்பலித்ததோ, நம்முடைய புண்ணியத்திற்கும், நம்முடைய ஞானத்திற்கும், நம்முடைய ஆனந்தத்திற்கும் உவமை காணோம் என்று எந்நேரமும் தன் சுபாவ ஆனந்தத்திலே அனுபவமாய் அனுபவிக்கிறதே செய்காரியம்.

இந்த திருப்தி தீபிகையை எந்நேரமும் சிந்தித்துக் கொண்டிருப் பவனுக்குப் பிரம்மாநந்தத்தில் அழுந்தி நித்திய திருப்தனாய் இருப்பன்.

---

# 3. கூடஸ்ததீபம்

முன் அத்யாயங்களில் கூடஸ்தன் என்று சொல்லி வந்த பிரத்யக் ஆத்மா(உள்ளேயுள்ள ஆத்மதத்துவம்) சுத்த அறிவு ரூபமாயிருந்து கொண்டு உள்ளேயும் அளவுக்கு உட்பட்டது போல் எப்படி இருக்கிறது என்பதையும், அதை சீவன் எப்படி அறிந்து கொள்ள முடியும் என்பதையும் இந்த அத்யாயத்தில் வித்யாரண்ய குருவானவர் பலவித உதாரணங்கள் மூலமாக விவரித்துச் சொல்கிறார்.

1. நீ என்ற பதத்திற்கு மேல் எழுந்தவாரியான அர்த்தம் யாது? உண்மையான அர்த்தம் யாது? இந்த இருவகையும் பொருந்தி இருக்கிறதற்கு உதாரணமேது?

நீ என்ற பதம் மேல் எழுந்தவாரியாக சிதாபாசனையும், உண்மையாக கூடஸ்தர். உதாரணம் எது என்றால் கண்ணாடியிற் பிரதிவிம்ப வெய்யிலும், சுபாவ வெய்யிலும் ஒருமைப்பாடாய் ஒரு சுவரை விளக்குகிறாற் போலக் கூடஸ்தரும் சிதாபாசனும் ஒருமைப்பாடாய் ஒரு தேகத்தை அறிகிறார்கள்.

2. இவர்கள் இருவரும் எதனால் ஒருமைப்பாடாய்த் தோற்றுகிறார்கள்? இவர்களைப் பகுத்தறியும் வழி ஏது?

அறியாமையினாற் ஒருவராகத் தோற்றுகின்றது. ஒரு காலத்தில் ஏகதேசமாய்த் தோன்றி மறைகிற சிதாபாசனையும் நித்திய பிரகாச மாயிருக்கிற கூடஸ்தரையும், ஏகதேச உபாதியினால் உலைகின்ற வெய்யிலையும் அகண்ட வெய்யிலையும் போலக் குறிப்பினால் அறியலாம்.

3. சரீரத்திற்கு வெளியே விடயங்களின் அறிவு வரும்போது எவ்வாறு கூடஸ்தரையும் சிதாபாசனையும் பிரித்து அறிவது?

குடத்தினுடையது போன்ற உருவத்தை மட்டும் கொண்ட புத்தி விருத்தியில் பிரதிவிம்பித்திருக்கும் சைதன்யம்(சிதாபாசன்) (குடத்தை மாத்திரம் தான் பிரகாசிக்கச் செய்யும்) குடம் அறியப்பட்டு இருக்கிறது என்பது பிரம்ம சைதன்னியத்தினால் பிரகாசிக்கிறது. குடம் என்று அறிந்தவுடன் அணைந்தவன் சிதாபாசன் அதனைக்கண்டவன் கூடத்தன்.

4. குடத்தை பற்றிய ஞானம் வருகிறதற்கு முன்னும் பின்னும் குடத்திலே கூடத்தர் இருந்ததற்கு அடையாளமேது?

இரண்டு காலத்திலும் சைதன்னியத்துடன் அறிவு இருந்தே இருக்கிறது. அந்தந்த காலத்தில் அறியப்படும் விஷயம் மாத்திரம் அஞ்ஞானத்தினால் அறியப்படவில்லை என்றும், பின்னர் அறியப்பட்டு விட்டது என்றும் வேறுபடுகிறதே தவிர அறிவில் வித்யாசமில்லை.

5. ஞானமாவது ஏது?

சிதாபாசனை முன்னிட்டுக் கொண்டிருக்கும் சிதாபாசந்த ஈட்டியைப்போல புத்தி விருத்தியே ஞானம்.

6. அஞ்ஞானமாவதேது?
தனக்கு எனத் தோற்றமில்லாமையே அஞ்ஞானம்.

7. புத்தி விருத்திக்கு முன் சிதாபாசனில்லாத படியினால் அறியப்படாத குடம் கூடத்தன் தானே அறிய வேண்டும். விருத்திக்குப் பின் அறியப்பட்டது குடம் என்கிறது சிதாபாசனால் அறியலாம். கூடத்தர் என்கிறது வேண்டாமோ?

குடம் என்று அறிந்தவுடன் சிதாபாசன் அணைந்து போனபடியினாலும், அந்த அவசரத்தில் கூடத்தரைத் தவிர வேறு அறிவு இல்லாதபடியினாலும், விருத்திக்கு முன் அறியப்படாததை அறிந்திருந்த கூடத்தர்தானே விருத்திக்குப்பின் அறியப்பட்டது என்கிறதையும் தோற்றுவிக்கிறதற்கு சந்தேகம் தேவையில்லை. ஆகையால் இரண்டு காலத்திலும் குடத்தை அறிகின்றவர் கூடத்தர்தானே.

8. குடஅறிவு வந்தவுடனே சிதாபாசன் நட்டமாய்ப்போனாலும், அவனோடு கூட நட்டமாகாதிருக்கின்ற விருத்தியினால் குடம் அறியப்பட்டது என்று தோற்றலாம். கூடத்தரால் என்கிறது தேவையில்லையே?

சிதாபாசனில்லாத புத்திவிருத்தி மற்ற உணரும் கருவிகளைவிட உயர்ந்தது ஆனாலும் வெள்ளைமண் போலச் சடம் ஆனபடியினால், குடம் அறியப்பட்டதைத் தோற்றுவிக்கமாட்டாது. கூடத்தார்தானே தோற்றுவிக்கிறார்.

9. கூடத்தரிடத்திலே கற்பிக்கப்பட்ட குடம் அஞ்ஞானத்துடனே கூடினாலும் விருத்தியுடனே கூடினாலும் அறியப்பட்டதென்னக் கூடாமல் போனால் அறியப்பட்டது என்கிற பேர் எதனால்?

சுத்தசைதன்னியம் புத்தியில் பிரதிபலித்து சிதாபாசனாக ஆனால் தான் உலகத்தில் உள்ள பொருட்கள் அறியப்பட முடியும்.

10. சைதன்யத் தொடக்குத்தானே அறியப்பட்டதற்கு மூலமானால், முன் சாட்சி சைதன்யத்துடனே கூடினது கொண்டு அறியப்பட்டதாக ஒண்ணாததோ?

விருத்திக்குப்பின் பிரதிபலன சைதன்னியத்திற்கே பிரயோசனம் ஆகவேண்டுமே அல்லால் முன்னிருந்த கூடத்தருக்குப் பிரயோசனம் என்னக் கூடாது.

11. அறியப்படாததைத் தோற்றுவிக்கும் நிமித்தம் அஞ்ஞானம் இருப்பது போல, அறியப்பட்டதை தோற்றுவிக்கும் நிமித்தம் புத்தி போதும். சிதாபாசனால் என்ன பிரயோசனம் ?

பிரகாச ரூபமான சிதாபாசன் இல்லாத புத்திவிருத்தி வெள்ளை மண் போல அறிவற்றதால், அறியப்பட்டதைத் தோற்றுவிப்பதற்குக் காரணம் ஆகாது.

12. முடிவுதான் ஏது?

உலகப் பொருட்களிலே சிதாபாச ரூப பல விருத்தியினாலே (புத்தி விருத்தியும் சிதாபாச ரூப பிரகாசமும் கூடியே) அறியப்பட்டதென்னும் ஞானம் எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

13. ஆயினும் சிதாபாசனைக் கற்பிக்கிறது சரியல்ல . எதனால் ஏனின் பிரம்ம சைதன்னிய ரூபமாகவே பலம் இருத்தலால். பிரமசைதன்னியம் பிரமாணத்தின் பிரவிருத்திக்கு முன்னே இருத்தலாலும், பலமோ பிரமாணத்தின் பிரவிருத்திக்குப் பின்னே உண்டாவதலாலும் பிரம சைதன்னியம் பலமல்ல.

. பிரம சைதன்னியத்தைக் கூடத்தரென்று விவகரித்ததற்கு விபரம்:- மொழிபெயர்த்த ஆசிரியர் கூடத்த பிரமங்களுக்கு வேற்றுமை இல்லாமை பற்றி , மூல சுலோகத்தில் குடத்தில் பிரமசைதன்னியம் முன்னும் பின்னும் உள்ளது என்பதைக் கூடத்தர் என்றே விவகரித்தனர்.

14. இப்படியானால் கூடத்தருக்கும் சிதாபாசனுக்கும் வேற்றுமை ஏது?

குடத்தை மாத்திரம் காண்கிறவன் சிதாபாசன். குடம், புத்தி விருத்தி, சிதாபாசன் இம்மூன்றையும் காண்கிறவர் கூடத்தர்.

15. இப்படியானால் எல்லாச் சாஸ்திர ஆசிரியர்களும் பொருளின் ஞானத்தில் இரண்டு சைதன்னியத்தையும் ஏன் பகுத்து சொல்லவில்லை?

கூடத்தர் என்ற சொல்லால் ஞானத்தின் ஞானம் என்று பேரிட்டு பகுத்தறிவர்.

16. தேகத்திற்கு வெளியே சிதாபாசனையும் கூடத்தரையும் பிறித்து அறிந்தாற் போலத் தேகத்திற்கு உள்ளாகவும் இவர்கள் இருவரையும் பிறித்தறியும் வழி யாது?

வெளியில் இது என்கிற விருத்தியும், குடம் முதலியவைகள் அதற்கு விஷயமும் அவைகளின் உடன்பாடு , எதிர்மறையும் அறிகிறவரே சாட்சி என்றும் அறிகிறாற் போல தேகத்திற்குள்ளும் நான் என்கிற விருத்தியும் காமம் கோபம் முதலியவை அதற்கு விஷயமும் இவைகளின் உடன்பாடு எதிர்மறைகளை அறிகிறவர் சாட்சி.

17. உள்ளே சிதாபாசனின் தோற்றம் எப்படி? சாட்சி(கூடத்தர்)யின் தோற்றம் எப்படி?

காய்ச்சின இரும்பில் இருக்கிற நெருப்பு அந்த இரும்பை மாத்திரம் தோற்றுவிக்கிறதே அல்லாமல் மற்றொன்றையும் தோற்றுவிக்காதது போல, காமக் கோப முதலியன நான் என்ற விருத்தியிற், கலந்திருக்கிற சிதாபாசனும் தான் மாத்திரம் தோற்றுகிறதே அல்லாமல் அன்னியமாயிருக்கிறதைத் தோற்றுவிக்க மாட்டான். சாக்கிர, சொப்பனத்தில் விருத்திகளையும், விருத்திகளின் இடைவெளியையும், சுழுத்தி மூர்ச்சை சாமாதிகளில் இவைகள் இல்லாததையும் தோற்றுவிக்கிற நிர்விகார சைதன்யமே கூடத்தர்.

18. வெளியில் விருத்தியில் அறியப்பட்டதையும் அறியப்படாததையும் காண்கிற

வழியாகக் கூடத்தரைக்காண்பித்தது போல், உள்ளில் விருத்தியிலும் அதன் வழியாகக் காண்பியாமல் வேறோரு வழியாக காண்பித்தது ஏது?

உள்ளில் விஷயமான விருத்தியானது; வெளியிலுள்ள குடம் போல் ஞானம் அஞ்ஞானம் இரண்டோடும் கூடாதது கொண்டு அந்த வழி தேவையில்லை.

19. விருத்தியில் அஞ்ஞான வியாப்தி, ஞானவியாப்தி இரண்டும் ஏன் இல்லை?

விருத்தியானது குடம் போலத் தனக்கன்னியமாகாதபடியினால் ஒருக்கால் ஞான வியாப்தி வந்தது என்னக்கூடாது அன்னிய பதார்த்தத்திலே அஞ்ஞானத்தைப் போக்குகிறபடியினால் இந்த விருத்தியில் அஞ்ஞான வியாப்தி வரக்கணக்கில்லை.

20. இப்படி உள்ளிலும் புறம்பிலும் நான் என்று தோற்றுகிற சைதன்னியம் இருவகை என்று சாதித்ததற்கு பிரயோசனம் ஏது ?

இந்த சைதன்னியம் இரண்டிற்குள்ளே, கற்பிதமாக இருக்கிற சிதாபாசன் பிறப்பு இறப்போடு கூடிய சம்சாரி என்றும், கூடத்தராய் சுபாவமாய் இருக்கிற தனக்கு ஒருக்காலும் சம்சாரம் இல்லை என்கிறதே பிரயோசனம்.

21. புத்தியிலே வளைபட்ட கூடத்த சைதன்னியம் சம்சாரியாகட்டும், சிதாபாசன் ஆகவேண்டாமே?

அசங்க சைதன்னியத்திற்கு ஒரு காலத்தில் வளைபட்டது கொண்டு சம்சாரம் வருமேயானால், குடம் குதிர்களிலே வளைபட்ட சைதன்னித்திற்குச் சம்சாரம் வரக்காணோம்.

22. குடம் போல் அந்தக்கரணம் அசுத்தம் அல்லவே, சுத்தத்திலே வளை பட்டாற் சம்சாரம் வரும்?

வெண்கல மரக்காலால் அளந்தது கொண்டு அளக்கப்பட்ட பொருள் இரண்டு மூன்று பங்கு ஆகாதது போலச் சுத்தமான அந்தக்கரணத்தினால் அதிசயம் ஒன்றுமில்லை.

23. மரப்படி வெண்கலப் படி ஒன்றானாலும், வெண்கலத்திலே பிரதிவிம்பம் கண்டாற் போலக், கடத்திலும் புத்தியிலே பிரதிவிம்பம் அதிசயமல்லவோ?

அப்படியானால் இந்தப் பிரதிவிம்பம் தான் சிதாபாசன். இவனுக்கே சம்சாரம். ஆத்மாவிற்கு இல்லை.

24. உபாதியை தவிர ஆபாசனுக்கு வேறு சொரூபம் இல்லாதபடியினால் அந்தக்கரணத்திற்கே சம்சாரம் இருக்கட்டும் சிதாபாசனுக்கு சம்சாரம் வேண்டாமே?

இப்படியானற் சரீரத்தைத் தவிர அந்தக்கரணத்தைப் புறம்பாக காணப்படாத படியினாற் சரீரத்திற்கே சம்சாரம் ஆகவேண்டும்.

25. சரீரம் மரித்தாலும் புத்தி மரியாது என்கிற சாஸ்திரத்தினால் சரீரத்தை தவிர அந்தக்கரணம் வேறாக வேண்டும்?

இப்படியானாற் புத்தியைத் தவிரச் சிதாபாசனும் வேறே உண்டென்று பிரவேச உபநிடத்திலே சொன்னபடியினால் சிதாபாசனுக்கே சம்சாரம்.

அந்தக்கரணத்திற்குத்தேவையில்லை.

26. பிரவேச உபநிடத்திலே புத்தியோடு கூடினவனுக்கே சரீரப் பிரவேசம் சொல்லுகிறது. புத்திக்கு அப்பாற்பட்டவனுக்குச் சொல்லவில்லையே?

சடந்தேகம் என்கிற வாக்கியம்,நாம் இல்லாவிட்டாற்சரீரங்களும், இந்திரியங்களும் சீவிக்கமாட்டாதென்றும், ஆத்மா பிரவேசித்தார் என்கிறபடியினால் அந்தக்கரணத்திற்கு அன்னியனாய் இருந்தவனுக்கே பிரவேசம் சொல்லுகிறது.

27)அந்தக்கரணத்திற்கு அப்பாற்பட்டவன் அசங்கனல்லவோ, அவனுக்கு எப்படி பிரவேசம்கூடும்?

என்றால் இவருக்குச் சிருஷ்டிதான் எப்படிக் கூடும்.

28) அசங்கனுக்குப்பிரபஞ்ச சிருஷ்டியில்லையே, மாயாகற்பி தனுக்கல்லவோ சிருஷ்டி?

பிரவேசம்தானும் மாயா கற்பிதனுக்கே அல்லாமல் அசங்கனுக்கு இல்லை.

29). சிருஷ்டித்தவரும் பிரவேசித்தவரும் கற்பிதம் என்கிறதற்குப் பிரமாணம் ஏது?

மாயை, அவித்யை என்கிற இரண்டும் சீவன் ஈசுரன் என்கிற ஆபாசரைக் கற்பித்தது என்கிற வேதமும், இவர்களை உற்று விசாரித்தால் இல்லாமற் நட்டமாய்ப் போகிற அனுபவமே பிரமாணம்.

30. இப்படிச் சீவன் ஈசுரன் கற்பிதம் என்றும், இவர்கட்கு அப்பாற்பட் டவர் ஆத்மா என்றும் வேதத்திலே பகுத்துச் சொல்கிறதோ?

சீவ ஈசுரர்கள் பூதங்களுடன் சேர்ந்தே உண்டாகி, அவைகளை அனுசரித்தே நாசத்தையும் அடைகிறார்கள் என்றும், அப்பாற்பட்டிருக்கும் கூடத்தர் அழியாதவர் என்றும் மைத்ரேயிக்கு யாக்கியவல்கியர் சொன்னார்.

31. இப்படியானாற் சரீரம் அழியும், சீவன் அழியான் என்கிற வேதத்திற்கு விரோதம் அல்லவா?

இந்த வேதம் பூத பௌதீக மோட்சத்தைச் சொல்லுகிறதல்ல. அஞ்ஞான நிலையில் வேறு உலகம் போவது தான் அர்த்தம். ஆகையால் ஆத்மாவிற்கு அந்நியம் எல்லாம் அநித்தியம்.

32. இப்படிச் சீவனே அநித்தியமானால், நித்தியமாயிருக்கிற பிரமத்தோடே நான் பிரம்மம் என்கிற சமானாதி கரண்யம்(இரண்டு பதங்களுக்கு ஒரு பொருளில் அன்வயிக்கும் (ஒற்றுமை சம்பவிக்கும்) தன்மை) எப்படிக் கூடும்?

முக்கிய சமானாதிக் கரண்யம் கூடாவிட்டாலும், இந்தக் கட்டை எதுவோ அதுவே இந்தப் புருஷன். இங்கு கட்டை என்கிற எண்ணம் புருஷன் என்கிற அறிவினால் நிவிருத்தியாகி விடுகிறது போல, நான் பிரம்மம் என்கிற அறிவினால் நான் கர்த்தா முதலான எண்ணம் முழுவதும் நிவிருத்தியாகி விடுகிறது.

33. ஆனால் பத்மபாத ஆசாரியருடைய பஞ்ச பாதிகாவிற்கு பிரகாசாத்மா

எழுதியிருக்கும் விவரணம் என்ற வியாக்யானத்தில் பாதித்து அர்த்தம் சொல்லக்கூடியதில்லை என்று சொல்லியிருக்கிறாரே?

என்றால் அவர் நீ என்ற பதத்திற்கு கூடத்தன் வரை அர்த்தம் பண்ணிக் கொண்டு சொன்னார்.

34. இப்படிக் கூடத்தரே தானாய் கண்டாற், அது என்ற பதத்திற்கும் நீ என்ற பதத்திற்கும் அர்த்தம் ஏது?

தேகம் இந்திரியம் முதலானவைகளுடன் கூடின சீவனாகத் தோற்றம் அளிப்பதற்கு அதிஷ்டான பிரத்யக்ஷமும், உலகம், சரீரம் படைத்த ஈசுரப் பிராந்திக்கு அதிட்டானப் பிரத்தியட்சமும் அர்த்தம்.

35. அது, நீ என்ற இரு பதங்களுக்கும் ஒரு பிரமத்தைத்தானே ஏக தேசங்களாகச் சொன்னால், இரண்டு பதங்களுக்கும் அர்த்த வேற்றுமை உண்டோ?

கற்பித சரீரத்தையும் உலகத்தையும் தொட்டுப் பேதமே அல்லாமல் அதிட்டான சைதன்யம் ஒன்றே ஒழிய இரண்டில்லை.

36. அனுபவமாய்க் கண்டு கொண்டிருக்கிற சீவ ஈசுரர்களைக் கற்பிதம் என்னக் கூடாது?

சீவ ஈசுரர்கள் அறிவைப் போல ஒரே லட்சணமாய் நிர்ணயமாகாத படியினாலும், சித்தாயும், சடமாயும், நித்தியமாகவும், அநித்தியமாகவும் குழப்பிக் கிடக்கிற படியினாலும் பிராந்தி என்கிறதற்குத் தப்பில்லை.

37. உலகில் ஏக ரீதியாய்த் தோற்றுகிற மயங்கியவனுக்கும், உண்மையை அறிந்தவனுக்கும் உள்ள வேற்றுமை ஏது? புத்தி ஏது? இந்த ஆபாசன் யார்? இங்கு ஆத்மாதான் யார்? இந்த உலகு எப்படி ஏற்பட்டது?

இவ்விடயங்களைத் தீர்மானமாய் அறியாததினால் குழம்பியவனே பிராந்தன். இவைகளைத் தன்தன் சுபாவத்துடன் பகுத்தறிந்து தான் சச்சிதானந்தமென்று நிச்சயிக்கின்றவனே முக்தன் என்கிறதற்கு அடையாளம் என்று வேதம் சொல்லுகிறது.

38. தான் எப்பொழுதும் சச்சிதானந்தராய் இருப்பதற்கு அடையாளம் ஏது?

மாயா விருத்திகள், மனோ விருத்திகள் உண்டாகிறதற்கும், இருக்கிறதற்கும், அழிவதற்கும் சாட்சியாய் இருக்கிற ஆத்மா சத் என்பது கூடும். எல்லாவற்றையும் அறிகிறதனாலே சித் என்பது கூடும். பஞ்ச கோசங்களையும் கைவிட்டாலும் தான் கைவிடப் படாத பொருளான படியினாலே ஆனந்தம் என்பது கூடும். ஆகையினால் இவரே பரமசிவன் என்கிற புராண வசனமே பிரமாணம்.

39. இந்த கூடத்தருக்கு அந்நியமாயிருக்கிற சீவ ஈசுரர், மாயா கற்பிதமான பூத பௌதீகங்கள் போலச் சடமாயிருக்க வில்லையே, சைதன்ய மாயிருக்கின்ற சீவ ஈசுரர்களை மாயாகற்பிதம் என்று சொல்லக்கூடாது?

சகலமான பாண்டங்களெல்லாம் மண்ணிலே பிறந்தாலும், கலச கும்பங்கள் உயர்வாக நிர்மலமாய் இருக்கிறாற் போல, சகலமும் மாயா

கற்பிதங்களானாலும் அவைகளுக்குள்ளே சீவ ஈசுரர்களுக்கு உயர்வு, நிர்மலம்.

40. கலச கும்பங்கள் உயர்வாகக் கருதப்பட்டாலும் சடமாயிருக்கிறாற்போலச் சீவ ஈசுரர்கள் சடமாயிருக்கக் காணோமே?

அன்னத்திற் பிறந்த சரீரம், இந்திரியங்களுக்குள்ளே மனது அறிவு ரூபமாயிருக்கிறாற் போல மாயா கற்பிதங்களுக்குள்ளே சீவ ஈசுரர்கள் அறிவு ரூபமாய் இருப்பது அனுபவம்.

41. மாயைச் சடத்தைக் கற்பிக்கிறதே அல்லாமற் சைதன்யத்தையும் கற்பிக்குமோ?

நம்முடைய தூக்கமே சொப்பனத்திலுள்ள அறிவு ரூபமுள்ள சீவ ஈசுரர்களை உண்டாக்குகிறது. அப்படியிருக்க மகா மாயை இவர்களை உண்டாக்குகிறது என்ற இவ்விஷயத்தில் ஆச்சரியம் ஏது.

42. அற்ப அறிவு முதலான சீவ குணங்களை மாயை கற்பிக்குமேயல்லால், சர்வத்தையும் படைக்கும் தன்மை அறியும் தன்மை, எல்லாவற்றிற்கும் மேலான தன்மை முதலான கல்யாண குணங்களை மாயை கற்பிக்கக் கூடுமோ?

பிள்ளை பெற்றவன் பேரிடுவதற்குச் சிரமம் ஏதும் இல்லாதது போல், ஈசுரனைக் கற்பித்த மாயை அவருக்கு ஏற்ற தொழிலையும் கற்பிக்கிறதில் ஏது சிரமம்.

43. இத்தனைச் சாமர்த்தியமாயிருக்கிற மாயைக்கு ஒரு கூடத்தரைக் கற்பிக்க சக்தி இல்லையோ?

சீவ ஈசுரர்கள் மாயா கற்பிதம் என்று வேதப் பிரமாணம் கண்டாற் போலக் கூடத்தரும் மாயா கற்பிதர் என்று ஒரு வேதப் பிரமாணமும் இல்லை. இவரே உண்மைப் பொருள், ஆதி வஸ்து என்று சகல வேதங்களும் கொண்டாடுகிறது. ஆகவே மாயை கூடத்தரைக் கற்பிக்காது.

44. இப்படி மாயா கற்பிதமான சீவ ஈசுரர்களால் என்ன காரியம் முடியம்?

எண்ணினது முதல் பிரவேசம் வரையுள்ள சிருஷ்டி ஈசுரனால் செய்யப்பட்டது. விழிப்பு முதல் விடுதலை வரையுள்ள அறியாமை சீவனால் செய்யப்பட்டது.

45.. கூடத்தருக்குச் செய்காரியம் ஏது?

அவர் அசங்கரே அல்லாமல் அவரிடத்தில் ஒரு செயலும் இல்லை.

46. இப்படிப் பகுத்துப் பார்ப்பவன் எப்படி இருப்பன்?

இதற்குப் பிரமாண வாக்கியமாக ஸ்ரீ கௌடபாதரின் மாண்டுக்கய காரிகையை உதாரணமாக்குகிறார். உற்பத்தி நாசம் கிடையாது. கட்டுண்டவன், விடுதலை அடைய எண்ணுபவன், முயற்சிப்பவன், விடுபட்டவனும் கிடையாது. சகலமும் மாயா கற்பிதமே அல்லாமற் தனக்குச் சுபாவமாக ஒன்றுமில்லை என்று கலக்கமற தெளிந்திருப்பன்.

47. இப்படி ஒன்றுமில்லாவிட்டாற் சீவேசுரர், ஜகத்து மரியாதை எல்லாம் வேதம் சொல்லி இருப்பானேன்?

அதி சூக்குமமாயிருக்கின்ற ஆத்மாவைக் காட்டும் பொருட்டுத் தூல அருந்ததி நியாயமாகச் சொல்லுகிறது (மிகப் பெரிதான நக்ஷத்திரங்களைக் காட்டி மிக நுட்பமான அருந்ததி நட்சத்திரத்தை காட்டுவது போல).

48. இப்படி அறிந்த விவேகி பிராரத்த தோற்றத்தை எப்படிக் காண்பன்?

சாத்திரம் அறியாதவன் கலங்குகிறாற்போலக் கலங்காமல், மாயை ஆகிற மேகம் பிரபஞ்மாகிற மழையை வேண்டியபடி பெய்தாலும் சிதாகாசமாக இருக்கிற நமக்கு நட்டம் ஏது, லாபம் ஏது என்று கவலை கெட்டிருப்பன்.

இந்தக் கூடத்த தீபிகையை நித்தியம் பார்த்துக் கொண்டிருப்பவன் தானே கூடத்த ரூபமாய் விளங்குவன்.

---



# 4. தியான தீபம்.

முன் அத்தியாயங்களில் உண்மையைப் பற்றிய விசாரணை செய்து ஆத்ம நிச்சயம் அடையவேண்டுமென்று சொல்லப்பட்டது. அவ்வித விசாரணை செய்வதற்கு வேண்டிய தகுதி இல்லாதவர்கள் உட்கருத்தை சாஸ்திரம் மூலமாகவும், பெரியோர் மூலமாகவும் கேட்டறிந்து கொண்டு அதையே தியானம் செய்து கொண்டிருந்தாலும் கூட நாளடைவில் முத்தி நிலை ஏற்பட்டுவிடுமென்று இந்த அத்தியாயத்தில் விளக்கிக் காட்டுகிறார்.

1. விசாரணை செய்யத் தகுதி இல்லாதவர் செய்காரியம் ஏது?

பிர்ம உபாசனையே பண்ணவேண்டியது. சகுன உபாசனை போல் இதற்குக்கிரியை உண்டோ என்னில் பிரம்மத்தை தியானம் பண்ணுகிறதே காரியமல்லாமல் வேறில்லை.

2. இதற்குப் பிரமாணம் ஏது?

தாபநீயம் என்கிற உபநிடதமே பிரமாணம்.

3. தானாயிருக்கிற பொருளை அன்னியமாயிருக்கிற பொருள் போல உபாசிக்கலாமோ?

சம்வாதிப் பிரமை போலக் கண்டும் காணாமல் இருந்தபடியினால் உபாசனை கூடும் (சம்வாதிப் பிரமை – ஒத்து வரக்கூடிய பிராந்தி)

4. சம்வாதிப் பிரமை, விசம்வாதிப் பிரமை யாது?

ஒரு அறைக்குள் இருக்கும் தீபத்தின் வெளிச்சம் வெளியில் தெரிகிறது. மற்றொரு அறையில் ஒரு ரத்தினத்திலிருந்து வெளிச்சம் வெளியில் வருகிறது. தீபத்தின் வெளிச்சத்தை ரத்தினத்தின் வெளிச்சம் என்று ஓடுபவனால் ரத்தினம் அடையப்படுவதில்லை. இதனையே விசம்வாதிப் பிரமை (பிசகான அறிவு) என்பர். ரத்தினத்தின் வெளிச்சத்தைப் பார்த்து ஓடுபவனால் அவசியம் ரத்தினம் அடையப் படுகிறது. ரத்தினத்தின் வெளிச்சத்தில் ரத்தினம் என்று ஏற்பட்ட பிராந்தி சம்வாதிப் பிரமை –(ஒத்து வரக்கூடிய பிராந்தி) என்பர்.

5. பிராந்தியாய் நாடினவனுக்குப் பலன் கொடாது?

விசம்வாதிப் பிரமை பலன் கொடாது. சம்வாதிப் பிரமை நாடிய பலனைக் கொடுக்கும். ஆகையினால் பிரம்ம உபாசனையும் சம்வாதிப் பிரமை போல முத்தியாகிற பலனைக் கொடுக்கும்.

6. இந்த பிரம்ம உபாசனைக்குத் தகுதி உள்ளவன் யார்?

பரோட்ச (மேல் எழுந்த வாரியாக சாத்திரத்தைக் கேட்டவன், படித்தவன்) ஞானியே இதற்கு அதிகாரி.

7. உபாசனை பண்ணுகிற வழி ஏது?

அகண்ட ஆகாச அறிவே நாம் என்கிற பாவனையே வழி.

8. இந்த உபாசனைக்கு உதாரணம் ஏது?

கண்ணாரக் காணாவிட்டாலும் சாத்திரம் சொன்னபடி பாவிக்கின்ற

மூர்த்தி தியானமே உதாரணம்.

9. பரோட்ச ஞானத்திற்கு அறிகுறிகள் யாது?

பிரம்மம் தான் என்று அறியாமல் பிரம்மம் ஒன்று உண்டு என்று நிச்சயித்ததே பரோட்ச ஞானம்.

10. பரோட்ச ஞானம் சந்தேகத்திற்கிடமான படியினால் பலன் எப்படிக் கொடுக்கும்?

மூர்த்தி தியான உபாசனைபோலப் பரோட்ச ஞானத்திலே ஒருவருக்கும் சந்தேகமில்லை. ஆகையால் சம்வாதிப் பிரமை பலன் கொடுக்கும்.

11. பிரம்மத்தைத் தானாகச் சொல்லுகிற வேதாந்தத்தைப் படித்த இவனுக்கு அந்த ஞானம் பரோட்சமாகக் காரணம் ஏது?

தேகமே தான் என்கிற விபரீத பாவனை, பிரம்மத்தைத் தானாகத் தோற்ற ஒட்டாது.

12. பரோட்சமாயிருக்கிற அத்துவித (நான் பிரம்மம்) புத்தியைப், பிரத்தியட்சமாயிருக்கிற துவைத புத்தி (நான் வேறு, பிரம்மம் வேறு) ஏன் கெடுக்காது?

பிரத்தியட்சமாயிருக்கிற சிலாபுத்தி (கல்லில் தெய்வ எண்ணம்), பரோட்சமாக் கேட்ட ஈசுரன் தான் அந்தச் சிலை என்ற புத்தியை தள்ளாதது போலப் பிரத்தியட்சமாகயிருக்கிற துவைத புத்தியும், பரோ ட்சமாயிருக்கிற அத்துவித புத்தியைக் கெடுக்காது.

13. சிரத்தையில்லாதவனுக்கு சிலையிலே ஈசுர புத்தி வரக்காணோமே?

சிரத்தையுள்ளவனே அதிகாரியல்லமற், சிரத்தையில்லாதவனைச் சாஸ்திரத்தில் எடுத்துக் காட்டவில்லை.

14. வேதாந்தம் படித்தாலல்லாமல் பரோட்ச ஞானம் வாராதோ?

மூர்த்தி உபதேசம் போலப் பிரம்மத்தை உபதேசம் பண்ணிக்கொண்டு அறியலாம்.

15. சாஸ்திர விசாரம் பண்ணாமற் பிரம்மத்தை உபதேசமாகக் கேட்டு அறிகிறது எப்படி?

கர்ம சூத்திரங்களைப் படியாமற் கர்ம அனுஷ்டானம் சித்தித்தாற் போலவும், ஆகமபுராணம் படியாமற் உபாசனை அனுஷ்டிக்கிறாற்போலவும், சாஸ்திர விசாரம் பண்ணச் சக்தியில்லாதவன் பெரியவர்களிடத்திலே பிரம்மம் இன்னபடி இருக்கும் என்கிறதைக் கேட்டுக் கொண்டு உபாசிக்கலாம்.

16. முடிந்த நிலை உபதேசம் கொண்டு வாராதோ?

சாஸ்திர விசாரம் இல்லாதவனுக்கு முடிந்த நிலை வாராது.

17. பரோட்ச ஞானத்திற்குத் தடை ஏது?

முயற்சி இல்லாததே பரோட்ச ஞானத்திற்குத் தடை.

18. அபரோட்ச ஞானத்திற்குத் தடை ஏது?

விசாரமின்மையே அபரோட்ச ஞானத்திற்குத் தடை.

19. சாஸ்திர விசாரம் பண்ணினாலும் சிலருக்கு முடிந்த நிலை ஏன்

வரவில்லை?

தேகமே நான் என்ற விபரீத எண்ணத்தினாலே சாஸ்திரம் படித்தும் முடிந்த நிலை வராமலிருக்கும்.

20. இத்தகையவன் செய்காரியம் ஏது?

விசாரபலமான முடிந்த நிலை வரும் காலம், சாஸ்திர அர்த்தத்தை திரும்பத் திரும்ப விசாரிக்கப் பயிர்களுக்கு நீண்டகாலம் உரம் நிறைய இடுவதினால் விளைச்சல் அமோகமாகக் காணப்படுவது போல, முடிந்த நிலையும் நீண்ட கால விசாரத்தினால் வரும்.

21. மரணம் வருமளவும் விசாரம் பண்ணின வாமதேவர், சடபரதர் இவர்கள் இருவருக்கும் ஏன் அந்த பிறவியிலேயே முடிந்த நிலை கூடவில்லை? தடையினால்.

22. தடையாவது ஏது? அது எத்தனை விதமாய் இருக்கும்?

முயற்சி செய்தும் ஏதோ ஒரு காரணத்தினால் பலன் கைக்கு வராதிருப்பதே தடை. அத்தகைய காரணங்களை வரிசைப் படுத்தி a) முன்னுள்ளது, b) வரப்போவது, c) இப்பொழுது இருப்பது என்று மூன்று விதம்,

a) ஒரு சந்நியாசி முன்னால் ஒரு எருமையின் மீது வைத்திருந்த அன்பாகிய தடையினால் தத்துவத்தை அறியவில்லை. குருவும் எருமை விஷயமாகவே தத்துவத்தை எடுத்துச் சொன்னார். அதன் பேரில் தடை விலகி விட்ட படியால் சந்நியாசி அறியவேண்டிய படி அறிந்தார்.

b) வரப் போகிற தடை வாமதேவர் விஷயத்தில் ஒரு பிறவி எடுத்ததாலும் சடபரதர் விஷயத்தில் மூன்று பிறவிகள் எடுத்ததாலும் பாக்கி இருந்த கர்மாக்கள் கழிந்து விட்டபடியால் பிறவியற்ற நிலையை எய்தினார்.

c) இப்பொழுது இருக்கும் தடையை நான்கு விதமாகப் பிரிக்கலாம் – விஷயத்தில் ஈடுபட்டிருக்கும் தன்மை, புத்தியின் மந்த தன்மை, வீண் தர்க்கம், விபரீதத்தில் பிடிவாதம்.

23. இந்த தடைகளைத் தள்ளும் வழி ஏது?

முன்னுள்ள தடையை நீக்க அவனவன் புத்தியை அனுசரித்துப் போதிக்க நீங்கும். வரப்போகிற தடையை நீக்க பிறவி எடுத்தால் நீங்கும். இப்பொழுதுள்ள தடையை உண்மை எது, பொய் எது என்ற விசாரங்களால் பொருள்களின் மீதுள்ள பற்று நீங்கும். புத்தியின் மந்தத் தன்மை பலகாலும் கேட்பதால் நீங்கும். வீண்தர்க்கமானது மனனத்தாலும், விபரீத பாவனை நிதித்யாசனத்தாலும், சமாதியாலும் நீங்கும்.

24. வேதாந்த விசாரம் பண்ணியும் வரப்போகிற தடையினால் மீண்டும் பிறவி வரும் என்றால் விசார ஞானம் வீண் அல்லவா? வரப் போகிற தடை உள்ளதால் பிறவி வரும் என்பதற்குப் பிரமாணம் ஏது?

விசாரத்தினாற் பிறந்த ஞானம் வரப் போகிற தடை நீங்கின பின் முக்தி கொடுப்பதால் சாஸ்திர விசாரம் ஒரு காலும் வீணாகாது. யோகப்

பிரஷ்டனும் (உயர்ந்த நிலையிலிருந்து நழுவியவனும்) இரண்டொரு பிறவியில் முத்தனாவான் என்கிற கீதா வசனமே பிரமாணம்.

25. தடை நீங்க உபாசிக்கச் சொன்னது சகுணமா, நிர்குணமா?

நிர்குணம்.

26. சகுணமானால் உபாசிக்கலாம். நிர்குணத்தை எவ்வாறு தியானிக்கலாம்?

கேட்டவண்ணம் தியானிக்கின்றது இருவகைக்கும் சரி.

27. வாக்குக்கும் மனதுக்கும் எட்டாத நிர்க்குணத்தை எப்படி தியானம் பண்ணலாம்?

வாக்குக்கும் மனதுக்கும் எட்டினதைக் கேட்டு முடிந்தநிலை கூடுகிறார் போல, இதுவும் கேட்டுச் சிந்திக்கலாம்.

28. யாது ஒன்று அன்னியமாய் உபாசிக்கப்பட்டதோ, அது எல்லாம் பிரம்மம் அல்ல. தானே பிரம்மம் என்று அறியவேண்டும் என்று ஒருவேதம் சொன்னபடியினால் பிரம்ம உபாசனை தள்ளத்தக்கதே?

அறியப்பட்டதற்கும் அறியபடாததற்கும் அன்னியமாய் இருக்கும் பிரம்மம் என்று ஒரு வேதத்திலே ஞானத்தைத் தள்ளியிருக்கிறது(நிஷேதிக்கிறது).

29. பிரம்ம உபாசனையிலே ஏன் இந்த பக்தி?

அதைகுற்றம் காணுவதிலேதான் ஏன் இந்தபுத்தி .

30. நிர்குணத்தை உபாசிக்கின்றதுக்கு பிரமாணம் ஏது? விதி ஏது?

தாபநீயம், காடகம், சயிப்பியம், மாண்டுக்கியம் என்ற இந்த நாலு உபநிடதங்களும் பிரமாணம். பஞ்சீகரண மகாவாக்கியமே அனுட்டிக்க வேண்டிய விதி.

31. பஞ்சீகரணம் ஞானசாதனமல்லவோ? எல்லோரும் அனுட்டிக்கவில்லையே?

ஞானசாதனம் என்பது சரிதான். அனுட்டியாதவன் தானே கெட்டான் அதனாலே பிரம்ம உபாசனைக்கு குற்றமில்லை(தூஷணமில்லை)

32. எல்லோரும் அனுட்டிக்காத உபாசனையை ஏன் சொல்ல வேண்டும்?

சிலமூடர்கள் இதைவிட உயர்வென்று வசியமந்திரத்தை செபிக்கட்டும். இதனிலும் அதிக மூடன் பயிரிடுதலைப் பண்ணட்டும். அந்த மூடரைக் குறித்துச் சொல்லவில்லை. முக்தியடைய விருப்பமுள்ளவர்களைக் குறித்து நிர்குண உபாசனை சொன்னோம்.

33. இப்படி உபாசிக்கப்படுகிறது நிர்குணமானால் இந்த வஸ்துவிற்கு ஆனந்தாதி குணங்களும் அதுலாதி குணங்களும் உண்டு என்று சொல்லக்கூடாது?

(அதுலாதி-ஸ்துலம் அல்லாதது முதலான) இவ்விரண்டு வித குணங்களையும் சேர்த்து கொள்ளவேண்டுமென்று பிரம்ம சூத்திரத்தில் ஸ்ரீவியாசரால் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

34. சச்சிதானந்தமே நான் என்கிறதே உபாசனையானால் ஞானத்திற்கும்

தியானத்திற்கும் பேதமேது ?

வஸ்து தந்திரம் ஞானம் என்றும், புருட தந்திரம் தியானம் என்றும் பேதம்.

35. வஸ்து தந்திரமாயிருக்கிற ஞானம் எதனால் வரும்?

கல்லைத் தெய்வம் என்று கற்பனை செய்வது புருடதந்திரம். ஆனால் கல்லைக் கல் என்கிறாற் போலச், சுபாவம் சொல்லுகிற, வஸ்து தந்திர ஞானம், விசாரத்தினால் வரும்.

36. இந்த சுபாவ ஞானம் வந்தால் எது செய்யும் ?

சகல சம்சாரத்தையும் சுடும்.

37. இந்த ஞானத்தை மறந்தால் கேடு ஏது?

மறந்தாலும் சம்சாரத்தைக் கொடாது.

38. இந்த ஞான முள்ளவன் எப்படி இருப்பான்?

சீவன் முக்தனாய்த் திருப்தி அடைந்து பிராரத்த நீக்கத்தைப் பார்த்துக் கொண்டிருப்பன்.

39. புருடதந்திரம் என்கிற உபாசனை எதனால் வரும் ?

உபசாரமாகப் பெண்ணை அக்கினி என்றது போலப் புருடதந்திரமாயிருக்கிற உபாசனை குரு உபதேசத்தால் வரும்.

40. இந்த உபாசனை வந்தால் என்ன செய்யும்?

தியானத்தபோது நாம் பிரம்மம் ஆவோம் என்கிற புத்தியைக்கொடுக்கும்.

41. அந்த உபாசனையை மறந்தால் என்ன செய்யும்?

விட்சேபத்தின் கையிலே காட்டிக் கொடுக்கும்.

42. அந்த உபாசனா ஞானமுள்ளவன் எப்படியிருக்க வேண்டும்?

நித்திரை, மரணம் வருமளவும் தியானம் விடாமற் பண்ணிக் கொண்டிருக்க வேண்டும்.

43. இந்த உபாசனை முதிர்ந்ததற்கு அடையாளம் ஏது?

பிட்சை எடுக்கிறவன் சொப்பனத்திலும் பிட்சை எடுக்க காண்கிறாற் போலவும், வேதம் ஓதுகிறவன் வேதம் ஓதக் காண்கிறாற் போலவும், இந்த உபாசகன் தினந்தோறும் சொப்பனத்திலும் உபாசனை பண்ணக் கண்டானேயானால் உபாசனைக்கு முடிவு.

44. ஞானம் வஸ்து தந்திரம் என்பதில் யுக்தி ஏது?

கூடத்த சைதன்யத்தை வேதம் சொன்னபடி இருக்கோ இல்லையோ என்று லக்ஷணாவிருத்தியினாலே ஒரு தடவை சோதித்துப் பார்த்துக்கொள்ளுகிறதேயல்லாமற் தான் வேண்டியபடி சிந்திக்கப்படாததே யுக்தி.

45. தியானம் புருட தந்தரம் என்பதில் யுக்தி ஏது?

தான் வேண்டியபடி தியானிக்க,தியானிக்காமல் இருக்க மாறுபாடாய் தியானிக்கிறதே யுக்தி. ஆகையினால் எந்நேரமும் சாவதானமாய் தியானம்

பண்ணவேண்டும்.

46. எந்நேரமும் தியானத்திலே மனதாயிருக்கிறவனுக்குச் செய்யவேண்டிய மற்ற காரியங்கள் எப்படி நடக்கும்?

பரபுருடனை அடைகிற பெண், எந்நேரமும் அவனிடத்திலே பொருந்தியிருக்கிற மனதாக இருந்தாலும், தன்வீட்டுக் காரியங்களை நியமம் தவறாமல் செய்து ஒப்புவிப்பது போலச் செய்வன்.

47. சீவன் முக்தஞானிக்குச் செய்காரியம் எப்படி நடக்கும்?

கூத்தாடி பொய்யாக நடிக்கிறார் போலச் சீவன்முக்தனும் செய்காரியம் ஒன்றும் தப்பாமற் செய்வன்.

48. உபாசனை உலக விவகாரத்திற்கு விரோதம் என்கிறது எதனால்?

மனதிலே தியானமும், தேகம் இந்திரியங்களிலே செய்தொழிலுமாக இருக்கின்றபடியினால் விவகாரம் விரோதம்.

49. ஞானத்திற்கு விவகாரம் விரோதம் இல்லை என்கிறது எதனால்?

ஆத்மா சின்மாத்திரம் மற்றுள எல்லாம் மாயாமயம் என்கிற ஞானத்திற்கு, விவகார சாதனமான மனம் வாக்கு காயம் இவைகளில் ஒன்றும் வேண்டாதபடியினால் விவகாரம் விரோதமில்லை.

50. சீவன் முக்தி நிலை உள்ளவனுக்கு அடையாளம் ஏது?

குடத்தைப் பார்க்கிறவன் புத்தியைத் தண்டியாதது போலத் தத்துவம் உள்ளபடி கண்டு களித்துக் கவலை கெட்டிருப்பான்.

51. தியானம் பண்ணுகிறவன் எவ்வாறு இருப்பான்?

உலக விஷயங்களை நினைத்தால் தியானம் கலைந்து கெட்டுப்போகும் என்கிற விவேகத்துடனே, புத்தியை மறித்துத் தண்டித்துக் கொண்டிருப்பன்.

52. ஒருக்கால் அறியப்பட்ட குடத்தை வேண்டியபோது அறிகிறதிற்கும், சிந்திக்கிறதற்கும், இப்படியிருக்குமென்று சொல்லுவதற்கும் முயற்சியில்லையே. இப்படிக் கூடுமோ பிரமஞானிக்கு?

சடமாயிருக்கிற குடத்தை ஒருக்காற் கண்டது உடனே இப்படித் தெறிந்தாற் சுயம் பிரகாசமான இந்த ஆத்மா, குடத்தைப் போலக் கூடவா பிரகாசிக்காது.

53. நான் பிரம்மம் என்கிற விருத்தி ஞானம் ஒரு நாழிகையிலே நட்டமாய்ப்போமே?

அது குடஞானத்திற்கும் சரியல்லவோ.

54. இப்படி தத்துவக் ஞானிக்கு ஒரு சிந்தனையுமில்லாவிட்டாற் எந்நேரமும் மனது வெளியிலே நாடாதோ?

கற்பித வஸ்து காரியம் பண்ணியது கொண்டு கேடு ஏதுமில்லை.

55. இப்படியானால் வேதாந்த சித்தாந்தம் அவமரியாதையாமே?

இது செய்யலாம், இது செய்யக்கூடாது என்று விதிக்கிறது சாஸ்திரம்

என்றால் அந்த சாஸ்திரம் தத்துவ ஞானியைக் குறித்து ஏற்பட்டதில்லை.

56. விதி, நீக்கம் குறித்த சாஸ்திரம் யாரைக் குறித்து உண்டாயிற்று?

வர்ணம், ஆசிரமம், வயது, அவஸ்தை என்கிறவைகளில் அபிமானம் எவனுக்கு இருக்கிறதோ அவனுக்குத்தான்.

57. ஞானிக்கு வர்ணம் முதலியவைகள் தேவையில்லையோ?

வர்ணம், ஆசிரமம் முதலியவை மாயையினால் தேகத்தில் கற்பிக்கப் பட்டவைகள். ஞான சொரூபமான ஆத்மாவுக்கு இல்லை.

58. முன் அஞ்ஞான காலத்தில் அனுசரித்த வர்ண ஆச்ரம விதிகள் பின் ஞான காலத்தில் கைவிடப்பட்டாற் குற்றமில்லையோ?

கர்மிகளுக்கும் குழந்தைப் பருவத்தில் எவ்விதமான விதிகளும் நீக்கங்களும் தேவையற்றது போல் ஞான காலத்தில் தேவையில்லை.

59. குழந்தை ஒன்றும் அறியாத அஞ்ஞானி அல்லவோ? ஞானியும் அப்படித்தானேயோ?

ஒன்றும் அறியாதவர்களுக்கும், எல்லாம் அறிந்த சர்வேஸ்வரனாயிருக்கிற ஞானிக்கும் விதி, நீக்கங்கள் தேவையில்லை.

60. பின்னை யாருக்கு விதி, நீக்கங்கள்?

சொற்பம் அறிந்தும் அறியாமல் இருக்கிற நடுநிலையில் உள்ளவனுக்கே.

61. ஞானியாயிருக்கிறவன் சர்வேஸ்வரனானால் சாபம், அனுக்கிரகம் பண்ண வேண்டுமல்லவா?

சாபம், அனுக்கிரக சாமர்த்தியம் தபோபலமல்லால் ஞானபலமல்ல.

62. தபோபலமூலமாக பிரம்மத்தை அறிய வேண்டுமென்று தைத்ரீய உபநிடதத்திலே கூறியிருப்பதால், தபோ பலமல்லவா ஞானம்?

அந்த தபஸ் வேறு. அதாவது ஞானத்தைக் கொடுக்கக்கூடிய ஆத்ம விசாரம் தான் தபஸ்.

63. பூர்வ ஞானிகளாய் இருக்கிற வியாசர் முதலான பேருக்கு இருவகையும் காணப்பட்டிருக்கிறதே. அப்படியிருக்க வேண்டாமோ ஞானம் உள்ள பேர்களுக்கு எல்லாம்?

மந்திரவாத சித்தியும், ஞானமும் ஒருவரிடத்திலே கண்டாற் போலவும், ஜோதிடமும் ஞானமும் ஒருவரிடத்திற் கண்டாற் போலவும், சாப அனுக்கிரக சாமர்த்தியமும் ஞானமும் வியாசர் முதலான ஆசார்யர்களிடத்தில் காணப்பட்டது. இந்த சாப அனுக்கிரக சாமர்த்தியம் எல்லாம் ஞானமல்ல. ஞானமாத்திரம் அப்யசித்தவனிடத்திலே சீவன் முக்தி அனுபவம் மாத்திரம் இருக்கும்.

64. சாப அனுக்கிரக சாமர்த்தியம் இல்லாதிருந்தால் இவன் என்ன ஞானி என்று எல்லோரும் நிந்திப்பார்களே?

விதி, நீக்கம் கூறுகிற சாஸ்திரத்தைக் கைவிட்ட சந்நியாசிகளை பூசிக்கின்றதே அல்லாமல் நிந்திக்கக் காணோம்.

65. தூர்த்தர்கள் எல்லாம் நிந்திக்கிறார்களே?

இந்த வழியில் வர்ணம், ஆச்ரமம் உடைய தேகாபிமானிகள் ஞானியை நிந்திக்கட்டும். மாடுகள், புலிகள் ஞானியின் மீது பாயட்டும். அதனாலே ஞானிக்கு நட்டம் ஏது. ஆனபடியினாலே இப்படி வேண்டியபடி இருக்கலாம் என்ற படியினாலே ஞானிக்கு அரச நிர்வாகம் பண்ண இச்சை உண்டாயினும் பண்ணட்டும்.

66. மாயா கற்பிதமாயிருக்கிற சகத் மித்யை என்ற புத்தி வந்த பின் இராச்ய பாரம் பண்ண இச்சை வந்தால் ஞானம் வீணாகுமோ?

ஞானிக்கு மித்தியா புத்தியினால் ஆசையற்றுப் போனால் கர்மந்தான், உபாசனைதான் தியானந்தான் இராச்சியந்தான் பிராரத்தம் உள்ளபடி பண்ணி வருவன்.

67. தியானிக்கும் இப்படி வேண்டிய பிரகாரம் இருக்கலாகாதோ?

மூர்த்தித் தியானம் போல, தியானத்தினால் நான் பிரம்மம் என்கிற நிலை தியானம் விட்டால் இல்லாமற் போகையினால் நிரந்தரம் சாவதானமாய் தியானம் பண்ணிக் கொண்டிருக்க வேண்டும். ஞானியைப் போல வேண்டிய வண்ணம் இருக்கலாகாது.

68. ஞானிக்கு ஞானத்தை மறந்திருக்கிற வேளையிலே நான் பிரம்மம் என்ற எண்ணம் இல்லாமை, இருவருக்கும் (ஞானிக்கும், தியானிக்கும்) சரியல்லவோ?

பிராமணனுக்கு நான் பிராமணன் என்கிறது நினையாவிட்டாலும் சுபாவசித்தமாய் இருக்கிறாற் போல இலக்கண பகுப்பினாலே ஆத்மாவைச் சோதித்திருக்கிற ஞானிக்கு நான் பிரம்மம் என்கிறது மறந்திருந்தாலும் சுபாவசித்தமாய் இருக்குமேயல்லாமற், தியானம் பண்ணுகிறவனைப் போல மறந்து கெட்டோம் என்ற துக்கமில்லை.

69. இந்த பிரகாரத்திற்கு உபாசகனுக்கும் நான் பிரம்மம் என்கிறது மறந்திருந்தாலும் சுபாவசித்தமாய் இருக்கின்ற பிரமத்துவம் உண்டோ இல்லையோ?

இந்த உபாசகன் மாத்திரமல்ல, பாமரன் மிருகங்கள் முதலான எல்லோருக்கும் பிரமத்துவம் சுபாவசித்தம் தானே.

70. பாமரன் மிருகங்கள் முதலான பிராணிகளுக்கு நான் பிரம்மம் என்கின்ற அறிவில்லாதபடியினால், சுபாவசித்தமாயிருக்கும் பிரம்மத்துவத்தினாற் பிரயோசனம் ஏது?

அப்படி அறிவில்லாதது இந்த உபாசகனுக்கும் சரியான படினால் சுபாவசித்த பிரம்மத்து வத்தினாற் பிரயோசனம் அற்றுப் போனது இவனுக்கும் சரி.

71. ஆனால் பிரம்மத்தியானமும் இப்படிப்பிரயோசனமற்றதோ?

பட்டினியே கிடக்கின்றவனிலும் பிட்சை எடுத்துப் புசிக்கின்றது தாழ்வில்லை என்றாற் போல வீணாக வியாபாரம் போன்றவற்றிலே கிடந்து

அலைகிறதைக் காட்டிலும் பிரமத்தியானம் பிரயோசனம் உள்ளது.

72. எந்தெந்த சாதனங்களில் பிரம்மத்தியானம் உத்தமம்?

பாமர வியாபாரத்திலும் கர்மத்தை அனுசரிக்கிறது உத்தமம். கர்மத்திலும் அதிகம் சகுண உபாசனை. அதனினும் அதிகம் நிர்குண உபாசனை.

73. இவைகளெல்லாம் ஒன்றுக்கொன்று உயர்வு தாழ்வாக இருப்பானேன்?

அரசனை நெருங்க நெருங்கச் செல்வமும் வேலையின்மையும் அமைகிறாற் போல பிரம்மத்தைக் கிட்டக் கிட்ட ஆதிக்கம் அதிகம்.

74. பிரமத்தியானத்திற்கு மேல் ஞானக்கிரமம் எப்படி அடையப்படும்?

சம்வாதிப் பிரம்மம் முடிந்தவிடத்திலே ரத்தினத்தைக் கொடுக்கிறாற் போல, நிர்குணத்தியானம் முடிந்தவிடத்தில் பிரம்ம ஞான சமாதியாகிறதேயல்லாமல் வேறு சாதனமில்லை. ஆகையால் அறிந்தவர்கள், அறியாதவர்கள் எல்லோருக்கும் குறுக்கு வழியாகமுத்தியைக் கொடுக்கையினாற் நிர்குண தியானத்தையே சொல்லுகிறோம். சித்தநிரோதமே சமாதி என்றும் அதுவே சாத்தியமென்றும் அமுத விந்துபநிஷத் சொல்லுகிறது.

75. இது ஒன்றும் அறியாதவனுக்குத் தியானத்தினால் எப்படிச் சித்திக்கும்?

தியான மாத்திரம் கொண்டு நான் பிரம்மம் என்கிறபுத்தி திடப்பட்டவுடனே நிர்விகாரத்தினுடைய லக்ஷணம் புத்தியில் எளிதாய் ஏறும். இது காரியத்தினால் சமாதி என்று சொல்லப்டும். ஆகையினாற் சகல சாதனங்களினும் பிரம்மத் தியானம் உத்தமம்.

76. இப்படி மூர்த்தி தியானம், தீர்த்தாடனம், ஜெபங்களும் மோட்ச சாதனங்கள் ஆகாதோ?

பிரம்மத் தியானத்தை விட்டுப்போட்டு மூர்த்தி தியானம் முதலியவைகளைச் செய்வது, உள்ளங்கையில் இருக்கிற பால்பாயசத்தை விட்டுவிட்டு முழங்கையில் இல்லாததைச் சுவைத்ததற்குச் சரியாகையால் பிரம்மத் தியானத்திற்குச் சமமான சாதனம் ஒன்றுமில்லை.

77. இந்தக்கிரமம் சாட்சாத்காரத்தைத் தரும் விசாரத்தை விட்டுப் போட்டு தியானம் பண்ணுகிறவனுக்கும் சரியல்லவோ ?

உண்மைதான். இந்தப்படி உபாசனையானது அபரோட்ச ஞானம் வர விசார அனுசந்தானம் பண்ண மாட்டாதவனுக்கு விதி.

78. சாட்சாத்கார விசாரம் போல, உபாசனையும் சாட்சாத்கார விசாரத்திற்கு அருகாமையில் கொண்டு விடும் என்கிறது எதனால்?

உபாசனையினாலே நான் பிரம்மம் என்ற நிலைக்கு வேறுபாடான எண்ணங்களைத் துடைத்து, மனஅடக்கம் வரும். அந்த மனதிலே சாட்சாத்கார விசாரம் எளிதாக ஏறும். ஆகையினால் உபாசனை முக்கியம்.

79. இப்படியானால் சாங்கியம் (விசாரத்திற்கும்) உபாசனைக்கும் விரோதம் ஏது?

விசாரத்தில் சீவனையும் ஆத்மாவையும் பிரித்துக் காணுதல். உபாசனையில் இருவரையும் ஒருவராகக் காணுதல்.

இரண்டாம் சமாதானம். சாங்கியர்களால் யாதொருபதம் அடையப் படுகிறதோ அந்தப் பதமே யோகியர்களாலும் (உபாசகர்) அடையப்படுகிறது. இப்படி எவன் சாங்கிய, யோகங்கள் இரண்டிற்கும் பலன் ஒன்று என்று பார்க்கிறானோ அவன் சாஸ்திர அர்த்தத்தை நன்றாகப் பார்த்தவனாம் என்று கீதா வாக்கியமும், சாங்கியமும் யோகமும் தத்துவ ஞானத்திற்குக் காரணமாம் என்னும் கீதைக்கு மூல சுருதியும் பிரமாணமாம்.

80. சாங்கியம், யோகம் இரண்டையும் தத்துவ ஞான வாயிலாக மோட்ச சாதனமாக ஒப்பினால், சாங்கிய, யோக சாஸ்திரங்களில் சொல்லிய தத்துவங்களையும் அங்கீகரிக்க வேண்டுமே?

சாங்கிய, யோக சாஸ்திரங்களில் வேதாந்த சாஸ்திரத்திற்கு விரோதங்களான யாதொரு அம்சங்கள் உண்டோ அவை அங்கீகரிக்கத் தக்கன அல்ல. (விரோத அம்சங்கள் – சாங்கியத்தில் கேவலம் பிரகிருதியே (மாயை) சகத்துக் காரணம் ஈசுரன் அல்ல. அந்தப் பிரகிருதியும் நித்யம். ஆத்மாக்கள் அநேகம். பதஞ்சலியோகத்தில் ஈசுரன் தடஸ்தம். பிரதானம் நித்யம். சீவர்கள் வாஸ்தவம் அநேகர்).

81. பிரமத்தியானத்தினாலே சாட்சாத்கார விசாரம் அல்லாமலும் மோட்சமும் உண்டு என்கிறதற்கு யுக்தி ஏது, பிரமாணம் ஏது?

குளவியை நினைத்த புழு குளவியாகிறாற் போல என்கிறது யுக்தி. மரண காலத்தில் எதை நினைத்தானோ அதுவாய்ப் போவான் என்ற கீதா வசனமே பிரமாணம்.

82. தியானம் திடப்பட்டல்லவோ சரீர பதன (மரண) காலத்தில் உதவ வேண்டும். மத்தியில் சரீரம் மரணம் அடைந்தால் கதி ஏது?

இடையில் மரித்தவன் பிரம்ம லோகம் சென்று பிரம்மாவிடத்தில் தத்துவ ஞானம் பெற்று மோட்சம் அடைவன் என்று தாபநீய உபநிஷத் கூறுகிறது. இதைத் தவிர மோட்சத்திற்கு வேறு வழியில்லை என்று யசூர் வேதம் சொல்லுகிறது. நசிகேதுவுக்கு இயமன் இது பிரகாரமே சொன்னார். சத்யகாமருக்குப் பிப்பலாத முனிவர் இப்படியே சொன்னார். கிருஷ்ணனும் ஆத்ம கீதையிலே பூமிக்குள்ளே இருக்கிற புதையலை எடுக்கிறதற்கு வெட்டுகிறதே அல்லாமல் வேறு வழி இல்லாதது போல பிரம்மத்தை அடைகிறதற்குத் தியானமே அல்லாமற் வேறு வழி இல்லை என்றும், தேகமாகிற கல்லை, புத்தியாகிற குந்தாளத்தால் நீக்கி, நாம் பிரம்மம் என்கிற தியானத்தினாலே பிரம்மமாகிற புதையலை அடையலாம் என்றார். ஆகையாற் பிரம்மத் தியானத்திற்குச் சரியான சாதனம் ஒன்றும் இல்லை.

83. அபரோட்ச ஞானத்தாற் அடையவேண்டிய பிரம்மத்தை அந்தப் பிரகாரம் அடையாமற், தியானத்தினால் எப்படி அடையலாம்?

அனுபவமில்லாவிட்டாலும் அசத்தாயிருக்கிற வஸ்துவையு ந் தியானத்தினால் அடையலாம் என்று இருக்கையினாலே, உற்று

விசாரித்தாற் தானாய் உண்மைப் பொருளாயிருக்கிற பிரம்மம், நாம் பிரம்மம் என்கிற தியானத்தினாலே அடையலாமோ என்று ஒருவரையும் கேட்கத் தேவையில்லை. பூவுலகில் காசியை தரிசித்து உபாசிக்கையினால் தாரக மந்திரம் சித்திக்கும் என்றும், சம்வாதிப் பிராந்தியிலே பிரவிருத்திக்க ரத்தினமாக்கப் படுகிறார் போலவும், தேகாபிமானத்தைத் தவிர்ந்து தியானத்தினால் அத்துவிதமாயிருக்கிற ஆத்மாவே தானென்று தியானிக்கிறவன், இங்கே தானே மோட்சத்தை அடைவன் என்று வேதஞ் சொல்லுகிறது.

இந்த தியான தீபிகையை அனுசந்தானம் பண்ணி வருகிறவன் பிரம்மத்தியானத்தை அடைந்து மோட்சத்தை அடைவன்.

---

# 5. நாடக தீபம்

இந்த அத்தியாயத்தில் சரீரம், இந்திரியம், மனம், உலகம் முதலியவைகளுக்கு மத்தியில் இருந்தபோதிலும் அந்த ஆத்ம சைதன்னியம் எவ்வித மாறுதலையும் அடையாமல் இருக்கிறது என்பதை நாட்டியம் ஆடும் இடத்திலுள்ள தீபத்தை உதாரணப்படுத்தி விளக்கி இருக்கிறார்.

1. ஆத்மாவாவது யார்?

மாயா சக்திக்கு ஆதாரமாயிருக்கின்ற அத்துவித ஆனந்த சைதன்யமே ஆத்மா.

2. இவருக்கு உலகு சிருட்டி எதனால் வந்தது?

நிர்விகார சைதன்யமாயிருக்கிற இவருக்கு தம்முடைய மாயா உபாதியினால் வந்தது.

3. சீவன் யார்?

உபாதிகளிலே பிரதிவிம்பித்து சரீரங்களிலே பிரவேசித்து விவகரிக்கிற சிதாபாசன் சீவன்.

4. சம்சார பந்தம் யாது?

சீவனிடம் தோற்றுகின்ற துவிதமே பந்தம்.

5. பந்தம் நீங்கும் முக்தி யாது?

விசாரத்தினால் மாயை நீங்கின பின் சித்திக்கிற அத்துவிதமே முக்தி.

6. முக்திக்குச் சாதனம் ஏது?

விசாரத்தினால் பிறந்த ஞானம்.

7. இந்த விசாரம் எதனால் வரும்?

அநேக பிறவிகளில் ஈசுரனை உபாசித்த பேருக்கு வரும்.

8. குருவை வழிபட்டு விசாரம் பண்ணுகிறவன் யார்?

தேகாபிமானியாயிருக்கிற ஜீவனே விசாரம் செய்பவன்.

9. குரு முன்னிலையில் ஞானம் கொடுக்கிறவர் யார்?

ஈசுரனே குரு மூர்த்தமாக வந்து ஞானம் கொடுக்கிறவர்.

10. அந்த ஈசுரன் எது செய்தால் ஞானம் கொடுப்பார்?

யாதொன்றையும் வேண்டாத தூய பக்தியினால் ஞானம் கொடுப்பார்.

11. ஈசுரன் யார்?

சாத்வீக உபாதியிலே பிரதிவிம்பித்துத் திரிமூர்த்தி ரூபமாய்த் தோன்றின சைதன்யமே ஈசுரன்.

12. ஒரு சைதன்னியத்திற்கு மாயா உபாதி, அவித்தை உபாதி என்ற இரு வகை ஏற்றத் தாழ்வுகள் ஏன்?

சைதன்னியத்திடத்தில் ஒருவகையும் ஏற்றத் தாழ்வில்லை. ஆனால் உபாதியைத் தொட்டே வேற்றுமை.

13. இவர் மாயையினாற் உலக சிருட்டி எவ்வாறு பண்ணுகிறார்?

சாத்வீக உபாதியினாலே ஈசுரனையும் இராசத உபாதியினால் சீவனையும், தாமச உபாதியினால் மனம் முதலிய பூத பௌதீக பிரபஞ்சத்தையும் சிருட்டித்தார். பிரகிருதி குணத்ரயம் மனம் என்பன.

14. சிருட்டிக்குச் சாதன பரம்பரை ஏது?

நான், என்னது என்கிற விருத்தியே சாதன பரம்பரை.

15. எத்தனை பிரிவிலே சிருட்டி அடங்குகிறது?

நான் என்கிற விருத்தியில் கர்த்தாவும் (அகங்காரமும்) இது என்கிற விருத்தியில் விஷயமுமாய்ச் சிருட்டி இருவகைப் படும்.

16. இந்த பிரிவெல்லாம் தோற்றுவிக்கிறவர் யார்? ஆத்மாதானே.

17. நான் என்ற விருத்தி கர்த்தா ஒருவனைக் கற்பிப்பான் ஏன்?

நான் என்ற விருத்தி ஏகாகரமானபடியினால் கர்த்தா ஒருவனைக் கற்பித்தது.

18. இது என்ற விருத்தி சத்தம், ரூபம், ரசம், கந்தம், தொடு உணர்ச்சி ஐந்தையும் கற்பிப்பான் ஏன்?

இது என்ற விருத்தி இந்திரியங்களில் உள்ள வேற்றுமையினால் ஐந்து விதமாகப் பிரிந்தபடியினாற் ஐந்து வகைப் பொருட்களையும் கற்பித்தது.

19. கர்த்தா ஒருவர், விருத்தி இரண்டு, விருத்தி கற்பிதம் என்கிறதில் பிரமாணங்கள் ஏது?

நாடக சாலையில் விளக்கு, அரசன், வேலைக்காரன், நாட்டியக்காரி, தாளமத்தளக்காரர் இவர்களை வேற்றுமையில்லாமல் தோற்று வித்து அவர்கள் இல்லாத வேளையிலும் விளக்கு தானே விளங்குகிறார் போலக் கர்த்தா முதலானவை உள்ள வேளையிலும், இல்லாத வேளையிலும் கண்டிருக்கின்ற சாட்சியே தான் என்கிற அனுபவமே பிரமாணம்.

20. நாடக சாலையின் விளக்கு, அரசர் முதலான உதாரணத்தைச் சரீரத்திலே இன்னது இன்னது என்று பிரித்துக் காட்டும்?

அகங்காரமே அரசன். விஷயங்களே வேலைக்காரர்கள். புத்தியே நாட்டியக்காரி. இந்திரியங்களே தாளமத்தளக்காரர்கள். இத்தனையும் தோற்றுவிக்கிற சாட்சியே தீபம்.

21. அசைவற்று இருக்கும் சாட்சிக்குத் தீப உதாரணம் பொருந்தாது?

அசையாமல் நட்டுவித்த மெழுகுவர்த்தி இருந்த இருப்பிலே நான்கு புறமும் தோற்றுவிக்கிறார் போல, அகண்ட பூரணமாய் அசைவற்று இருக்கிற ஆத்மாவே உள்ளும் புறமும் தோற்றுவிக்கிறார்.

22. உள், வெளி எதைக் குறித்தது?

உள், வெளி என்பது சரீரத்தை குறித்தல்லாமற் சாட்சியைக் குறித்ததல்ல.

23. உள்ளே இருக்கிறவன் எவன்? வெளியில் இருக்கிறது எது?

நான் என்ற அகங்கரி உள்ளே இருக்கின்றவன். வெளியே இருக்கின்றவை விஷயங்கள்.

24. உள்ளும் புறமும் சஞ்சரிக்கிறது யார்? புத்தி

25. உள்ளும், புறமும் அசையாமற் இருக்கிறவர் யார்?

உள்ளும், புறமும் அசையாமல் இருந்து தோற்றுவிக்கிறவர் சாட்சி.

26. உள்ளும் புறமும் சஞ்சரிக்கிறது புத்தி என்று ஒருவரும் சொல்லக் காணோம்? நான் போனேன், நான் வந்தேன் என்று சொல்லுகிறார்கள். இதிலே காரணம் ஏது?

சன்னல் வழியாய் உள்ளே விழுந்த வெய்யிலிலே கை அசைகிறதை வெய்யில் அசைகிறது என்றாற் போல, உள் இருக்கிற புத்தியும் இந்திரியங்களின் வழியே வெளியிலே புறப்பட்டு அலைந்த தன் அலைச்சலைத் தன்னை தோற்றுவித்த சாட்சியின் பேரில் ஏற்றுவித்து நான் சென்றேன் என்ற வழக்கல்லால் ஆத்மாவுக்கு அலைச்சல் இல்லை.

27. இப்போது இன்ன தத்துவம், இன்ன இன்ன இடத்திலே இருக்கிறது என்று பிரித்துக் காட்டினாற் போலச் சாட்சி இருக்கிற இடமும் பிரித்துக் காட்டவேண்டும்?

புத்தி முதலானதெல்லாம் ஒழிந்திருக்கிற நிலையிலே சாட்சி இருக்கிற இடத்தை காணலாம்.

28. அப்போது எனக்கொரு தேகமும் காணப்படவில்லை. சாட்சி இருக்கிற இடத்தைச் சொல்லும்?

நில்த்திலே இருக்கின்றார், நீரிலே இருக்கின்றார் என்கிறது போல புத்தி முதலானவை ஒழிந்த வேளையிலே காணப்படாதது கொண்டு ஒரு தேகத்தையும் பற்றியிருக்கிறவரல்ல. சகல ஐக கற்பனைக்கும் அதிட்டானமாய் சாட்சி இருக்கிறபடியினால், சர்வ பரிபூரணர்.

29. சகல ஐக கற்பனையை கற்பிக்கிறது ஏது?

சொப்பனத்திலே உள்ளே உள்ள உலகையும், சாக்கிரத்திலே வெளியே உள்ள உலகையும் கற்பித்தது புத்தி.

30. சாட்சி எப்படிக் காண்கிறார்?

இத்தனையும் அறிவாயிருந்து அறிகிறவர் சாட்சி.

31. அவரை நாம் எப்படி அறிகிறது?

அவர் ஒருவராலும் அறியப்படுகிறவரல்லர். எல்லாம் ஒழிந்த இடத்து, தான் மாத்திரம் மிஞ்சுவதிலிருந்து (சத்தியப் பொருள் என்று) அறிந்து கொள்ளலாம்.

32. இப்படிப் பட்ட அறிவு வருவதற்கு உபாயம் ஏது?

குரு முகமாய் வேதாந்த விசாரம் பண்ணுவதே உபாயம்.

33. தானாயிருக்கிற அறிவை அறியமுடியாமற் பண்ணுகிற தடை எது?

தேகாதிகளே நாம். உலகமே சத்தியம் என்கிற இருவகையும் தடை.

34. இந்த தடையைத் தள்ளுகிறது எப்படி?

இந்த புத்தியைத் தள்ளுகிற யுக்தியையும், புத்தி கற்பித்த உலகையும் காண்கிற அறிவாயிருக்கிதே, தள்ளுகிறது என்று அர்த்தம்.இந்த நாடக தீபத்தை சதா விசாரம் பண்ணுபவன் சாட்சியே தானாக விளங்குவன்.

# 6. தத்துவ விவேகம்

ஸ்ரீ சங்கர ஆச்சார்யர்களுடைய இரு பாத கமலங்களுக்கு அநேக கோடி வணக்கம் செய்வதனால் நிர்மலமாக்கப்பட்ட புத்தி உள்ளவர்களுக்கு நமக்கு உள்ளேயிருக்கும் ஆத்மாவின் ரூபம் நன்கு தெளிவுபடுத்தப்படுகிறது.

1 தத்துவம் யாது? அதத்துவம் யாது? விவேகம் யாது?

தத்துவம் என்றால் பரமாத்மா.அதத்துவமாவது மாயையின் காரியங்கள். விவேகமாவது இதனைப் பகுத்தறிவது.

2. பகுத்தறிவது எப்படி?

அறிவாயிருக்கிறது இன்னது. அறியப்படுகிறது இன்னது என்று காணுதல் பகுத்தறிகிறது.

3. அறிவு எத்தனை விதமாயிருக்கும்?

அறிவாயிருக்கிற ஆத்மா ஒரேவிதமாயிருக்கும். (ஒன்றே)

4. அறியப்படுகிறது எத்தனை விதமாயிருக்கும்?

அறியப்படுவது, ஸ்திரமென்றும், அஸ்திரமென்றும், மூல அக்ஞான இருள் என்றும் மூன்று விதமாயிருக்கும்.

5. அறிவையும், அறியப்படுவதையும் நன்கு விளக்கவேண்டும்?

விழிப்புகாலத்தில் அறியப்படும் பொருள்கள் உறுதித்தன்மையோடு கூடியிருக்கும். சொப்பனத்தில் உறுதித்தன்மை அற்றதாகவும்,ஆழ்ந்த தூக்கத்தில் ஒரே இருளாகவும் இருக்கும். இவைகளை எப்போதும் அறிந்து கொண்டிருக்கும் அறிவு அந்த விஷயங்களைப் போல, ஒருக்காலும் தோன்றி அழியாதபடியினால் ஆத்மா ஒன்றே தவிர இரண்டில்லை.

6. இவைகளில் ஆனந்தமாய் நாடவேண்டியது எது? தள்ள வேண்டியது எது?

மூன்று காலத்திலும் காணப்பட்ட பொருளெல்லாம் தனக்கு அன்னியமானபடியினால் தள்ளவேண்டியது. அறிவாயிருக்கிற தன்னைக் கைவிடப்படாதபடியினாலே ஆனந்தமாக நாடவேண்டியது.

7. இப்படி அறிவாயிருக்கிற பொருள் எக்காலத்தினும் தானாகவே இருக்குமேயானால், அஞ்ஞான காலத்தில் அறியப்படாமல் இருப்பான் ஏன்?

மற்றக்குழந்தைகளுடன் கூடி ஒலிக்கின்ற தன் பிள்ளையின் குரல் தெரியாதது போல, எப்பொழுது என்று தீர்மானிக்க முடியாத அஞ்ஞானத்துடனே கூடி குழம்பித் தோற்றுவதால், அறியப்படாமல் இருந்தது.

8. அனாதிகால சித்த அஞ்ஞானம் யாது?

அக்னியில் சூடு போலவும், தண்ணீரில் குளிர்ச்சி போலவும், பிரம்மத்தினிடத்திலே (பிரம்மத்தை மறைத்து) சீவன், உலகு, ஈசுரனை உண்டாக்குகிற மூலப்பிரகிருதியே அநாதி சித்த அஞ்ஞானம் என்பது.

9. இந்த அஞ்ஞானம் எதில் உண்டாயிற்று?

கயிற்றினிடத்தில்(பாம்பு தோன்றினார் போலப் பிரம்மத்தினிடத்தில்) உண்டாயிற்று.

10. இதற்கு குறிகள் ஏது?

இருப்புள்ளதுமல்ல. இருப்பில்லாததுமல்ல. ஒன்றல்ல, பலவுமல்ல. அவயங்களுடன் கூடியதல்ல. அவயங்கள் அற்றதுமல்ல. இவ்விரண்டும் கலந்ததுமல்ல. பிரத்யட்சமாகியுமிருக்கும். பிரத்யட்சமற்றதாயுமிருக்கும். சோதித்துப் பார்க்குமிடத்தில் குறிகள் அற்றுப்போம் என்று வேதம் சொல்லுவதே அஞ்ஞானத்தின் அறிகுறி.

11. இத்தன்மைய பிரகிருதி (மாயை, அஞ்ஞானம்) எது செய்யும்?

தன்னுடைய முக்குணத்தினாலே சீவன், சகத்து, ஈசுரனைக் கற்பிக்கும். (தோற்றுவிக்கும்).

12. அஞ்ஞானம் எதனால் போம்?

பிரம்மமே நாம் என்கிற அத்துவித ஞானத்தினாற் அஞ்ஞானம் போம்.

13. முக்குணத்தினால் சீவன் சகத் ஈசுரனை உண்டாக்கின விதம் எப்படி?

மூலப்பிரகிருதியினுடைய சாத்விக குணமான சுத்த மாயையினிடத்திலே பிரதிபலித்தவன் ஈசுரன். பஞ்சகிருத்தியங்களை செய்கிறவராயிருக்கிற இந்த அந்தர்யாமியை(ஈசுரனை) உண்டாக்கின மாயை தானே அவருக்குக்காரண சரீரம். இராசத குணமென்னும் அசுத்த மாயையான அவித்தையிலே பிரதிபலனமான சைதன்னியமே சீவன். இந்த பிராக்ஞனுக்குக் காரண சரீரமான அவித்தை தாரதன்மியமாய் வெகுவிதமான படியினால் சிதாபாசர்களும் அநேகர். தாமத குணப்பிர கிருதியிலே யிருந்தும் இந்தச் ஜிவர்களுக்குப் போக போக்கிய வஸ்துக்களை உண்டாக்க ஈசுர உத்தரவினால் ஆகாசம், வாயு, அக்னி, நீர், நிலம் எனப்பட்ட முக்குணத்துடனே கூடிச் சூக்கும பூதம் ஐந்தும் உண்டாயின.இந்தப் பூதங்களினுடைய சாத்வீக அம்சத்திலே பூதத்திற்கு ஒவ்வொரு மாத்திரை எடுத்து ஒன்றாகக் கூட்டி வைத்தது அந்தக்கரணம். இது சஞ்சல வியாபாரத்தினால் மனமென்றும், நிச்சயவியாபாரத்தினால் புத்தி என்றும் இரண்டு விதமாக இருக்கும். மற்றும் சாத்வீக அம்சத்தில் பூதத்திற்கு ஒரொரு மாத்திரை எடுத்துத் தனித்தனியே வைத்தது கண் முதலிய ஞான உணர்கருவிகள். பூதங்களினுடைய ராசத அம்சத்திலே பூதத்திற்கு ஒரொரு மாத்திரை எடுத்து ஒன்றாகக்கூட்டி வைத்தது ஐந்து வித வாயுக்கள். மற்றும் இராசத அம்சத்திலே பூதத்திற்கு ஒரொரு மாத்திரை எடுத்துத் தனித்தனியே வைத்தது வாக்கு முதலிய கர்மேந்திரியம். ஆக இந்தப் பதினேழு தத்துவமும் லிங்க சரீரமென்றும்,சூக்கும சரீரமென்றும், (சீவனுக்கு) போக சாதனமென்றும் சொல்லப்படும். இந்தச் சூக்கும சரீரத்துடனே கூடின அவித்யாப் பிரதிவிம்பருக்கு பிராக்ஞன் என்ற பேர் மாறி தைசதன் என்ற பேர்

உண்டாயின. சகல சீவர்களுடைய சூக்கும பூதமும் கூடின சமஷ்டி புத்தியினால் இரண்ணிய கர்ப்பமென்றும் ஈசுர சூக்கும சரீரம் என்றும் சொல்லப்படும். இந்தச் சூக்கும சரீரத்துடனே கூடின மாயாபிரதிவிம்பருக்கு அந்தர்யாமி என்கிற பேர் மாறி சூத்திராத்மா என்ற பேர் வந்தது. எங்கும் தாதான்மியமாய் இருந்தபடியினால் இவரைச் சமஷ்டி என்பது. அவனவன் சரீர மாத்திரம் தாதான்மியமாக இருந்தபடியினாற் சீவர்களை வியஷ்டி என்பது. சீவர்களுக்குப் போகமும் போகத்துக்கிடமான தூல சரீரமும் உண்டாக்கும் பொருட்டுத் தாமத குணமாக இருக்கிற ஆகாசம் முதலியவைகளைப் பஞ்சீகரணம் பண்ணினார். அது எவ்வாறெனில், பஞ்சபூதம் ஒன்றொன்றைப் பாதியாக்கி முதற்பாதி ஐந்தையும் ஒவ்வொன்றை நான்காக்கிப் பூதங்களினுடைய இரண்டாம் பாதி ஐந்தில் தன் அம்சத்துடனே கூட்டாமல் மற்ற பூதங்களினுடனுங் கூட்டுகிறது பஞ்சீகரணம். இப்படிப் பஞ்சீகரணம் பண்ணின ஸ்தூல பூதங்களிலே அண்டங்களும் புவனங்களும் நால்வகைத் தூல சரீரங்களும் போகம் முதலான வஸ்துக்களும் உண்டாயின. இந்தத் தூல பூத பௌதிகங்களெல்லாம் ஒருமைப்பாடாய் ஈசுர, ஸ்தூலச் சரீரமென்றும், விராட்டென்றும் சொல்லப்படும். இதனுடனே கூடின ஈசுரனுக்குச் சூத்ராத்மா என்ற பெயர் மாறி வைஸ்வாநரன் என்ற பேர் வந்தது. தைசதர்களெல்லாம் தூல சரீரங்களுடனே கூடி விஸ்வர்களாய்த் தேவதைகளென்றும், மானுடர்களென்றும், மிருகங்கள் என்றும் பேரை உடையவர்களானார்கள். ஈசுர வாக்கியமான கர்மம் பக்தி ஞானம் என்கிற மூன்றுவித அனுட்டானங்களைப் பண்ணி உள்முகமாகாமற் வெளிமுகமானார்கள், எல்லாரும் இப்படி விருப்பு வெறுப்பு வழியாய்ப் பண்ணின கர்மத்தின் வசத்தினால் பிறவிக் கட்டிலே, ஆற்றில் சுழிவழியேச் சுற்றுகின்ற புழுப்போலச் சுழன்றார்கள். கருணை உள்ளவன் அந்தப் புழுக்களைக் கரையேற்றினவுடனே மரத்தின் நிழலிலேயிருந்து சுகமடைந்தாற் போல, சற்கரும பரிபாகத்தினால் குரு ரூபமாக வந்த ஈசுரனுடைய ஞான உபதேசத்தினால் அபூர்வமாக ஒருவன், பஞ்சகோக விவேகத்தைப் பண்ணி முத்தியும் அடைவான்.

14. பஞ்ச கோசங்கள் யாவை?

ஸ்தூல சரிரமே அன்னமய கோசம். கர்மேந்திரியங்கள் ஐந்தும் பிராணவாயும் கூடினதே பிராணமய கோசம். மனமும் ஐந்து ஞானேந் திரியமும் கூடினதே மனோமயகோசம். புத்தியும் ஞானேந்திரி யங்களும் கூடினதே விஞ்ஞானமய கோசம். பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞானமய கோசம், சேர்ந்தே சூக்கும சரீரம். இனிக் காரண சரீரமே ஆனந்தமய கோசம்.

15. இந்தப் பஞ்ச கோசங்களுடனே ஆத்மாவுக்குச் சம்மந்தம் எவ்வாறு?

நீலம் முதலிய வர்ணங்களுடன் கூடிய பொருட்களுடன் கூடிய அவ்வண்ணமாகத் தோற்றின் ஸ்படிகம் போல, ஆத்மாவாக இருக்கின்ற தானும் பஞ்ச கோசங்களுடனே கூடி அவைகளே தானாகத் தோற்றுகிறதே

சம்பந்தம்.

16. இந்த பஞ்சகோசங்களைத் தானல்ல என்று தள்ளுகின்ற விவேகம் எப்படி?

உடன்பாடு,எதிர்மறை வழியாகத் அதனைத் தள்ளுகிறதே விவேகம்.

17. உடன்பாடாவது(அந்வயம்) எதிர்மறையாவது(வியதிரேகம்) எவ்வாறு? விவேகத்தினால் பஞ்ச கோசத்தைத் தள்ளி அப்பாற்பட்டிருக்கிற பிரம்மமே நாம் என்று அறியும் வழியாது?

தானாக வழங்கின ஸ்தூல தேகம் தோற்றாத சொப்பனநிலையில்தான் தோற்றுகிறதே உடன்பாடு. தான் தோற்றுகினும் தூலதேகம் தோற்றாததே எதிர்மறை. சூட்சும தேகம் தோற்றாத சுழுத்தி நிலையில் தான் தோற்றுகிறதே உடன்பாடு. தான்தோற்றுகினும் சூட்சும சரீரம் தோற்றாததே எதிர்மறை. இந்த சூட்சும சரீரம் தள்ளப்பட்டதே மூன்று கோசங்களும் தள்ளப்பட்டது. சுழுத்தி தோற்றாத சமாதியிலே தான் தோற்றுகிறதே அந்வயம் தான் தோற்றுகினும் சுழுத்தி தோற்றாததே எதிர்மறை. வாழை மரத்திலிருந்து பட்டைகளை உரித்துத் தள்ளி உள்ளேயிருக்கிற தண்டை எடுக்கிறாற் போல உடன்பாடு, எதிர்மறை யுக்தியினாலே தானாய் விளங்கின பஞ்சகோசங்களைத் தள்ளி அப்பாற் பட்ட பிரம்மமே நாம் என்று அறுதி புத்தி உள்ளவர்களே பேரறிவாளர்.

18. இப்படி சீவனுக்கும் பரமாத்மாவுக்கும் ஏகத்துவம் சாதித்ததற்குப் பிரமாணம் ஏது?

சாமவேத மகா வாக்கியமே பிரமாணம்.

19. அந்த மகா வாக்கியத்திற்கு அர்த்தம் ஏது?

முன் சமையற்காரனாக இருந்தவனுக்குக் காலக் கிரமத்தில் அதிகாரி நிலமை வந்து தண்டு கையிலே வரக்கண்ட இடத்திலே, அவன் என்ற சொல்லிலே கரண்டி முதலான உபாதி லட்சணமும், இவன் என்ற சொல்லிலே தண்டு முதலான உபாதி லட்சணமும் விட்டு விட்டு இரண்டு சொல்லிலும் சரீரம் மாத்திரம் அர்த்தமாகக் கொண்டு இவனே அவன், அவனே இவன் என்று ஒருவனைக் குற்றம் இல்லாமற் காட்டுகிறாற் போலச், சகத்திற்கு உபாதான காரண பிரம்மம், மாயா கற்பித ஈசுரன், தாமத பரிணாமமான அவருடைய சரீரம் இம் மூன்றையும் காட்டும் தத்பதம். மலினத்துவமான அவித்யாப் பிரதிவிம்பன். அவனுடைய சரிர உபாதி இவைகட்கு அதிட்டானகூடத்தர் இம் மூன்றையும் காட்டும் துவம் பதம். இவர்கள் இருவரையும் ஒருவனென்றே மகாவாக்கியம் இரண்டு இடத்திலுமுள்ள உபாதியும் உபாதியுடனே கூடின சைதன்னியங்களையும் தள்ளி அகண்டமாய் இருக்கிற சச்சிதானந்தம் ஒன்றைத்தானே விட்டும் விடாத இலக்கணையினாற் குற்றமறக் காட்டும்.

20. இத்தகைய ஞானம் வரத்தக்கதாகக் குரு சன்னிதானத்திலே செய்காரியம் ஏது?

சிரவணம் முதலியவைகளே செய்காரியம்.

21. சிரவணம் முதலிய செய்காரியம் எத்தனை விதம்? அவைகட்கு லட்சணம் ஏது?

சிரவணாதி நான்கு விதம். 1) சகல வேதங்கட்கும் ஆறு லிங்கத்தினாற் அர்த்த விசாரம் பண்ணிப் பிரம்மதாற்பரியமாய்க் காண்கிறதே சிரவணம். 2) அந்த யுக்தியினால் எப்பொழுதும் சிந்திக்கிறதே மனனம். 3) இப்படி இருவகையினாலும் தெளிந்த பொருளிலே மனம் ஒருமைப்பாடாகிறதே நிதித்யாசனம். 4) தியானம் பண்ணுகிறவனையும் தியானத்தையும் இழந்து தியானிக்கப்படுகிற வஸ்து மாத்திரமாக இருக்கிற சித்தமே சமாதி.

22. இப்படிப்பட்ட சமாதிக்குப் பலன் ஏது?

அநாதிகால சஞ்சிதகர்மநாசமும், தன்னை நிர்மலம் பண்ணுகிற தர்மமும், வாசனை நீக்கமும், அபரோட்ச ஞானமும் தனக்குப் பிரயோசனம்.

23. இந்த அதீத சுக சமாதியிலே இருக்கிறவன் அப்படியே இராமற் பிரபஞ்சத்திலே விழிப்பான் ஏன்?

பிராரத்த குறை இருப்பதனால்.

இப்படித் தத்துவ விவேகத்தைப் பலவிதமாக விசாரம் பண்ணி மனதைச் சமாதியிலே லயம் பண்ணிச் சகல சம்சாரத்தையும் விட்டுப் பரப்பிரம்மம் ஆகலாம் என்று இப்படித் தத்துவ விவேகம் சொல்லுகிறது.

---

# 7. பஞ்சபூத விவேகம்

சிருட்டிக்கு முன்சத்தாகவே இத்தனையும் இருந்தது என்னும் சாமவேத அர்த்தத்தைப் பஞ்சபூத விவேகத்தினால் விளக்கம் பண்ணுகிறார்.

1. சத் என்று சொல்லப்பட்டது எது?இத்தனையும் என்று சொல்லப்பட்டது எது?

சத் என்று சொல்லப்பட்டது இருக்கிறது, இரண்டற்றப் பிரம்மம். இத்தனையும் என்று சொல்லப்பட்டது பஞ்சபூதமும் அவைகளின் குணங்கள் ஐந்தும், அவைகளை அறிகிற இந்திரியங்கள் ஐந்தும், இவைகளுக்குச் சகாயமாக இருக்கிற இந்திரியங்கள் ஐந்தும், அந்தக்கரணமும், நான் என்கிற ஒருவனும் இத்தனையும் கூடினதற்கு இத்தனை என்று பொருள்.

2. இந்த பூதங்கள் ஐந்திற்கும் ஒவ்வொரு பூதங்களுக்கும் எத்தனை எத்தனை குணங்கள் உண்டு?

ஆகாசத்திற்கு குணம் ஒன்று, வாயுவிற்கு குணம் இரண்டு, நெருப்பிற்கு மூன்று, நீருக்கு நான்கு, நிலத்திற்கு ஐந்து.

3. பூதங்களுக்குள்ள குணங்களைப் பகுத்துக்காட்டும்?

சப்தம் ஒன்றே ஆகாசத்தின் குணம்.வாயுவில் வீசி என்னும் சப்தமும் உஷ்ணமும் குளிர்ச்சியும் அல்லாமல் தொடுஉணர்ச்சியும்,நெருப்பில் புகு புகு என்ற சப்தமும் உஷ்ணமாயிருக்கும் உணர்ச்சியும் பிரகாசமாயிருக்கும் ரூபமும், நீரில் புலு புலு என்ற சப்தமும் குளிர்ந்த உணர்ச்சியும், வெளுப்பு நிறமும், இனிப்பு ரசமும், பூமியில் கடகடா என்கிற சப்தமும் கடினமாயிருக்கும் உணர்ச்சியும் நீலம் முதலான ரூபங்களும் தித்திப்பு புளிப்பு முதலான ரசமும் நல்லவாசனை நாற்றம் என்கிற இரண்டுவித வாசனையும் உண்டு.

4. இதற்கு பிரமாணம் ஏது?

ஐந்து உணர்கருவிகளால் அனுபவிக்கிறதே பிரமாணம்.

5. இந்திரியங்களுக்கு இப்படி வெளிப்பார்வைதானே, உள் பார்வை இல்லையோ?

காது துவாரத்தை விரலினால் மூடினால் உள்சப்தம் கேட்பதாலும், குடிக்கையில் புசிக்கையில் குளிர் உஷ்ணம் தொடு உணர்ச்சியாலும், கண்ணை மூடினவிடத்து உள்இருட்டு ரூபம் தோற்றுவதாலும், வாந்தி பண்ணுகிறபோது புளிப்பு முதலிய ரசங்களை அறிவதாலும், ஏப்பம் விடும்போது நல்ல கெட்ட வாசனைகளை அறிவதாலும் உள் பார்வையும் உண்டு.

6. இதற்குசகாய இந்திரியம் ஏது? அதற்கு தொழில் ஏது?

வாக்கு முதலிய சகாய இந்திரியமும், பேச்சு முதலிய தொழிலும்.

7. உள் இந்திரியமான மனதும் அதன் தொழிலும் ஏது?

ஞானக் கருவிகள் ஐந்திற்கும், கர்ம கருவிகள் ஐந்து ஆக பத்து கருவிகளுக்கும் அரசனாய், கருவிகளின் வழியே குணம் குற்றம் விசாரிக்கிறதாய் இருதயகமலத்தின் நடுவே இருப்பது மனம். வைராக்கியம், ஞானம் முதலான சாத்வீகப் பிரவிருத்தியும் காமக்குரோத முதலான ராசதப் பிரவிருத்தியும் சோம்பல் தூக்கம் முதலான தாமதச் செயல்களும் இதன் தொழிலாகும்.

8. இந்த மூன்று வகைப் பிரவிருத்திக்கும் பலன் ஏது?

சாத்வீகப் பிரவிருத்தியால் புண்ணியமும், ராசதத்தால் பாவமும், தாமசத்தால் இரண்டுமற்று வீண்காலம் போம்.

9. இப்படி பதினோறு இந்திரியத்தினாலும் , யுக்தியினாலும் சாஸ்திரத்தினாலும் அறியப்படுகிற சகலசகத்தும் சத்துதானே என்பது கூடாது?

விசாதிய பேதம் (வேறு இனத்தால் வேற்றுமை), சசாதீய பேதம்(தன் இனத்தால் வேற்றுமை ), சுவகத பேதம்(தன்னிடத்திலுள்ள அங்கம் வேற்றுமை). இம் மூன்றும் அற்றது சத்துதானே.

10. இந்த மூன்று வேற்றுமைகள் யாவை? இந்தச் சத்து இந்த மூன்றும் அல்ல என்பது எப்படி?

மரத்திற்குக் கல்லு விசாதீயம், மரத்திற்கு வேறுமரம் சசாதீயம், மரத்திற்கு இலை, பூ, காய் முதலியவைகளால் சுவகத பேதம். இந்தப்படிச் சத்திற்கு சகத்து விசாதியம் என்னக்கூடாது. அசத் இல்லாத படியினால் சத்திற்குச் ஜகம் சுசாதியம் என்னக்கூடாது. மறுசத் இல்லாதபடியினால் சுவகதபேதம் என்னவும் கூடாது, நிர் அவயமானபடியினால். ஆகையால் இவை எல்லாம் சத்துத்தானே.

11. அப்படியல்ல எல்லாம் அசத்தாகவேமுன் இருந்ததல்லவா?

சூரியன் இருட்டுடன் கூடியுமிரான். அவன் இருளுமல்ல என்கிறதுபோலச் சகத்துமுன் அசத்தாயிருந்ததானால் சத்துடனே கூடியும் இராது. சத்தாகவும் மாட்டாது.

12. சத்தைத் தவிர ஒன்றும் இல்லாவிட்டாற் சிருட்டிக்குமுன் எல்லாம் சத்தாய் இருந்ததென்று வேதம் சொல்லுவான் ஏன்?

காலவாசனையுடனே கூடியிருக்கிற சீடனைக் குறித்து சொன்னதே அல்லாமற், உண்மையல்ல. ஆகையினால் கேள்வியும் பதிலும் துவிதத்திலே அல்லாமல் அத்துவிதத்திலே இல்லை.

13. அறியாமையினால் கேள்வி கேட்டேன். உண்மை ஏது?

அசையாமல் கம்பீரமாய் வெளிச்சமும், இருட்டும் அல்லாமல், மனம் வாக்குக்கு அதீதமாய் இருக்கிற பிரம்மமே சத்.

14. மண் முதலானவை பரமாணுவாய்ப் போனாபடியினால் இல்லை என்கிறது உணர்ந்தேன். பிரளயத்திலே ஆகாசமும் இல்லாமற் போம் என்பது கூடாது?

முற்றிலும் சகத் இல்லாமலிருக்கிற ஆகாசம் .உன் புத்தியிலே தோன்றினாற்போல, நிர்ஆகாசமாயிருக்கிற சத்து நம்முடைய புத்தியிலே தோன்றும்.

15. சத்தாயிருக்கிற சுத்தசைதன்னியத்தை எப்போது அனுபவிக்கலாம்?

சிந்தனையற்றிருக்கிற வேளையிலே அனுபவிக்கலாம்.

16. அப்போது சத்தென்ற புத்தியும் இல்லையோ?

அது உண்மைதான். புத்தியற்ற நிலைக்குச் சாட்சிமாத்திரமாக இருந்தோம் என்கிற அனுபவமே போதும். ஆகையினால் மனவிகாரமற்ற வேளையிலே சாட்சிமாத்திரமாக இருக்கின்றார் போல மாயாவிருத்திக்கு முன்னும் சத் இருக்கும் என்று அறியலாம்.

17. இந்தமாயைக்கு அறிகுறிகள் ஏது?

இருப்பதுமல்ல, இல்லாததுமல்ல. விசாரித்து பார்த்தால் இல்லாமற் போகிறதே அறிகுறி.

18. சத்தைவிட மாயாசத்தி இல்லாவிட்டால் அசத் என்கிற அறிகுறி ஆகட்டுமே?

அசத் மாயாகாரியமல்லாமற் சொரூபமல்ல. ஆகையினால், கடசக்தி மண்ணிலே என்றாலும் ஏகதேசமாக இருக்கின்றார் போலமாயாசக்தியும் பிரமத்தினிடத்தில் ஏகதேசமாக இருக்கும்.

19. பிரமத்தினிடத்திலே இருக்கின்ற மாயை ஏது செய்யும்?

சுவரைப் பற்றியிருக்கிற வர்ணம் சுவரினிடத்திலே பலவித சித்திரங்களைக் கற்பித்தாற் போலப் பிரம்மத்தைப் பற்றியிருக்கிற மாயையும் நிர்விகாரத்திலே விகாரத்தைக் கற்பிக்கும்.

20. மாயையினாற் கற்பிக்கப்பட்ட விகாரங்கள் ஏது?

முதல் விகாரம் ஆகாசம். அதற்கு லட்சணம் அவகாசம்(இடம்)

21. சத்திற்கும் ஆகாசத்திற்கும் சுபாவம் எத்தனை?

உண்டு என்கிறது மாத்திரமே சத்தின் சுபாவம், உண்டுஎன்கிறதும் சத்தமும் ஆகாசத்தின் சுபாவங்கள், சத்திலே சத்தம் இல்லை. சத்தும் சத்தமும் ஆகாசத்தின் சுபாவம்.

22. சத்துதானே ஆகாசமானால், சத்தின் குணம் ஆகாசம் என்று சொல்லவேண்டுமேயல்லாமல், ஆகாசத்தின் குணம் சத்தம் என்று வாதிகள் சொல்லுவானேன்?

பிரமத்தினிடத்திலே ஆகாசத்தைக் கற்பித்த மாயை குண குணிகளையும் தாறுமாறாகத் திருப்பிவைத்தது. குண பிரமிப்பிக்கவைக்கிறது மாயைக்குச் சுபாவம். அப்படி

23. இது தெரியும் வழி ஏது?

வேதாந்தவிசாரம் பண்ணினால், சத்தினிடத்திலே ஆகாசம் கற்பிதமான படியினாற் சத்தைப் பிரதானமாகவும், ஆகாசத்தை அப்பிரதானமாகவும் அறியப்படும்.

24. சத்தைத் தவிரப் புறம்பாயிருக்கிற ஆகாசத்தை அசத்என்று அறிகிறதெப்படி?

ஆகாசம் உண்டு என்னும் சொல்லில் உண்டென்கிற சொல்லினாலும் விவேகித்து பார்த்தாற் காட்டப்பட்ட பொருளைத் தவிர ஆகாசமில்லாதபடியினாலும், ஆகாசம் அசத்துதானே என்று அறியலாம். மூலசுலோகப்படி விசாரமாவதேது? சத்தென்னும் சத்தமும் ஆகாசமென்னும் சத்தமும் பரியாயமல்ல(சமான மானவைகளல்ல) வாயு முதலியவற்றில் சத்தானது அநுவிர்த்தித் திருக்கிறது(வியாபித்திருக்கிறது) ஆகாசம் அப்படி அநுவிர்த்தித் திருக்கவில்லை. ஆதலால் ஆகாசம் மித்தை என்பதே விசாரம்.

25. ஆகாசம் தோற்றுகிறபடியினால் இல்லை என்பது எப்படி?

யாதென்று சத்தைத் தவிர அசத்தாக இருந்து தோற்றுகிறதோ அதெல்லாம் சொப்பனத்தில் காணப்படுகிற யானை முதலியது என்று அறியவும்.

26. இப்படி ஆகாசத்திலே சத்தையும், சத்தத்தையும் பிரித்து காண்கிற போது ஆகாசம் மித்தையாவானேன்?

கற்பித மாயா காரியம் ஆனபடியினாற் காரணம் போல் மித்தையாக வகுப்பற்றது.

27. பொய்யாயிருக்கிற ஆகாசமும், மெய்யாய் இருக்கிற சத்தும் ஏகமாக பொருந்திச் சகலர்க்கும் தோற்றுகையினாற் பிரித்துக்காண்கிற வழி எப்படி?

இனம் தனித்த நபர் தேகத்தையுடையது தேகம், உடலும் உயிரும்போலவும்(சரீரத்தைவிட்டு ஆத்மாவை பிரித்துக் காட்டமுடியாது. ஆனாலும் சரீரம் வேறு, ஆத்மாவேறுதான்) சத்தும் ஆகாசமும் வேறு என்று அறி.

28. இப்படியறிந்தாலும் சத்தும் ஆகாசமும் வேறு என்று அறியப்படவில்லை. அது எதனால்?

முன் புத்தி ஒருமைப்படாதபடியினாலும், சந்தேகத்தினாலும் ஏறவில்லை. மன ஒருமைப்பாட்டிற்குத் தியானம் செய்து கொண்டிரு. சந்தேகமிருந்தால் மீண்டும் நன்கு விசாரி.

29. விசாரித்தவனுக்குப் புத்தியில் எப்படி இருக்கும் ?

சத்தாயிருக்கிற வஸ்து அகண்டமென்றும், ஆகாசம் பரிச்சின்னம்(அற்பம்) ஆனபடியினால் மித்தை என்றும், புத்தியிலே திடப்பட் டிருக்கும்.

30. இப்படி அறிந்தவன் உலகத்தாருடன் எப்படிப் பேசுவான்?

(சத்தைத்தானே ஆகாசமென்று பேசுகிறவனையும், ஆகாசம் சின்மாத்திரம் என்று பேசாதவனையும் கண்டவுடனே ஆச்சர்யப்படுவான்) இந்த வாசனை நன்கு பலப்பட்டுவிட்டால் அந்த ஞானி, ஆகாசம் சத்யமென்று சொல்கிறவனையும், தனித்து சத்வஸ்துவை அறியாதவனையும் பார்த்து ஆச்சர்யமடைவான்.

31. இவ்வாறு பிரித்தறிந்துபின் செய்காரியம் ஏது?

இந்த ஞானத்தின்படியே வாயு முதலான பூதங்களினும், சத்துப் பரிபூரணமானபடியினால் எங்கும் காணப்படுமென்றும், ஆசாசம் முதலியவை பரிச்சின்னமான படியினால் எங்கும் காணப்படவில்லை என்றும், பூதங்களெல்லாம் மித்தை என்றும், திடப்படுத்த வேண்டும்.

32. பூதங்கள் பரிச்சின்னமாய் எப்படி காணப்படுகின்றன? பூதங்களுக்குச் சுபாவ குணமென்ன, அன்னியகுணம் என்ன?

சத்தினிடத்திலே ஏகதேச கற்பிதம் மாயை. மாயையினிடத்திலே ஏகதேச கற்பிதம் ஆகாசம், ஆகாசத்தில் ஏகதேச கற்பிதம் வாயு. (1) வாயு உணடென்கிறது சத்தினுடைய அம்சம். (2) சத்தைவிட்டுப் பார்த்தால் வாயு காணாமற் போகிறது, மாயையின் அம்சம். (3) சத்தம் ஆகாசத்தின் அம்சம் ஆக இம் மூன்றும் வாயுவிற்குக் காரணகுணம் சுபாவகுணம் ஸ்பரிசம். இத்தனைகளிலும் சத்தைப் பகுத்தாற், காணாமற் போகிறபடியினால் வாயு மித்தை.

33. இப்படி வாயு மித்தை என்று அறிந்த பின் செய்காரியமேது?

வாயுவில் பத்தில் ஒன்றாய்க் கற்பிக்கப் பட்ட அக்கினியும் மித்தை என்றே காணவேண்டும். அக்கினி உண்டென்கிறது சத்தின் அம்சம். சத்தைவிட்டுப் பார்த்தால் இல்லாமற் போகிறது மாயையின் அம்சம். சத்தம் ஆகாசத்தின் அம்சம். ஸ்பரிசம் வாயுவின் அம்சம். ஆகக் காரண குணம். நான்கு. சுபாவ குணம் ரூபம். இத்தனையும் சத்தைத் தவிர வேறு அல்லவென்று காண்கிற காரியம் பண்ண வேண்டும்.

34. இப்படி அக்கினியும் மித்யை என்று அறிந்தபின் செய்காரியம் ஏது?

அக்கினிக்குப் பத்தில் ஒன்று கற்பிதம் நீர். நீருக்கு ரசத்துடனே கூட ஆறுகுணம். நீருக்குப் பத்தில் ஒன்று கற்பிதம் மண். மண்ணுக்கு வாசனையுடன் கூட ஏழு குணம். மண்ணில் பத்தில் ஒன்று கற்பிதம் பிரமாண்டம். பிரமாண்டத்தில் கற்பிதம் புவனங்கள். புவனத்தில் கற்பிதம் சரீரங்கள் என்று அறிந்து இத்தனைகளிலும் சத்தைவிட்டுப் பார்த்தால் இவைகளுக்கு சொரூபமில்லாத படியினாலும் சின்மாத்திரமென்று காண்கிறதே செய்காரியம்.

35. இப்படிச் சர்வத்தையும் மாயாகற்பிதமென்று அனாதரவு பண்ணினாற் குற்றமில்லையோ?

சாங்கியர், கணாதர், பௌத்தர், முதலான மதவாதிகளால்

உலகத்திலுள்ள வேற்றுமை பலவித யுக்திகளால் எப்படி எப்படியெல்லாம் இருப்பதாக நினைக்கப்படுகிறதோ, அது அப்படி அப்படியே இருக்கட் டும்.அவர்களுக்கே எந்தவித குற்றமும் சம்பவிக்காத போது, மாயா கற்பிதமாயிருக்கிற துவிதத்தை அனாதரவு பண்ணிப் போட்டிருக்கிற நமக்குப் பிரத்தியபாயம் கொஞ்சமும் இல்லை.

36. இப்படி துவிதத்தை அனாதரவு பண்ணினாற் பிரயோசனம் ஏது?

இரண்டாவதிலுள்ள அலட்சிய புத்தி நன்கு நிலைத்ததேயானால், இரண்டாவதற்றதில் புத்தி ஸ்திரமாக ஏற்படும்.

37. இப்படிச் சத்தையும் அசத்தையும் பிரித்தறிந்தால் சீவன்முத்தி எப்போது வரும்?

இரண்டாவதிலுள்ள அலட்சிய புத்தி திடப்பட அறிந்த அன்றே இந்த மனிதன் சீவன் முக்தன்(சீவித்திருக்கும் போதே உலகக் கட் டுகளிலிருந்தே விடுபட்டவன்) என்று சொல்லப்படுகிறான்.

38. சரீரம் மரிக்கும் போது அந்த நிலைவரவேண்டாமோ?

1) தினந்தோறும் கற்ற அறிவு சொப்பனம், சுழுத்தி நிலைகளிலே மறந்திருந்தாலும், விழித்தவுடன் கண்முன் நிற்கின்றாற் போலப் பிராணன் போகிற மூர்ச்சையிலே(கடைசி காலத்திலே) மறந்திருந்தாலும் ஞானம் போகாது. பிராந்தியானது போய்விட்டது அது மறுபடியும் கடைசி காலத்தில் ஏற்படாது.

2) கடைசி காலம் என்பது அக்ஞானம் நாசமாகும் காலம் என்றும் அர்த்தம் உண்டு. சத்தையும் அசத்தையும் ஒன்றோடொன்று கலந்து ஒன்றாகப் பார்ப்பது எதுவோ, அதனுடைய கடைசி காலம் அவ்விரண்டிற்கும் உள்ள வேற்றுமை அறிவதேயாகும். வேறல்ல. இவ்வாறு அறிந்தவன் ஆரோக்கியத்துடன் உட்கார்ந்து கொண்டோ, வியாதியினால் பீடிக்கப்பட்டுப் பூமியில் புரண்டு கொண்டோ உணர்வில்லாமலேயோ இவன் பிராணனை விடட்டும். எவ்விதத்திலும் அவனுக்குப் பிராந்தி கிடையாது.

39. இவ்வாறு கற்ற அறிவு பின்னை எதனால் போம்?

வேதத்திற்கு மேற்பட்ட பிரமாணம் ஒன்று உண்டானால் அதனால் போகிறதே அல்லாமல், சுழுத்தி மூர்ச்சையிலே போகிறதல்ல, ஆகையினால் அத்துவித ஞானத்திற்கு ஒன்றினாலும் நாசமில்லை.

ஆகையினால் இந்த பஞ்ச பூத விவேகத்தை விசாரம் பண்ணிச், சகல பிரபஞ்சத்தையும் சின்மாத்திரமாய்க் கண்டு அத்துவிதநிலை பெற்றவனை, ஒரு மோகங்களும் கிட்டாதென்று, பகவானும் கீதையிலே சொல்லி இருக்கிறார்.

---

# 8. பஞ்ச கோச விவேகம்

பிரம்மத்திற்கு லட்சணம் சத் என்றும், இரண்டற்து என்றும் சொல்லப்பட்டது. சத் என்று வேறு எதுவும் கிடையாது என்று சொல்லும் போது உலகும் சீவனும் இருக்கிறதே என்றால், அந்த உலகுக்கு பிரம்மத்தை விட்டுத் தனியாக இருப்பு கிடையாது என்பதை முன் அத்தியாயத்தில் காட்டினார். இந்த அத்யாயத்தில் சீவனும் பிரம்மத்தைத் தவிர வேறில்லை என்று காட்டுவதற்காகப் பிரம்மத்தைச் சீவனாகத் தோற்றுவிக்கும் ஐந்து கோசங்களின் தன்மையைத் தெரிந்து அவைகளிலிருந்து ஆத்மாவைப் பிரித்து அறிய வேண்டுமென்று சொல்லுகிறார்.

1. தைத்திரியம் என்கிற உபநிடதத்திலே குகையிற்குள்ளிருக்கிற பிரம்மத்தை அறிந்தால் முக்தி உண்டென்று சொன்னதற்கு அர்த்தம் ஏது?

தேகத்திற்கு உள்ளே பிராணன். பிராணனுக்கு உள்ளே மனம். மனதிற்கு உள்ளே புத்தி புத்திக்கு உள்ளே ஆனந்தம். இவ்வைந்தும் குகை (கோசம் – உறை). இதற்கு அன்னியமாயிருக்கிறவர் ஆத்மா.

2. இந்த ஐந்தையும் தானே ஆத்மாவென்று சகல மதஸ்தர்களும் சொல்லுவதால், இவைகளைத் தள்ளுவது எப்படி?

பெற்றோர் புசித்த அன்னத்தினால் ஏற்பட்ட வீரியத்திலிருந்து பிறந்து அன்னத்தினாலேயே சரீரம் வளர்கிறது. அன்னமயமாகிய அது பிறப்புக்கு முன்னாலும், இறப்பிற்கு பின்னாலும் இல்லாததினால் ஆத்மாவாகாது.

சரீரத்தில் பூராவும் வியாபித்துக் கொண்டு, பலம் கொடுத்துக் கொண்டு இந்திரியங்களை ஏவும்படி செய்துகொண்டு வாயு இருக்கிறதே அது பிராணமயன். சைதன்னியமில்லாததினால் அது ஆத்மாவல்ல.

நான் என்றும், என்னுடையதென்றும் தேகத்திலும் வீடு முதலியதிலும் எண்ணுகிறது எதுவோ, ஆசை முதலான நிலைகளால் மயக்கம் அடைகிறது, அலைவது எதுவோ அது மனோமயகோசம். பலவித மாறுபட்ட நிலைகளை அடைவதால் மனோமயகோசம் ஆத்மாவல்ல.

தூக்கத்தில் லயமாகி, விழிப்பில் தேகம் பூராவும் வியாபித்துள்ள சைதன்னியத்தின் பிரதிபிம்பத்தோடு கூடிய விக்ஞானமயன் என்ற வார்த்தையால் சொல்லப்படும் புத்தி ஆத்மாவல்ல.

புண்ணியத்தை அனுபவிக்கும் சமயம் ஆனந்தத்தின் பிரதிபிம்பத்தின் சம்பந்தத்தை அடைந்து உள்நோக்கி ஏற்படும் விருத்தி, அவ்வனுபவம் அடங்கின போது தூக்கமாக லயத்தை அடைந்து விடுகிறது.சில சமயங்களில் மாத்திரம் இருக்கும் காரணத்தினால் இந்த ஆனந்தமயகோசமும் கூட ஆத்மாவல்லாததுதான்.

3. இப்படி இந்த ஐந்துமே ஆத்மாவல்லவென்றால் இதற்கு அன்னியமாக ஆத்மாவை வேறே காணோம்?

பஞ்ச கோசங்களை அதற்குச்சொன்ன லக்ஷணத்துடனே தோற்றுவித்து, அப்பால் இனி ஒன்றும் காணோம் என்றிருக்கிற ஆதார சைதன்னியமே ஆத்மா.

4. இந்தப் பஞ்ச கோசங்களை ஆத்மா கண்டால், ஆத்மாவைக் காண்கிறதார்?

சுத்த சைதன்னியமாயிருக்கிற ஆத்மா சடங்களை எல்லாம் அறிவார். தாம் சடமாகதபடியினால் ஒன்றினாலும் அறியப்படார். தானே அனுபவ சொரூபமாயிருப்பதனால் அனுபவிக்கப்படும் தன்மை அதற்கு கிடையாது. அதை அறிவதற்கு அறிபவன் என்றும், அறிவு என்றும் வேறு கிடையாததினால் அறியப்படவில்லையே தவிர இல்லாததினால் அறியப்படவில்லை.

5. அறிவாயிருந்தும் ஒன்றினாலும் அறியப்படாதபோதே ஆத்ம அறிவு என்பது எப்படி?

வெல்லத்திற்குத் தன்னுடைய ரசம் தன்னால் அனுபவிக்கப்படாதிருந்தாலும், அன்னியமாயிருக்கிற இந்திரியங்களினால் அனுபவிக்கப்பட்டது கொண்டு மதுரம் சுபாவம் என்றது போலச், சகத்தையும் அறிகின்ற ஆத்மாவுக்குத் தான் அறிவு என்பதற்குச் சந்தேகம் தேவையில்லை.

6. அறியப்பட்டது பிரம்மமோ? அறியப்படாதது பிரம்மமோ?

இந்த இருவகையுமல்ல. இதற்கு அப்பாற்பட்டது.

7. இப்படி இருந்தால் அவரை அறிவதெப்படி?

எனக்கு நாக்கு உண்டோ இல்லையா என்கிற சொற்போல, அறிவாயிருந்தும் அறிவு எப்படி இருக்குமென்று கேட்டது அழகல்ல.

8. அஞ்ஞானியாயிருக்கின்றவனுக்குப் பிரம்ம நிச்சயம் வர வழியேது?

அறிவினாற் காண்பித்த எல்லாம் சடமாய்ப்போனாலும், நித்ய போதமாயிருக்கின்ற அறிவே பிரம்மமென்று காணவேண்டும்.

9. இந்த அறிவாயிருக்கிற ஆத்மாவே பிரம்மமானால், சச்சிதானந்தம் என்கிற லக்ஷணத்திலே சித்தில்லாத லக்ஷணத்தை ஏன் சொல்லவில்லை?

இப்படி அறிவாயிருக்கிறதான்எப்போதும் உண்டென்றிருக்கையி னாலும், ஒரு காலத்தினும் இல்லை என்று போகாதபடியினாலும், ஆத்மா சத் என்பது கூடும். மாயா கற்பிதமாயிருக்கின்ற கால தேச வஸ்துகளை ஆத்மா கடந்த பொருள் ஆனபடியினால் இந்த மூன்றினாலும் வாதையற்றது ஆனந்தம் என்பது கூடும்.

10. இப்படிப் பட்ட ஆத்மா எப்படிப்பட்டவர்?

அவ்விஷயத்தில் இதைப் போல என்றே கிடையாது. எது இதைப் போலவும் இல்லை, அதைப் போலவும் இல்லையோ அதுதான் அதன்

சொரூபம். இந்திரியங்களுக்கு விஷயமாயுள்ளது 'இது போல' இந்திரியங்களுக்கு அப்பால் உள்ளது 'அது போல' என்று சொல்லப் படுகிறது. ஆத்மா இந்திரியங்களுக்கு விஷயமாகாதபடியினால் இப்படிப் பட்டவர் என்று சொல்லக் கூடாது. தானாகவே இருக்கிறவர் ஆனபடியினால் அப்படிப் பட்டவர் என்று பரோட்சமாகவும் சொல்லக் கூடாது. இப்படி இருவகையிலும் சொல்லப் படாதவரே ஆத்மா.

11. இவ்வாறு நிர்ணயமானால் இவன் சீவன் என்றும், இவன் ஈசுரன் என்றும் மகா வாக்கியத்தினால் இருவகைக்கும் ஐக்கியம் வந்தால் மோட்சம், என்று சொன்ன வேத வாக்கியம் எப்படிக் கூடும்?

ஒருவனே மகனை உத்தேசித்து தந்தையாகவும், பேரனை உத்தேசித்து பாட்டனாகிறான். புத்திரன், பேரனை உத்தேசிக்காத விஷயத்தில் அந்த இரண்டு நாமமும் இல்லாமற் போகின்றாற் போல, மாயை அவித்யை எனப்பட்ட இரண்டு உபாதிகளாலும் ஈசுரன் என்றும், சீவன் என்றும் சொல்லப்பட்டது ஒரு பிரம்மத்தைத் தானே, உபாதி மித்யை என்று அறிந்த உடனே சீவனும் அல்ல, ஈசுரனும் அல்ல, நாம் பிரம்மம் தானே என்கிற ஐக்கியம் வரும்.

12. இத்தகைய ஞானத்தினால் பலன் ஏது?

இப்படி ஆத்மாவே பிரம்மம் என்று பஞ்ச கோச விவேகத்தினாற் பகுத்தறிகிறவன், தானாக இருக்கிற பிரம்மத்திற்கு சம்சாரம் இல்லை என்கிற வேத வாக்கியப் படிக்கு முத்தனாய்ப் பிரம்மாகவே இருப்பன். இவனை காலத்திரயத்திலும் சம்சாரம் தொடாது. இதுவே பலன்.

---

# 9. துவித விவேகம்.

இரண்டாவதாகத் தோற்றும் சகத்தை ஈசுரன், சீவர்களுடைய போக்கியத்திற்காக சிருட்டித்தார் என்றும், அதைப் போக்கியமாக ஆக்கிக் கொள்ளாமல் இருக்கும் நிலையில் சீவன் நின்று விட்டால், அந்த சகத்து இவனை எவ்விதத்திலும் பாதிக்காது என்பதையும், சகத்தின் சிருட்டிக்கு சீவன் காரணம் இல்லாத படியினால் அதை இல்லாமற் செய்யவும் இவனுக்கு சக்தி கிடையாது என்பதையும், ஆனாலும் சகத்தால் பாதிக்க படாமலிருக்கும் தன்மையை அடைய இவனுக்குச் சுதந்திரம் உண்டு என்பதையும் இவ்வத்தியாயத்தில் விளக்குகிறார்.

1. துவிதம் எத்தனை விதமாய் இருக்கும்?

ஈசுரனால் சிருட்டிக்கப் பட்ட துவிதம் என்றும், சீவனால் படைக்கப் பட்ட துவிதம் என்றும் இரண்டு விதமாய் இருக்கும். பஞ்சீகரணம் பண்ணின தூல பூத பௌதீகம் வரை உண்டான தத்துவமெல்லாம் (சரீராதி சகத் பூராவும்) ஈசுர சிருட்டி. விழிப்பு முதல் சீவன் முக்தி வரையுள்ள நிலைகளின் கற்பனையும், அந்தந்த நிலைகளுடைய சாதி வர்ணம் ஆசிரமம் உலக முறை முதலான சகல கற்பனைகளும் சீவ சிருட்டி.

அனைத்தும் ஈசுர கற்பனையானாலும் பிதாவினால் சிருட்டிக்கப் பட்ட மகள் அந்நிய புருடனுடைய போக கற்பனைக்கு இடமானாற் போல, நல்லது பொல்லாததென்று போக கற்பனைக்கே இடமாயின. ஆகையால் இவையெல்லாம் சீவ சிருட்டியே.

2. ஈசுரனுடைய காரியமும் சீவனுடைய போகமும் ஈசுர சிருட்டி என்றும் சீவ சிருட்டி என்றும் சொல்வது எப்படி?

ஈசுரனாற் சிருட்டிக்கப்பட்ட மண் பொன் பெண் முதலானவைகளில் இவை எனக்கு அகப்பட்டது என்று ஒருவன் சந்தோசமடைகிறான். இது நமக்கு அகப்படாமற் போயிற்று என்று ஒருவன் துக்கமடைகிறான். சுக துக்க கற்பனைக்கு அப்பாற்பட்ட ஒருவன் இதை விரும்புவதுமில்லை, வெறுப்பதுமில்லை. இவ்வாறு பிரியம் அப்பிரியம், உபேட்சை என்று மண் முதலானவைகளில் காணப்படுகின்ற மூன்று அகங்காரங்களும், மனோ கற்பிதமான சீவ சிருட்டியே அல்லாமற் ஈசுர சிருட்டி அல்ல. இந்த மூன்று அகங்காரங்களும் அற்றுத் தன் சுபாவத்தில் இருந்ததே ஈசுர சிருட்டி. தாய், மனைவி, சகோதரி என்ற வேற்றுமையுடன் தோன்றுகிற ஒரு மாமிச சரீரந்தான், ஈசுர சிருட்டி. அதைக் குறித்து உண்டான அனேக எண்ணங்களும் அந்த அகங்காரங்களுக்கு ஏற்ப அவனவன் மனதிலே எழுந்த சம்சாரமும் சீவ சிருட்டி.

3. பிராந்தியினாலும், சொப்பனத்தினாலும் மனோராச்சியமாகக் கற்பிக்கப் பட்ட அந்தக்கரண கற்பனை எல்லாம் சீவ சிருட்டியாக இருக்கட்டும்.

சாக்கிரத்திலே பிரமாணத்தினாற் (மனோ விருத்தி) பிரமாண்யமாக (புத்தி) அறியப்பட்ட பிரமேயங்களெல்லாம் (குடம்) முதலியவைகளெல்லாம் சீவ சிருட்டி என்றது கூடாது?

உலகத்திலே சகல பதார்த்தங்களையும் தோற்றுவிக்கிற சூரியப் பிரகாசம் அந்த பொருட்களின் பேரிலே விழுந்து அவைகளை வியாபித்து அவைகளைத் தோற்றுவிக்கிறாற்போலச் சாக்கிரத்திலே புத்தியிடம் இருந்து உண்டான புத்தி விருத்தி குடம் முதலியவைகளை அடைந்து அவைகளின் மயமாய் அவைகளின் அஞ்ஞானத்தை (இருட்டை) தள்ளி அவைகளைத் தோற்றுவிக்கையினாற் இப்படிச் சங்கற்பிக்கப் பட்ட புத்தி விருத்திப் பிரபஞ்சமெல்லாம் சீவசிருட்டியே யல்லாமல் ஈசுர சிருட்டி எனக் கூடாது. இப்படித் தீர்மானமாய்க் கூர்ந்து பார்க்கிற விஷயமெல்லாம் ஈசுர சிருட் டியும், சீவசிருட்டியும் ஆகக்கூடி இரண்டிரண்டாக இருக்கும். அதில் ஈசுர சிருட்டியான விஷயம் சிதாபாசனால் அறியப்படும். சீவசிருட்டியான விஷயம் சாட்சி ஞானத்தினால் பிரகாசிக்கப்படும். இப்படிச் சீவ சிருட் டியும் ஈசுர சிருட்டியும் பிரிவு பட்டுத் தோன்றின உடனே, சீவ சிருட் டியை நீக்குவதே மனோ நாசம், வாசனாநீக்கம் வழியாகச் சீவன் முக்தி வருவதற்குச் சாதனமாகவும் சொல்லப்படும்.

4. ஈசுர சிருட்டி, சீவன் முக்தி வந்தாலும் நீங்காமல் இருக்கிறாற் போலச் சீவ சிருட்டியும் இருந்ததனால் சாட்சியாகிய நமக்கு கேடு ஏது?

சுக துக்க முதலிய சம்சாரமெல்லாம் சீவ சிருட்டியினால் வருவதேயல்லாமல், ஈசுர சிருட்டியினாற் சம்சாரம் அற்பமும் வருவதில்லையே. இந்தக் கருத்திலே சந்தேகம் வந்தது என்றால் உடன்பாடு (அந்வயம்) எதிர் மறை(வியதி ரேக) யுக்தியினால் ஆராயலாம். ஈசுர சிருட்டி உண்டோ சம்சாரமும் உண்டென்கிறது அந்வயயுக்தி. ஈசுர சிருட்டியில்லையோ சம்சாரமும் இல்லை என்கிறது வியதி ரேக யுக்தி. இரண்டும் ஒத்து வரவேண்டும். ஒத்து வராமல் எங்கே தடைபட்டது என்றால் சமாதி சுழுத்தி முதலான வேளையில் ஈசுர சிருட்டி உண்டயிருக்கையிலும் ஒருவருக்கும் சுக துக்காதி சம்சாரமில்லை. ஆகையால் அந்வய யுக்தி தடைபட்டுள்ளது. பிரளயத்தில் ஈசுர சிருட் டியடங்கி இல்லாதிருத்தலும் வியதிரேகத்துப் போயிருக்கையிலும் ஒருவருக்கும் சீவன் முத்தி வாராதபடியினால் வியதிரேக யுக்தி தடைபட் டுள்ளது. ஆகையால் ஈசுர சிருட்டி சம்சாரத்திற்குக் காரணம் என்றலாகாது.

ஆகையால் சீவ சிருட்டியே சம்சாரத்திற்கு மூலம் என்கிறது அந்வயம். சீவ சிருட்டி ஒழிந்தயிடத்திலே சம்சாரமில்லை. என்கிறது வியதிரேகம். இந்த இரண்டும் சரி என்று வந்ததே உண்மை. அது எவ்வாறெனில், ஈசுர சிருட்டியான வெளிப்பிரபஞ்சம் ஒழிந்திருக்கையிலும்,

சொப்பனத்தில் சீவசிருட்டி ஏற்பட்டது கொண்டு சுக துக்காதி, சம்சாரமும் ஏற்பட்டது கண்டோம். சமாதி சுழுத்தி முதலான வேளையில் ஈசுர சிருட்டியான பிரபஞ்சம் இருக்கையிலும், சீவசிருட்டியான அந்தக்கரண கற்பனை இல்லாதது கொண்டு சுகதுக்காதி சம்சாரமும் இல்லாதது காணப்பட்டது. ஆகையால் சீவசிருட்டியே சகல சம்சாரத்திற்கும் மூலகாரணம் என்று அறியவும்.

5. இரண்டு சிருட்டியும் கூடி விளங்குகிற சாக்கிர அவஸ்தையில் சீவசிருட்டி ஒழிந்தவனே சீவன் முக்தன் எவ்வாறு?

தூர தேசத்தில் வேலைபார்த்துக் கொண்டிருக்கிற தன் மகன் இறந்து போயிருக்கையிலும் அவ்விஷயம் தெரியாது தன் மகன் உயிரோடு இருக்கிறான் என்கிற சீவசிருட்டி இருந்து சுகத்தைக் கொடுத்தது. அப்பொழுது அவ்விஷயம் தெரிந்த ஒருவன் வந்து அம்மகன் இறந்தான் என்று சொல்லக் கேட்டுத் தன் பிள்ளையை இழந்தோமே என்று சீவசிருட்டி மாறின உடனே துக்கத்தை கொடுத்தது. அவன் இறந்து போயிருக்கையிலும் அவ்விஷயத்தைக் கேளாமல் இருந்த காலமெல்லாம் சீவசிருட்டி இருந்து சுகத்தைக் கொடுத்தது. ஆகையினால் சகல பிராணிகளுக்கும் பந்தப்படுத்துவது அந்தக்கரண பிரபஞ்சமேயல்லால் ஈசுரப் பிரபஞ்சமல்ல. ஆகையால் அந்தக்கரண பிரபஞ்சமாகிய சீவசிருட்டியை துடைக்கவேண்டும்.

6. ஆனால் அந்தக்கரண பிரபஞ்சத்திற்கு முன்னிலையான மூலம் ஈசுர சிருட்டியானபடியினால் ஈசுர சிருட்டி ஒழிந்த பின்பே அத்துவிதம் வரவேண்டும்?

சீவர்களுடைய அறிவு சாமார்த்தியத்தினால் முன்னிலையான ஈசுர சிருட்டி பிரபஞ்சத்தை அழிப்பதுமல்ல, உண்டாக்குவதுமல்ல மாறாக ஈசுர சங்கற்பத்தின்படியே உண்டாகிறது. பிரளய காலத்திலே அவருடைய சங்கற்பத்தின் படியே எல்லாம் ஒழிந்த இடத்திலேயும் அத்துவித முக்தி ஒருவருக்கும் கூடாத படியினால் சாஸ்திரம் முதலான மோட்ச சாதனங்களை கொண்டு ஈசுர சிருட்டி நடக்கிற காலத்திலேதானே அத்வைத ஞானத்திற்கு விரோதியாய் இருக்கிற சீவசிருட்டியை மாற்றி அத்துவிதம் பெறலாம். ஆனபடியினாலே ஈசுர சிருட்டி நமக்கு சாதனமுமாம். அது நம்மாலே துடைபடுகிறதுமல்ல. இப்படி ஈசுர துவிதத்திற்கும் சீவத்துவிதத்திற்கும் பிரித்தல் சொல்லப்பட்டது. ஆகையால் ஈசுர சிருட்டி நம்மால் துடைபடாது.

7. சீவத்துவிதம் பந்தப்படுத்துமென்கிறபடியினால் சீவத்துவிதம் இன்னவிதமென்றும், அதனை அழிப்பது இன்னபடியென்றும் பிரமாணமாகச் சொல்லவேண்டும்?

சாஸ்திரீயமென்றும், அசாஸ்திரியமென்றும் சீவத்துவிதம் இரண்டு விதமாய் இருக்கும். அதில் சாஸ்திரீயமாவது வேதாந்த சாஸ்திரம்

சொன்னபடி கேட்டு மனதிலே நிர்ணயித்த தத்துவ சித்தாந்த யுக்திக்
கிரமம் முதலான அந்தக்கரண பிரபஞ்சம்.
அசாஸ்திரீயமாவது சாஸ்திரத்தைக் கடந்து பிரபஞ்சத்தை
பிரமாணமாக எண்ணி அந்தக்கட்டின் படியே நிர்ணயிக்கின்ற
அந்தக்கரண பிரபஞ்சம். இது தீவிரம், மந்தம் என்று இருவகைப்படும்.
இதில் காரியம் வரை நடக்கிற காமக்குரோதாதிப் பிரபஞ்சம் தீவிரமென்று
சொல்லப்படும். பிரவிருத்தியற்றுப் பிரபஞ்சத்தைக் குறித்துச் சங்கற்பிக்கிற
மனோ ராச்சியப் பிரபஞ்சமெல்லாம் மந்தமென்பதாம். இந்த இருவகையும்
ஞானம் வேண்டுகிறவன் சிரவணத்திற்கு முன்பே சாதனம் அப்யாசிக்கிற
காலத்திலேதானே தவிர்க்கப்படவேண்டும். இல்லையானால் குறிக்கோளில்
ஒருமியாது சித்தம். ஆனால் கேள்வி முடியுமட்டும் தவிர்ந்து
திடமானபிற்பாடு தான் அசாஸ்திரீய பிரபஞ்சம் கூடுமோ என்னில் கூடாது.
வந்தால் சீவன் முக்தி கூடாது. ஆதியில் தவிர்ந்தது ஞானம் வேண்டுமென்றும்,
அறிந்தபின் தவிருகிறது சீவன் முக்திக்காகவும். ஆகையால்,ஞானம் வந்தபின்
அந்தக்கரணப் பிரபஞ்சத்தை தவிராதிருந்தால் காமாதிப் பிருவிருத்தியிலே
முயன்று சுகதுக்காதிகளிலே பந்தப்படுகிறவனுக்கு நிரந்தரம், நித்யமுக்னாய்
நிரதிசயானந்தமாயிருக்கிறவன் நான் என்று நில்லாமல்மறைபடு கையினாலே
சீவன் முக்தி கூடாது. சீவன் முக்தி வேண்டாம் பிரம்மசொருபமான
அவத்தைகளின் சாட்சியே நாம் என்று பிரித்தறிந்ததே முக்தி என்கிற சாத்திரமே
போதும் என்னில், இப்படி வந்தது கொண்டு சந்தோஷிக்கிறவனானால் குரு
சந்நிதானத்தில் வேதாந்த சாஸ்திரம் சிரவணம் பண்ணினது கொண்டு
சுவர்க்கம் உண்டென்கிற சாஸ்திரமே உனக்குப் போதும்.

8. அசுரர்களால் பயம், நோய், புண்ணியம் குறைந்தால் மீண்டும்
பூவுலகத்தில் விழுதல் முதலிய தேவர்கள் வாழ்வைக் கண்டு சுவர்க்கத்தில்
இச்சை வருமோ?

எழுபத்து ஒரு சதுர்யுகம் ஆநந்தபோகம் புசிக்கிற சுவர்க்கத்தில்
ஒவ்வொரு காலத்திலே வருகிற அசுரபயம், நோய் கண்டு அதிலே
வெறுப்படைந்து சுவர்க்கம் வேண்டாமென்கிற உனக்கு, அனந்த கோடி
செனன மரணாதி சம்சாரத்திற்கு மூலமான அந்தக்கரண பிரபஞ்சமும்
தவிர்ந்து சீவன் முக்தி அப்யாசிக்கவேண்டும். இன்று வரையும் கேட்ட
வேதாந்த சாஸ்திரங்களுக்கெல்லாம் கருத்தாவது, சாட்சியே நான் என்று
பற்றின புத்தி நீங்காமலிருக்க வேண்டுமென்றும், சரீராதிகளில் நான்
என்ற புத்தி வாராமல் மறிக்க வேண்டும் என்றும், அதைத் தொட்டு
அபிமானத்திற்கு இடமான அகிலப் பிரபஞ்சத்தையும் மெய்யென்று பாராமல்
பொய் என்று திடம் பண்ணவேண்டுமென்றும், தீர்ந்த படியினால் இதை
விட்டுப் போட்டு இதற்கு விபரீதமான அசுத்த புத்தியைப் பண்ணிக்
கொண்டு அசாஸ்திரீய பிரபஞ்சம் தவிர மாட்டேன் என்றால், அப்யசித்த
சாஸ்திரம் வாக்கிலே மாத்திரம் கிளிப்பிள்ளைக்குச் சரியாய் அசுத்த

பிரவிருத்தியினாலே தத்துவஞானியும் நாயும் சரி என்று வரும். இது மட்டுமல்ல, முன்னாளில் இற்றைவரையும் சம்சாரத்திலே பந்தப்படுத்தினது தன் அந்தக்கரண தோஷமென்றே யுள்ளுவது (நினைப்பது) இப்போது தத்துவ ஞானம் அப்யசித்தும் சீவன் முத்தி வேண்டாம், அந்தக்கரணப் பிரபஞ்சமே கைவிடப்படாதென்றால் இவன் கற்ற ஞானமென்ன, இவன் செய்கிற அக்கிரமமென்ன என்று எல்லாருடைய அந்தக்கரண தோஷத்தினாலும் பந்தப்படுவன். ஆகையால் அந்தக்கரண கற்பனையை நன்றாக நீக்கி சாட்சியே நானென்று நின்று அந்தக்கரணத்தை சாட்சியினிடத்தில் ஊன்றிக் கொண்டு, சரீராதி சகல சம்சாரத்தையும் மறந்து, சகல லோகத்திலும் பட்டினத்துப் பிள்ளையைப் போல மேன்மையையடைந்து ஆனந்தாவரணத்தைத்தள்ளி சீவன் முத்தியான பரப்பிரம்மமாகலாம்.

9. இப்படி சீவசிருட்டி பந்தப்படுத்துமானால் தீவிர பிரபஞ்சத்தைக் கைவிடுகிறோம். காரியத்திற்கு வராத மந்தம் இருந்தது கொண்டு ஆனியேது?

மனோராச்சியம் சகல பிரபஞ்ச விருத்திக்கும் திடப்பட்ட அனுசந்தானமான விதையானபடியினால் செனன மரணத்திற்கு மூலமென்றறிந்து மனோராச்சியத்தை முன்பாகவே தள்ளவேண்டும். இப்படி இரும்பைக் கொண்டு இரும்பை ராவுகிறாற் போல சாஸ்திரீய பிரபஞ்சத்தைக் கொண்டு அசாஸ்திரீயப் பிரபஞ்சத்தின் இருவகையையும் தள்ளிப் பின்பு, பிணம் சுடு தடிபோலச் சாஸ்திரீயப் பிரபஞ்சம் தவிர்ந்து தானே தானாய் திடப்பட்டதே சீவன் முக்தி.

---

# 10. மகா வாக்கிய விவேகம்

ஸ்ரீ வித்தியாரண்ய சுவாமிகள் உலகத்தாரின் நன்மையைக்கருதி மகா வாக்கிய விவேகம் சொல்லுகிறார்.

1. மகா வாக்கியம் என்பது எத்தனை?

நான்கு வேதங்களிலும் முடிந்த பொருளையே சொல்லும் நான்கு மகா வாக்கியங்கள்.

2. அந்நான்கிற்கும் அர்த்தம் எப்படி?

ஞாந வடிவாயிருக்கிறதே பிரம்மம் என்று இருக் வேதம் சொல்லுகிறது. நானே அந்தப் பிரம்மம் என்று யஜூர் வேதமும், நீ அதுவாய் இருக்கிறாய் என்று சாம வேதமும், இந்த ஆத்மாவே பிரம்மம் என்று அதர்வண வேதமும் சொல்லுகின்றன.

3. இருக் வேதத்திற் சொன்ன அர்த்தம் எங்கே இருக்கிறது?

எந்த அறிவினால் சத்தம் முதலான விஷயங்களையும் அறியப்படுகிறதோ அந்த அறிவே பிரம்மம்.

4. இப்படிப்பட்ட பிரம்மம் எத்தனை உண்டு?

மும்மூர்த்திகள் முதலான தேவதைகளிடத்திலும், மனிதர், மிருகம் முதலான இடங்களிலும் சைதன்னியம் ஒன்றேயொழிய இரண்டில்லை.

5. இந்த வாக்கியத்தினால் ஞானநிர்ணயமானால் மற்ற மூன்று வாக்கியத்திற்கும் அர்த்தம் ஏது?

பரிபூர்ணமாயிருக்கிற பரமாத்மாவே, இந்த தேகத்திலே புத்திக்குச் சாட்சியாயிருக்கிற சைதன்னியம். இப்படித் தானாக இருக்கிற பிரம்மமே நானென்று யசுர் வேதம் சொல்லுகிறது. சீவனுடைய தேகம் இந்திரியங்கட்கு அப்பாற்பட்டிருக்கிற வஸ்து, இந்தப் பிரம்மம் ஆனபடியினாலே, நீயே சகத்காரணப் பிரம்மமென்று சாமவேதம் சொல்லுகிறது. இப்படிச் சுயம்பிரகாசமாக இருக்கிற ஆத்மா தானே பிரம்மமல்லாமல் வேறொன்றுமல்ல என்று அதர்வண வேதம் சொல்லாமல் சொல்லுகிறது.

# 11. யோகாநந்தம்

ஸ்ரீ வித்தியாரண்ணிய சுவாமிகள் தீபபஞ்சகம், விவேக பஞ்சகம் ஆகப் பத்தும் சொல்லி, இந்த பத்திலும் சொன்னபடி பிரம்மத்தை அறிந்தவன் சகல துக்கமும் போய் ஆனந்தத்தை அடைவன் என்கிறதை ஆனந்த பஞ்சகத்தினாலே வெளிப்பண்ணும்படி.

1. பிரம்மக்ஞானத்தினால், துக்க நீக்கம், ஆனந்த அடைவு ஆகிய இந்த இருவகை பிரயோசனமும் உண்டென்கிறதற்குப் பிரமாணம் ஏது? அந்த ஞான ஆனந்தம் எத்தனை விதம்? இத்தை அடைந்தவர் யார்? எப்படி அடைந்தார்கள்? அந்த அடைகிற பிரம்மம் எதனால் ஆனந்தமாயிருக்கும்?

அ). பிரமவித்துப் பரத்தை அடைவன். ஆத்மக்ஞானி சகல துக்கமும் கடப்பன். பிரம்ம ரசம் புசித்தவனுக்கே ஆனந்தம், மற்றவனுக்கு இல்லை. சகலத்தையும் தானாக கண்டவனுக்கே பயம் போகும். வேறாக கண்டவனுக்கே பயம். பிரம்மானந்தத்தை அறிந்தால் ஒருக்காலும் ஒரு காரணத்தினாலும் பயமில்லை. ஞானியை கர்மமாகிய அக்கினி கிட்டாது. பிரம்மத்தை அறிந்தவுடனே சகல பாசமும் நசிக்கும். பரத்தை அறிந்தால் இருதயத்தில் உள்ள ஆசை முடிச்சுகளும் சகல சந்தேகங்களும் வெந்துபோம். ஞானிக்கு ஒருக்காலும் பிறப்பு, இறப்பு இல்லை. பிரம்மத்தை அறிந்தவன் பிரம்மமே யாவன் என்று இப்படி முழங்குகிற வேத புராணங்களெல்லாம் பிரமாணம்.

ஆ). பிரமாநந்தம், வித்யாநந்தம், விஷயாநந்தம் என ஞானானந்தம் மூன்று விதமாய் இருக்கும்.

இ). முன் வருணனிடத்தில் இருந்து பிருகுவும், சனந்குமாரரிடத்திலிருந்து நாரதரும் கேட்டுப் பெற்றனர்.

ஈ). சகலமும் ஆனந்தத்திலே பிறந்து, ஆனந்தத்திலே இருந்து , ஆனந்தமாத்திரமாய் மிஞ்சுவதால், நாமே அத்துவிதாநந்தம் என்கிற வழியாக அடைந்தார்கள்.

உ). திரிபுடியில்லாததினால் பிரம்மமேயானந்தம்.

2. திரிபுடியாவது எது? திரிபுடியிலே எப்படி சுகமில்லை?

விஞ்ஞானமயன் என்கிற காண்பானும், மனோமயன் என்கிற கருவியும் (காட்சி), விஷயங்கள் (காணப்படுபொருள்) என்கிற ஞேயமும் திரிபுடியென்பது. விஷம் கலந்த தேன் போல, இத்திரிபுடியிலே வருகிற விஷய சுகம், ஆயிரம் துக்கத்தோடு கூடினது கொண்டு சுகமல்ல.

3. அத்துவிதத்திலே எப்படித் திரிபுடியில்லை?

பூதங்கள் உற்பத்திக்கு முன் அகண்டாநந்தமானது சமாதி சுழுத்தி, மூர்ச்சை போலத் திரிபுடியற்றிருக்கும்.

4. இப்படியானால் துவைதத்திலே ஆனந்தம் இல்லாதது போல அத்துவிதத்திலும் ஆனந்தம் இல்லை. இருக்குமேயானால் அனுபவிக்க வேண்டும். அதற்கு அங்கே திரிபுடி இல்லை?

திரிபுடியற்ற இடத்திலே அத்துவிதமென்றும், அதில் ஆனந்தமென்றும் இரண்டில்லை.அத்துவிதந்தானே ஆனந்தரூபம்.

5. அத்துவிதமே ஆனந்தம் என்பதற்குப் பிரமாணம் யாது?

தானாகவே இருக்கிற வஸ்துவுக்குப் பிரமாணம் தேவையில்லை.

6. அத்துவிதானந்தம் தானாய்த் தோற்றும் என்கிறது சொல் மாத்திரமே தவிரக் காணப்படாதோ?

சுழுத்திபோல அறியவேண்டும்.

7. சுழுத்தியிலே அத்துவிதானந்தம் தானாக விளங்குகிறதற்குப் பிரமாணம் ஏது?

சுழுத்தியிலே உள்ள ஆனந்தத்தை அறிவதற்கேற்ற மனம் முதலிய கருவிகள் இல்லை. மேலும் அடுத்தவன் சுழுத்தியையும் தனக்கு உதாரணமாகவும் கூறமுடியாது. நான் சுகமாய் இருந்தேன் என்கிற ஒவ்வொருவருடைய அனுபவமே பிரமாணம்.

8. சுழுத்தி ஆனந்தமல்ல. எண்ணங்கள் இல்லாதது கொண்டு சுகம் என்று ஏற்றிக் கூறுவதேன்?

சுழுத்தியிலே சுகமேயில்லாவிட்டாற், பாய் தலையணை முதலான சாதனங்களை ஏன் தேடுகிறார்கள்.

9. துக்கம் போகத் தக்கனவாகப் பாய் தலையணை தேடுகிறதே அல்லாமல் சுழுத்தியிலே சுகமில்லை?

அப்படியானற் வியாதிக்காரருக்கும் பாய் தலையணையைக் கண்டவுடனே துக்கம் போக வேண்டும். அப்படியும் காணோமே. ஆகையினாலே நித்திரைக்குச் சாதனமே அல்லாமல், ஆனந்தத்திற்குச் சாதனமல்ல.

10. ஆனால் சுழுத்தி ஆனந்தத்திற்குச் சாதனம் ஏது?

சாக்கிர, சொப்பன நிலைகளிலே பலவித எண்ணங்களால் அடிபட்டு நொந்த மனது, சுழுத்தியிலே ஆத்மாவை நாடின உடனே அதிலே ஆனந்தம், பிரதிவிம்பிக்கும். அந்த ஆனந்தத்தை அனுபவிக்கையினாலே ஒரு துக்கமும் தோன்றாது. ஆகையினாலே சுழுத்தி ஆனந்தமாக வேண்டும். இல்லாதிருந்தால் சகலருக்கும் அதில் விருப்பமாகாது. வேதத்திலே ஐந்து உதாரணங்களும் கூறாது

11. அந்த ஐந்து உதாரணங்கள் யாவை?

வல்லூறு, பருந்து, குழந்தை, மகராசா, மகாவித்துவான்.

12. இந்த ஐந்தும் எந்த விதத்திலே உதாரணம்?

அ) கயிற்றிலே கட்டப்பட்ட வல்லூறு எந்த திக்கிலே ஓடினாலும் தன் இருப்பிடத்திலே வந்து இளைப்பாறும். அதுபோலச் சீவ உபாதியான மனதும் புண்ணிய பாவங்களைப் புசிக்கச் சாக்கிரத்திலும் சொப்பனத்திலும் சுழன்று சுழுத்தியிலே வந்து சுகமடைய வேண்டும்.

ஆ) பருந்தானது பகல் முழுவதும் பறந்துவிட்டு மாலைப் பொழுதிலே கூட்டிலே விழுகிற போது அதிகவேகமாய் விழுகிறாற் போலச் சீவனும் சாக்கிரச் சொப்பனத் தடைகள் அற்றுச் சுழுத்திச் சுகத்தை நாடுவதால் சுழுத்தி ஆனந்தமாக வேண்டும்.

இ) தாயிடமிருந்து பாலைக் குடித்து விட்டு தொட்டிலில் சுக மாகத் தூங்குகிற குழந்தைக்கு விருப்பு வெறுப்பு இல்லாததால் ஆனந்தமாயிருப்பது போல, விருப்பு வெறுப்பில்லாத சுழுத்தியும் ஆனந் தமாக வேண்டும்.

ஈ) சகல பூமியும் தன்வசம் பண்ணிக்கொண்ட மகாராசா பின்பு திருப்தனாய் இருக்கிறாற் போல, திருப்தியாயிருக்கிற சுழுத்தியும் ஆனந்தமாக வேண்டும்.

உ) சீவன் முக்தனாயிருக்கிற மகாவித்துவான்(மகாபிராம்மணன்) இனிக் கற்கவேண்டியதில்லை என்று கவலைகெட்டிருப்பான். அவனைப்போலக் கவலையில்லாத சுழுத்தியும் ஆனந்தமாக வேண்டும்.

13. இப்படிச் சீவன் முத்தியடைந்து பந்தம் போனவனுக்குச் சுகமேயல்லாமல் மற்றப் பேருக்குச் சுகமில்லையோ?

நன்றாக விடுபட்டவனுக்கும், நன்றாகப் பந்தபட்டவனுக்கும் சுகமுண்டு. நடுநிலையில்(சற்றுத் தெறிந்தும் தெறியாதவனுக்கும்) சுகமில்லை.

14. சுழுத்தியிலே மற்ற வியாபாரங்கள் ஏன் தெரியவில்லை?

மனைவியாலே தழுவப்பட்டவனுக்கு வீட்டின் உட்காரியமும், வெளிக்காரியமும் தெரியாதது போலச் சுழுத்தியானந்தத்திலே அழுந்தினவனுக்குக் கழுத்தின் நாடிக்குள் சொப்பனமும், வெளியில் சாக்கிரமும் இருவகை வியாபாரமும் தெரியாது எழுந்தபின் சுகமாய்த் தூங்கினேன், ஒன்றும் அறியேன் என்கிறதனாலே அந்த அஞ்ஞானமும், ஆனந்தமயமும் காணப்படுகிறது. மனோமயனும் விஞ்ஞானமயனும் அஞ்ஞானத்திலே அழுந்தின வேளை ஆனந்தமயன் என்று சொல்லப்படுவன். இப்படி அஞ்ஞான விருத்தி சூட்சுமமென்றும், மனோ விருத்தி ஸ்தூலமென்றும் வேதம் சொல்லுகிறது.

15. இப்படி பிரமானந்தத்தில் ஏகமாய் அழுந்தியிருந்த சீவன் விட்சேபத்தில் ஏன் விழிக்கிறான்?

பூர்வ சென்ம பாவகர்ம பாக்கியால் ஆனந்த நிலையிலிருந்து சாக்கிரத்தில் விழிக்கிறான். விழித்தும் சற்று நேரம் இதற்கு முன் அனுபவித்த பிரம்மானந்த(விஷேச அபிமானம்)நினைவிலேயே இருக்கிறான். பின்பு பாவகர்மங்கள் அதை மறக்கடித்து சாக்கிர சொப்பனத்திற்கு இழுத்துப் போகிறது. ஆகையினால் நித்திரைக்கு முன்னும் பின்னும் பக்ஷபாதம்(விசேஷ அபிமானம்) இருக்கிறபடியினால் ஆனந்தமே பிரம்மமாக வேண்டும்.

16. சும்மா இருக்கிறதும் பிரம்மானந்த மானபடியினால் சோம்பலும் பிரம்மானந்தமாக வேண்டுமே?

வேதம் அறிந்தவர்களுக்கெல்லாம் தானம் கொடுக்கிறார்கள் என்கிறதைக் கேட்டு, வேதம் நான்கு என்பதை நான் அறிவேன். ஆகவே தானம் எனக்கும் தா என்று சொல்லுகிறவன் போல, நீயும் பரிகாசம் செய்கிறாய் குரு சாஸ்திர சாதனமன்றி யாரலே பிரம்மம் அறியப்படும்? அறியப்படாது.

17. வேதாந்தமெல்லாம் படித்தாற் போதாதோ ?

அர்த்தம் அறிந்தாலொழிய போதாது.

18. இலக்கண சாஸ்திரத்தினாலே அர்த்தம் பார்த்துக் கொண்டால் போதாதோ?

நான் அதுவாகவேயிருக்கிறேன் என்ற அபரோட்ச ஞானம் வந்தாலன்னியில் போதாது.

19. இனி எப்போது அபரோட்ச ஞானம் வரும் ?

கிருதார்த்தன்(இனிச் செய்ய வேண்டியது ஒன்றுமில்லை) என்கிற எண்ணம் எப்பொழுது ஏற்படுகிறதோ அதுவரை குருவை உபாசித்தால் வரும்.

20. குருவை உபாசித்தால் எப்படி வரும்?

அவர் எங்கே எங்கே விஷயங்கள் இல்லாமல் சுகம் வருகிறதோ அந்த எல்லாவிடங்களிலும் இந்த(பிர்மமானந்தத்தினுடைய) வாசனானந்தத்தையும், விஷயங்கள் கிடைத்த போதும் அது விஷயமான ஆசை நிவிருத்தியாகிறபோது உள்நோக்கியுள்ள மனதின் விருத்தியில் வரும் ஆத்மாவின் பிரதிபிம்பானந்தத்தையும், உன்னுடைய சுபாவ ஆனந்த(பிர்மானந்த) வாசனையல்லாமல் (பிர்ம்மானந்தம், வாசனாந்தம், பிரதிபிம்பானந்தம் என்ற மூன்றைத்தவிர) வேறல்ல என்று காணச் சொல்லி உபதேசிப்பார்.

21. சுபாவாநந்தமானது(பிர்ம்மானந்தம்) பிரதிவிம்பானந்தத்தையும், வாசநானந்தத்தையும் எப்படித் தோற்றுவிக்கிறது?

சுருதி, யுக்தி, அனுபவத்தினாலே நல்ல தூக்க சமயத்தில் தான் பிர்ம்மானந்தம் என்கிறது சுபாவ சித்தமாய் இருந்தாலும், அவ்விடத்திலே பிரதிவிம்பானந்தமாகிய ஆனந்தம் இருதயத்தை விட்டு கண்டத்திலே வந்து சொப்பனத்தில் விஞ்ஞானமயராவர். விழிப்பு காலத்திலே கண்ணிலே வந்து காய்ச்சின இரும்புத் துண்டைப் போலத் தேகமெல்லாம் கலந்து நின்று உதாசீனன், சுகி, துக்கி என்று மூவகையாயிருப்பான். இதில் சுகி, துக்கி இரண்டும் பிராரத்தகர்ம காரியம். உதாசீனம் தன் சுபாவமாயிருக்கிறது.

22. சுக துக்கம் எத்தனைவிதம் ? இரண்டும் அல்லாமற் சும்மாயிருக்கிற

வேளையிலே எது தோற்றும் ?

சுக துக்கங்கள் வெளியிலுள்ள விஷயங்களை அனுபவிப்பதினாலும் ,(உள்ளேயுள்ள)மனோராச்யம் என்றும் சுக துக்கம் இரண்டு விதமாயிருக்கும். சுக துக்கங்களின் இடைவெளிகளிலே எனக்கு ஒரு சிந்தனையுமில்லை, சும்மாயிருக்கிறேன்(உதாசீனம்) என்று எல்லாரும் சொல்லுவதனால், ஆத்மா சுபாவாநந்தம் என்கிறதிலே சந்தேகமில்லை.

23. தன்னுடைய சுபாவானந்தம் இது தானேயோ?

நீர் நிறைந்த பாத்திரத்தைத் தொட்டவுடனே காணப்படுகிற குளிர்ச்சி தண்ணீராகாவிட்டாலும் அது கொண்டு குடத்திலே தண்ணீர் உண்டு என்று அறிகிறார்போல, உதாசீன வேளையிலே காணப்படுகிற சுகமும், உள்ளே அகங்காரத்தினால் மறைக்கப்பட்டிருக்கிற சுபாவாநந்தத்தின் வாசனை என்றே அறியலாம்.

24. இப்படியானாற் சுபாவாநந்தம் எப்போது தோற்றும்?

பிரம்ம அப்யாசத்தினாலே அகங்காரத்தை மறக்க மறக்கப் பிரம்மானந்த சுபாவம் வெட்டவெளியாம். அகங்காரத்தை நன்றாய் மறந்தால், சித்தம் இருக்கிறபடியினாலே நித்திரையுமல்ல. தேகமும் விழாது. இவ்வாறு முன்னிலையும் தோற்றாமல், நித்திரையுமல்லாமல் இருக்கிற பிரம்மானந்த நிலை வெளியாம்.

25. இத்தகைய நிலை வரத்தக்கதாகப் பிரம்ம அப்யாசம் பண்ணுகிற விதம் எப்படி? பிரமாணம் எது?

பிரபஞ்ச விஷயத்திலே விழாமற் புத்தியைத் திடம் பண்ணிக்கொண்டு, பிரபஞ்சத்தினின்றும் சிறிது சிறிதாக விலகவேண்டும். யாதொரு வழியிலே புத்தி பேதலித்தது அந்த வழியெல்லாம் மறுக்க வேண்டும். சஞ்சலமான மனதை ஆத்மாவினிடத்திலே அசையாமல் நிறுத்தவேண்டும். இப்படி நிறுத்தினால், இந்த யோகத்தினால் யாதொன்றில் மனது நிற்கும், யாதொரு சுகத்திற்கும் ஆதியும், அந்தமுமில்லை, யாதொரு நிலை பெற்றால் இனி இல்லை எனப்பட்ட கர்ம பந்தங்களினாலும் அசைக்கப்படாது.அந்தப் பிரம்மானந்தம் இவனை அடையும் என்கிறதே அடைவு. இப்படிச் சொன்ன கீதாவசனமே பிரமாணம்.

26. இந்த வகை அப்யாசம் அதிக துன்பத்தைத்தருமே?

மூக்கின் நுனியாலே சிட்டுக்குருவி சமுத்திரத்தை இறைத்தாற் போல மன அடக்கம் பண்ணுவதும் வருத்தப்படாமற் சிறுகச் சிறுகப் பண்ணவேண்டும். பிரபஞ்ச எண்ணம் மறக்கிறபோது எண்ணையற்ற விளக்குபோல அந்தக்கரணமும், சிந்மாத்திரமாக நீங்கும்(அடங்கும்)

27. சித்தம், ஆத்மாவில் லயித்தது கொண்டு கர்மபந்தம் எப்படி விடுபடும்?

கர்மபந்தங்களுக்குச் சித்தமே காரணமானபடியினால், அந்தச் சித்தத்தைத் தானே சோதிக்கிறபோது சகல கர்மமும் விட்டுப்போம்.

28. சித்தத்தைச் சோதிக்கிற வழியேது? இதைச்சோதிக்கிறதால் மோட்

சமென்றும், சோதியாதிருந்தால் பந்தமென்றும் கூறும் பிரமாணமேது?

அந்தக்கரணம் விஷயத்தைப் பற்றுகிறது போலப் பிரம்மத்தில் பற்று வைக்கிறதே சோதிக்கிறது. அந்தக்கரணம்(மனம்) ஆசைப்பட்டால் அசுத்தம். ஆசையற்றால் சுத்தம். ஆகையினால் மனதே பந்தத்திற்கும் முத்திக்கும் காரணம் என்கிற வேதம் பிரமாணம்.

29. சமாதியிலே ஆனந்தம் எப்படியிருக்கும்?

சமாதியினால் மனதிலுள்ள அழுக்கெல்லாம் நீங்கினபடியி னால் ஆத்மாவினிடத்தில் வைக்கப்பட்டதாயுள்ள மனதிற்கு எந்த சுகம் ஏற்படுமோ, அது வாக்கினால் வர்ணிக்க முடியாது. அப்பொழுது, தானே அது மனதில் மாத்திரம் அறியப்படுகிறது.

30. சமாதி இல்லாத வேளையில் எப்படி இருப்பன்?

சமாதியிலே நிச்சயித்தபடி மற்ற வேலையிலும் நம்பிக்கையோடு இருப்பன்.

31. இப்படி யோகத்திலே மனதுமூன்டவனுக்கு அடையாளம் ஏது?

பரபுருஷனால் சுகம் அடைகிற பெண்போல, பிரம்ம அப்யாசத்திலே கவனமாய், பிரபஞ்சத்திலே கவனமற்றிருப்பன்.

32. இந்திரியங்கள் பலாத்காரத்தாற் பிரபஞ்சத்தில் இழுத்தால் செய்காரியமேது?

சுமை தூக்குகிறவன் சற்று சற்று வைத்து இளைப்பாறுகிறாற் போலச் சிறுகச் சிறுக இந்திரியங்களை மறித்துச், சமாதியில் இளைப்பாறுவான்

33. இவனுக்கு விஷயானந்தம் எப்படித் தோற்றும் ?

பிர்ம்ம அப்யாசத்திற்கு விரோதியாய் வந்த விஷயானந்தமும், நெருப்பிலே விழப்போகிறவனுக்கு அதற்குத் தாமசமாகச் செய்யும் அலங்காராதிகள் போலத்தோற்றும்.

34. பிர்ம்ம அப்யாசமும், பிரபஞ்ச வியாபாரமும் ஒரு மனதிற்குச் செய்யக்கூடாது?

ஞானியினுடைய மனது, காக்கைக் கண்போல இரண்டிலும் போக்குவரத்தாய் இருக்கும்.

35. சமாதியிலே வருகிற பிர்ம்மாநந்தத்தையும் அதற்கு அவிரோதியாய் வருகிற விஷயானந்தத்தையும் அனுபவிக்கிற ஞாநி எப்படி இருப்பன்?

இரண்டு மொழி தெரிந்தவன் போல, இருவகை ஆனந்தத்தையும் கண்டு புசித்துக் களித்து இருப்பன்.

இப்படி பிரமாநந்த கிரந்தத்திலே யோகிக்குப் பிரத்யட்சமாய் இருக்கிற யோகாநந்தம் சொல்லப்பட்டது.

---

# 12. ஆத்மானந்தம்

முன் அத்யாயத்தில் யோகிகள், வாசனானந்தத்திற்கும், பிரதிபிம்பானந்தத்திற்கும் வேறாகிய சுபாவானந்தத்தை அறியட்டும் இந்த அத்யாயத்தில் சாமான்ய மக்களும் விசாரணையினால் இதை அறிந்து கொள்ள முடியும் என்பதைக் காட்டுகிறார்.

1. ஆத்ம அறிவில்லாதவனுக்கு என்ன வழி?

புண்ய, பாப வசத்தினால் கணக்கற்ற பிறவிகள் எடுத்து அழியட்டும்.

2. எல்லோரிடத்திலும் தயவு பண்ணுவது சுபாவமல்லவோ?

அப்படியானால் அந்த அறிவில்லாதவன் வெளியிலே நோக்கமுள்ள வனா அல்லது அறியவேண்டும் என்ற ஆசையுள்ளவனா என்று பார்த்து அவனவனுக்குத் தக்க உபதேசம்.

3. அத்தகைய உபதேசம் யாது?

வெளிநோக்குள்ளவனுக்கு கர்மத்தையோ, உபாசனையோ பின்பற்றட்டும். அறியவேண்டுமென்கிறவனுக்கு ஆத்மானந்தம் மூலமாக அறியும்படிச் செய்யலாம்.

4. இவ்வாறு மூடருக்கு ஆத்மாநந்தம் உபதேசித்த பேர் உண்டோ? ஆத்மாநந்த உபதேசமாவது ஏது?

யாக்வல்கியர் தன்னுடைய மனைவி மைத்திரியேயிக்குஉபதேசித்தார். ஆனந்தமாயிருக்கப்பட்ட வஸ்து ஆத்மா என்று காட்டுகிறதே உபதேசம்.

5. இப்படியானால் விஷயங்களெல்லாம் ஆத்மாவல்லவா?

கணவன், மனைவி, பிள்ளை, தனம், பசு, ஜாதி, வேதங்கள், தேவதைகள், சகலமும் ஆத்மாவைக் குறித்துப் பிரியமல்லால் இவைகள் ஆனந்தமல்ல என்று வேதம் சொல்லுகிறது.

6. ஆனந்தமாயிருக்கிற இவைகளை ஆனந்தமல்ல என்பது எப்படி?

மனைவிக்கு கணவனிடத்தில் விருப்பம் பிறந்த வேளையிலே, வியாதி, பசியினாலே அவன் இவளை விரும்பாதது கொண்டு, கணவனைக் குறித்த ஆனந்தம் இவளுடைய சுபாவ ஆனந்தமேயல்லாமல் அவனை ஆனந்தமென்னக் கூடாது. அவள்வைக்கும் அந்த விருப்பம் கணவனுடைய பிரயோசனத்திற்காக இல்லை. தன்னுடைய பிரயோசனத்திற்காகத்தான் அந்த விருப்பத்தை வைக்கிறாள். இவ்வாறே ஒருவருக்கு ஒருவர் ஒரே சமயத்தில் விருப்பம் வைக்கும் விஷயத்தில் தன் ஆசையை நிறைவேற்றுவதில் விருப்பத்தினாலே முயற்சி செய்யப்படுகிறது. மீசை முள்மாதிரி குத்துவதினால் குழந்தை அழும்போது அதன் தகப்பன் முத்தமிட்டுக் கொண்டே இருக்கிறான். அந்த ஆனந்தம் குழந்தையின் பொருட்டல்ல. அது தன்னுடைய ஆனந்தத்திற்காகத்தான். சுவர்க்கலோகம் பிர்மலோகம் இவை எனக்கு வேண்டும் என்று ஆசைப்படுவது அவ்விரு உலகங்களின் நன்மை பொருட்

டல்ல தன்னுடைய போகத்திற்காகதான். சிவன் முதலான தேவதைகள் பாவம் போவதற்காகப் பூசிக்கப்படுகிறன்றன. அந்த பூசை பாபமேயில்லாத தேவதைகளுக்காக அல்ல. ஆனால் அது தனக்காகத் தான் செய்யப் படுகிறது. இப்படி ஆண்டவன் அடியான் என்கிறது முதலான வைகளும் தனக்காகவே யல்லாமல் மற்றவர்களை உத்தேசித்தல்ல. ஆகையினால் சகல விஷயத்தையும் குறித்துத் தானே பிரியவஸ்து அல்லாமல், விஷயங்கள் பிரிய வஸ்து அல்ல. ஆகையால் ஆத்மாவாகிய தானே ஆனந்த மென்கிறதற்குச் சந்தேகமே இல்லை.

7. இப்படி வருகிற பிரியம் எத்தனை விதமாயிருக்கும்?

பொன்முதலான விஷயத்திலே ஆசையென்றும் கர்ம பக்தியிலே சிரத்தை யென்றும், கிடையாத வஸ்துவிலே இச்சை என்றும் குரு தேவதைகளிடத்திலே பக்தி என்றும் நான்கு விதமாயிருக்கும்.

8. இந்த விஷயங்களில் இருக்கிற ஆனந்தம் போல, ஆத்மாவினிடத்திலும் ஒரு ஆனந்தமிருக்கிறது. அது கொண்டு விஷயங்கள் பிரியமல்ல என்பானேன்?

ஒரு விஷயத்தை விட்டு ஒரு விஷயத்தை நாடுகிறார் போல, ஆத்மா கைவிடப்படாதபடியினாலே ஆத்மாவே ஆனந்தம். மற்ற எல்லாம் ஆனந்தமல்ல. ஆத்மாவே வெகு பிரியம்.

9. விருப்பு வெறுப்புக்கு இடமற்றவரே ஆத்மாவானால் உடைந்த மண் சட்டித் துண்டு போல, உபேட்சைக்கு இடமானாரே?

உபேட்சிக்கிறவனுடைய சொரூபமானபடியினால் உபேட்சைக்கு விஷயமல்ல, ஆத்மா.

10. வியாதி கோபங்களாலே மூடப்பட்டவன், சில சமயம் இறந்து விடவேண்டும் என்ற எண்ணம் காணப்படுவதால் ஆத்மா வெறுப்பிற்கு இடமாகட்டுமே?

தியாகம் பண்ண யோக்யமான தேகத்தைத் தியாகம் பண்ணுவனேயல்லாமற், தியாகம் பண்ணுகிறவனாயிருக்கிற தன்னைத் தியாகம் பண்ணவில்லை.

11. இப்படி இருவகைக்கும் விஷயமாகாத ஆத்மா பிரியத்திற்குதான் விஷயமாகட்டுமே?

தகப்பனாருக்கு மகன்தானே சகல உறவினர்களைக் காட்டிலும், அதிக பிரிய வஸ்துவாக இருக்கிறாற் போல ஆத்மாவைக் குறித்தே சகல வஸ்துக்களும் பிரியமானபடியினால், அதிகப் பிரியமான வஸ்துவே அத்மாவல்லாமல் விஷயமல்ல.

12. இப்படி அதிகப்பிரிய வஸ்துவே ஆத்மாவானால் ஆத்மாதானே பிள்ளை ஆனான் என்கின்ற வேதத்திலும், இவன் பண்ணின புண்ணியத்தினாலே ஆத்மா தானே பிள்ளையானான் என்றும், பிள்ளையில்லாதவனுக்குக் கதியில்லை என்றும் வேதம் சொல்லுகையினாலே, புத்திரன் தானே ஆத்மா ஆகட்டுமே?

கெவுணாத்மா மித்தையாத்மா, முக்கியாத்மா என்று இப்படி மூவகையாயிருக்கும் . ஒரோர் சந்தர்ப்பத்தில் ஒரோர் ஆத்மா பிரதானமாய் இருக்கும். புத்திரனை ஆத்மா என்கிறது இந்த மூவகையில் ஒருவகையிலே, அல்லாமற் முக்கியம் அல்ல.

13. இந்த மூன்று வகை ஆத்மாவாகச் சொல்லப்பட்டதேது? இதில் எந்த ஆத்மா முக்கியம்? இவைகளைவிவரமாக சொல்ல வேண்டும்?

இந்த மனிதனைச் சிங்கம் என்கிறது போலப் பிள்ளையை ஆத்மா என்கிறது கெவுணம். கட்டையைக் கள்ளன் என்று அறிகிறது போலப் பஞ்ச கோசத்தைத் தான் என்கிறது மித்தையாத்மா. கட்டையைக் கட்டை என்கிறது போலச் சாட்சியைத் தானென்கிறது முக்கியாத்மா. தான் செத்தாலும் பிள்ளைகள் பிழைத்தாற் போதும் என்கிறதனாலும், தன்க்குப்பின் குடும்பத்தைக் காப்பாற்றுகிறதனாலும் கெவுணாத்மாவாயிருக்கிற புத்திரனே முக்கியம். நான்பருத்தேன், சிறுத்தேன் என்னுமிடத்தில் தேகமே முக்கியமாய்க் கண்டாற் போலச், சுவர்க்கலோகம் வேண்டுமென்று சரீரத்திற்குக் கடினமான தவசு பண்ணுமிடத்தில் மித்தையாத்மாவான அகங்காரமே முக்கியம். நான் சுயம்பிரகாசன், நிர்விகாரி என்னுமிடத்தில் முக்கியாத்மாவான சாட்சியே முக்கியம். ஆகையினாலே பஞ்சகோசங்களைத் தள்ளினாலும் தள்ளப்படாத ஆத்மாவே ஆனந்த சொரூபம்.

14. இவரைப் பிரித்து அடைகிற வழி எப்படி? தள்ளப்பட்ட பஞ்ச கோசங்களும் ஒவ்வொருக்கால் ஆனந்தமாய்த் தோற்றவானேன்?

அன்றாடம் நடக்கிற மூன்று அவஸ்தைகளுடைய போக்குவரத்தைக் காண்கிற சுயம்பிரகாச சைதன்னியமே தான் என்று அறியவேண்டும். இதர புத்திராதி பிராணன் முதலானவைகளெல்லாம் ஆத்மாவைக் கிட்டினதற்குத் தக்கன ஆனந்த ஏற்றத் தாழ்வு காணும்.

15. ஆத்மாவைக் கிட்டக்கிட்ட ஆனந்தத்தில் ஏற்றத் தாழ்வு காணுகிற வகை எப்படி?

உலகத்திலே செல்வம் சுகசாதனமானபடியினால் கைவிடப்படாத ஆனந்தமென்று சொல்லப்படும், புத்திராதிகளுக்கு நோய் வந்தபோது செல்வத்தைக் கைவிட்டாகிலும் பிள்ளையைக் காப்பாற்றுகையினால் செல்வத்தைக் காட்டிலும் பிள்ளையே ஆனந்தமாக வேண்டும். தீப்பற்றின வீட்டில் பிள்ளையைக் கைவிட்டாலும் தான் ஒடிப்போகையினால் புத்திரனைக் காட்டிலும் சரீரமே ஆனந்தமாக வேண்டும். தூசிக்காற்றடிக்கும் போது சரீரத்தை விட இந்திரியங்களைக் காப்பாற்றுகையினால் சரீரத்தைக் காட்டிலும் இந்திரியங்களே ஆத்மாவாக வேண்டும் வெட்டக் கொண்டு போனபோது இந்திரியங்களை இழந்தாலும் உயிரைக்காப்பாற்றுகையினாலே பிராணனே ஆனந்தமாக வேண்டும். பிராணன் போகிற போது இந்தப் பிராணாதிகளெல்லாம் இனி நமக்குத் தகாததென்று நிச்சையித்துக் கைவிட்டு, பிராணாதிகள் உண்டாகிறபோது கூடவும் உண்டாகாமல்

பிராணாதிகள் நசிக்கிறபோது கூடவும் நசியாமல், அசங்க சைதன்னியமாயிருக்கிற தான்தானே ஒருக்காலும் கைவிடப்படாத பரமானந்த சொரூபர்.

16. தகப்பனுக்கு பின் அந்த இடத்திலேயிருந்து புசிக்கமாட்டாத சாட்சியை ஆத்மா என்கிறது சரியல்ல. பாடும், பழியும், ரணமும் தன்னதாக ஒப்புக்கொண்டு புசிக்கிற புத்திரனே ஆத்மாவாக வேண்டும். ஏனெனில் இவனுக்கு மேல் பிரியவஸ்து ஏது?

முன் சொன்ன விவேகமெல்லாம் விட்டு விட்டுத் திரும்பவும் இவ்வாறு கேட்பவன் சிஷ்யனா அல்லது பிரதிவாதியா என்று அறிந்து அவரவர்களுக்கு ஏற்ற வழியில் விடைசொல்ல வேண்டும். சிஷ்யனுக்குச் சொல்லும் பதில் பிள்ளை பிறப்பதற்கு முன் பிள்ளையில்லையே என்று துக்கம், கர்ப்பம் தரித்தாலும் கலைந்து விடுமோ என்றும், கர்ப்பமானாலும் குறைப் பிரசவமாகி விடுமோ என்றும் பிரசவமான பின் குழந்தைக்கு பூதங்கள், பறவை தோஷங்களால் துக்கம், இளம் வயதிலே மூர்க்கனாகிவிட்டால், பள்ளிக்கு வைத்தால் படிக்கவில்லையே என்றும், படித்தாலும் எல்லோரும் போற்றும்படி படிக்கவில்லையே என்றும், திருமணப் பருவத்திலே பெண்களிடத்தில் ஈடுபாடு அதிகம் காணப்பட்டால் துக்கம். மணமானபின்பு மனைவியை திருப்தி பண்ணாதவன் என்றும், அவன் ஒருக்கால் மிகப்பெரிய பணக்காரனானால் அதைக்காண பெற்றோகிய நாம் இல்லையே என்ற துக்கம். இப்படிப் புத்திரன் முதலானவைகளிலே பகுத்துப்பார்க்கிற துக்கந் தானே பிரதிபாதிக்கிறது சுபாவந்தானே.

பிரதிவாதிக்குச் சொல்வது : குதர்க்க கேள்வியினால் இகபரம் இரண்டும் இல்லாமற் கெட்டுப்போவாய் என்கிற சாபம்தான்.

17. இவர் கோபித்ததனால் பிரதிவாதிக்கு கேடு ஏது?

பிர்ம்ம வித்தாயிருக்கிறவன் பிர்ம்மசொரூபமான படியினால் சிஷ்யனுக்கும், பிரதிவாதிக்கும் அவர் பண்ணின அனுக்கிரகமும், சாபமும் அந்தப்படியே பலிக்கும் என்கிறதினாலும், பிரமவித்துக்களை விஷமத்தனமான கேள்வி கேட்பவன் ஆயிரம் சதுர்யுகம் நரகத்தில் வாழ்வன் என்கிற புராணவசனத்தினாலும் பிரதிவாதிக்கு கேடுவரும்.

18. அப்படியானால் முடிவான விஷயம் யாது?

இப்போது சொன்னபடி பகுத்தறிந்து சாட்சியாயிருக்கிற தானே சகலத்திலும் பிரியவஸ்து என்று ஆத்மாநந்தத்தில் எந்நேரமும் ஆனந்தித்திருக்கிறவனுக்கே முத்தி என்பது முடிவான விஷயம்.

19. இந்த ஆத்மாவுக்கு அறிவு போல ஆனந்தமும் சுபாவமேயானால் அந்தக்கரணவிருத்திகளிலே அறிவு மாத்திரம் தோன்றி ஆனந்தம் தோன்றாதது ஏன்?

உஷ்ணமும் பிரகாசமும் சுபாவமாயிருக்கிற அக்கினியினுடைய உஷ்ணம் தண்ணீரிலும், பிரகாசம் வீட்டிலும் பிரிந்து காண்கிறாற் போலவும், தாமரைப்

பூவிற்குள்ள ரூப ரச கந்தங்கள் ஒவ்வொரு இந்திரியத்தினாலும் ஒவ்வொரு குணம் தோற்றுகிறாற் போலவும் ஆத்மாவினுடைய அறிவு, ஆனந்தங்கள், ஒவ்வொரு விருத்தியில் பிரிந்து தோற்றும்.

20. எந்த விருத்தியில் எந்தச் சுபாவம் தோன்றும்?

நிர்மலமாயிருக்கிற சத்துவ விருத்தியிலே அறிவும், ஆனந்தமும் தோன்றும், மலினமான ராசதவிருத்தியில் ஆனந்த அம்சம் தோற்றாது.

21. இத்தகைய ஆத்மானந்தத்தை முந்தின அத்தியாயத்திலே சொன்ன யோகம் அல்லாமல், இந்த அத்தியாயத்திலே சொன்ன விவேகத்தினால் தானே சாதிக்கப்படுமோ? இதற்குப் பிரமாணம் ஏது?

யோகத்தினாலே யாதொரு பிரம்மம் அடையப்படுகிறதோ ஞானத்தினாலும் அதுவே ஆத்மானந்தமாக வெளிப்பட்டது. இதற்கு சாங்கியத்தினாலே(ஞானம்) அடையப்படுகிற பதமே, யோகத்தினாலும் அடையப்படும் என்கிற கீதாவசனமே பிரமாணம்.

22. சங்கியம், யோகம் என்றிரண்டு வகையாய்ப் பகுத்துச் சொல்வானேன்? இரண்டு வழியிலும் பலன் சரியாய் வருவானேன்?

ஒருத்தனுக்கு யோகம் எளிதாய் வரும், ஒருத்தனுக்கு ஞானநிச்சயம் எளிதாய் வரும், என்கிறதை மனதிலே கண்டுகொண்டு கிருஷ்ணனும் இரண்டு வழியும் சொன்னார். யோகி, ஞானி என்கிற இருவருக்கும் சின்மாத்ரமென்கிற ஞானமும், விருப்பு வெறுப்பில்லாமையும், தேகம் முதலிய பிரதிகூலமாயுள்ளவைகளில் வெறுப்பு இரண்டு பேர்களுக்குமே சமமாயிருக் கிறதும் சரியான படியினாலே மோட்சமும் சரியாக வருகிறது.

23. இரண்டாம் வஸ்து (உலகம்) தோற்றுகையினால் அது எப்படிப் புத்தியில் படாமலிருக்கும்?

புத்திக்கு ஏற்க இரண்டாம் வஸ்துவே இல்லை என்று போகத் தக்கனவாக இனிவரும் அத்துவிதானந்தம் என்கிற அத்தியாயத்திலே விளக்குகிறோம்.

எந்நேரமும் இந்த ஆத்மாநந்தத்தை அனுசந்தானம் பண்ணிக் கொண்டு பிரபஞ்சத்தைப் பாராமலிருக்கிறவன் வாஸ்தவமாக யோகியுமாவான். எளிதாகவும் மோட்சம் கிடைக்கும் என்று மந்த புத்தியிள்ளவனுக்கு அனுக்கிரகம் பண்ணியுள்ளார்.

---

# 13. அத்துவிதானந்தம்.

முன் சொல்லப்பட்ட யோகானந்தம் தானே ஆத்மானந்தம் ஆகட்டும். அந்தப் பிரம்மம் இரண்டாவதற்றது என்று சொன்னது உலகம் தனித்திருக்கும் போது எப்படி பொருந்தும் என்ற கேள்வி எழக்கூடியதால் அதற்குப் பிரம்மத்தை விட்டுத் தனித்து இருப்பு கிடையாதென்பதை இந்த அத்தியாயத்தில் விளக்குகிறார்.

1. உலகத்துடன் கூடியிருப்பவனுக்குப் பிரம்மத்துவம் எப்படி சித்திக்கும்?

ஆகாசம் முதலாகத் தன்னுடைய தேகம் வரையுள்ள உலகமெல்லாம் தனக்கு முதற்காரணமாயிருக்கிற ஆனந்தத்திலே தோன்றி ஆனந்தத்திலே இருந்து ஆனந்தத்திலே முடிவடைகிற படியினால், மண்ணிலே தோன்றி, விளங்கி முடிவடைகிற குடம் போல, ஆனந்தத்தைத் தவிர வேறு அல்ல என்று வேதம் சொன்னபடியினால் அத்துவிதம் (இரண்டற்றதே பிரம்மம்) என்கிறது கூடும்.

2. குயவனால் உண்டாக்கப்பட்ட குடம் குயவனாலேயே உடைந்தது என்கிறாற் போலச் சகத்திற்கு, பிரம்மம் நிமித்த (துணை) காரணமாகட்டும், உபாதானம் அல்ல?

மண்ணை விட்டுக் குடம் காணாதது போலப், பிரம்மத்தை விட்டு உலகம் இல்லாதபடியினாலே நிமித்த காரணம் என்று சொல்லக் கூடாது. மற்றோ உபாதான காரணமாக வேண்டும்.

3. காரணத்தில் நின்று சகத்துண்டானது ஆரம்பம், பரிணாமம், விவர்த்தம் என்ற மூன்று வகை நிச்சயத்தில் எந்த வகையாகும்?

தகப்பனை விட்டுப் புத்திரன் வேறு பட்டிருக்க கண்டாற்போலக் காரணத்தை விட்டுக் காரியம் வேறுபட்டுக் காணாத படியினாலே குறியில்லாத வஸ்துவிலே ஆரம்ப பட்சம் கூடாது. பால் கெட்டுத் தயிரானாற் போலக் காரணம் தன்னுரு கெட்டு வேறு உருவாகாதபடியினாலே பரிணாம வாதமும் ஆகாது. கயிறே பாம்பாகத் தோற்றுவது போல இங்கும், தன்னுரு கெடாமல் வேறு உரு போல தோற்றுகையினாலே, விவர்த்த வாதமே முடிவானது.

4. குறியற்ற வஸ்துவிலே விவர்த்த பட்சமுந்தானும் எப்படிக் கூடும்.?

குறியற்றிருக்கிற ஆகாசத்திலே இடம், நீல நிறங்களை கற்பிக்கிறாற் போலக், குறியற்றிருக்கும் ஆத்மாவிலே உலகு கற்பனையும் கூடும் என்பதால் விவர்த்தம்.

5. அசங்கமாயிருக்கிற பிர்மம் உலகை எவ்வாறு படைக்கும்?

மாய வித்தைச் செய்கிறவனிடத்தில் இருக்கிற மாயா சக்தி மாய வித்தைகளை கற்பிக்கிறாற் போலப் பிரம்மத்தினிடத்தில் உள்ள மாயசக்தி சகத்தைக் கற்பிக்கிறது. பிரம்மமல்ல.

6. மாயாசக்தி ஒன்று உண்டு என்று அத்தோடு அத்துவிதம் கெட்டது?

அந்த மாயாசக்தியும் பிர்ம்மத்தைத் தவிர வேறல்ல ஆகையினால் அத்துவிதத்துக்குக் குறையில்லை.

7. அப்படியானால் அந்தச் சக்தியுமில்லையே?

சகத்தென்கிற காரியம் கண்டபடியினால் காரணமான சக்தி உண்டு.

8. இந்த அர்த்தமற்ற விவாதம் எங்கேனும் உண்டோ?

அக்கினியிலிருக்கிற எரிக்கிறசக்தி அக்கினி தானாகவும் மணி மந்திரங்களால் கட்டுப்பட்டு அக்கினிக்கு அன்னியமாகவும் காணப்படவில்லையோ.

9. இப்படி பிரம்மமல்ல, பிர்மத்தைத் தவிரவுமல்ல என்கிற மாயாசக்தி உண்டென்கிறதற்குப் பிரமாணம் ஏது?

எண்ணற்ற சக்தி பிரம்மத்துக்கு உண்டு என்கிற வேதமும் வாசிட்டமும் பிரமாணம்.

10. வாசிட்டத்தில் எப்படிச் சொல்லியிருக்கிறது?

பிர்மத்தில் அநந்த சக்தியுண்டு. அந்த அநந்த சக்தியினாலே பிர்மந்தானே பிரபஞ்சமாகத் தோற்றுகிறது. சரீரங்களிலே சித்சக்தியும், ஆகாசத்திலே நிர் அவயவசக்தியும், வாயுவிலே போக்குவரவு சக்தியும், கல்லிலே கடின சக்தியும் , தண்ணிரிலே குளிர் சக்தியும், அக்கினியிலே உஷ்ண சக்தியும் இவைமுதலான அநந்த சக்தியும் பிர்ம்மத்தினிடத்திலே காரியத்தினாலே காணப்படுகிற தென்றும், சிருட்டிக்கு முன் இந்த சக்தி, முட்டையிலே சூக்குமமான பாம்பு இருக்கிறாற் போலவும், விதையிலே மரம் இருக்கிறாற் போலலும், வெளிப்படையாய்க் காணாமல் சூக்குமமாய் பிர்மத்திலே இருந்தது. தேசம் காலம் முதலியவற்றிற்கு ஏற்ப பூமியில் பயிர்கள் முளைக்கிறாற் போலப் பிரமத்திலே சக்தியும் ஒவ்வொருக்கால் சகத்தென்கிற ரூபமாய் விளங்குகிறது. ஆதியிலே மனதுண்டாயிற்று பின்பு பந்தம் மோட்சம் உண்டாயிற்று பின்பு ஆகாசாதி சகத் சிருட்டி உண்டாயிற்று என்கிற கிரமமெல்லாம், பாலனுக்குத் தாதி சொன்ன பொய்க்கதை போல, மூடர்களுக்குச் சொன்னதே அல்லாமல் உண்மையல்ல என்று சொல்லப்பட்டிருக்கிறது.

11. பாலனுக்குத் தாதி சொன்ன கதை எப்படி?

இல்லாத பட்டிணத்தில் மூன்று அரசகுமாரர்கள் இரண்டுபேர் இனிமேல் பிறக்கப் போகிறார்கள். ஒருத்தன் கர்ப்பவாசம் பண்ணுகிறான் புண்ணியவான்களான இந்த மூன்று பேர்களும் வேட்டைக்குப் போன இடத்திலே, ஆகாசத்தில் நல்ல தோட்டம் இருக்கிறதென்று ஊமைகள் சொல்லக்கேட்டு ஆகாசம் சென்று தோட்டத்தைப் பார்த்தார்கள். அங்கு முயற்கொம்பை முறித்து சிங்கநாதமாய் ஊதிக்கொண்டு இனிமேல் வரப்போகிற பட்டிணத்திலே இன்றைக்குப் பிரவேசித்தார்கள் என்று தாதி சொன்ன இக்கதையைக் கேட்டு விசாரமற்ற குழந்தைகளும் உண்மையென்றே நம்பினார்கள்.

இந்த சம்சாரக் கற்பனையும் விசாரமில்லாத மூடனுக்கு உண்மைபோலச் சொல்லியிருக்கிறதென்று இது முதலான பலகதைகளோடே மாயாசக்தியினுடைய விஸ்தாரத்தை வசிட்டர் ராமருக்குச் சொன்னார். அந்த மாயா சக்தியைத் தானே நாமும் விளக்குகிறோம்.

12. மாயாசக்திக்கு லட்சணமேது?

காரியத்திற்கும் ஆதாரத்திற்கும் வேறாய் இருக்கும்.

13. காரியம், ஆதாரம், இவைகளுக்கு வேறாய் சக்தி என்பது எப்படி? இம் முன்றையும் ஒரு உதாரணத்தில் பகுத்துக்காட்டவேண்டும்?

வாய்குவிந்து பருத்திருக்கிற குடமே காரியம் என்பது. ஐந்து குணமுடைய மண்தானே ஆதாரம் என்பது. கடசக்தி இந்த இரண்டின் லட்சணமுமில்லாததாய் இருக்கும்.

14. இந்த இரண்டின் லட்சணமுமில்லாததாய் சக்தி எப்படி இருக்கும்?

அநிர்வசனியமாயிருக்கும்.

15. இந்தக் கடசக்தி இன்னபடியென்று வகுத்துக்கூறாதபடியினாலே அதுவேயில்லையோ?

காரிய உற்பத்திக்கு முன் இந்தச் சக்தி தனக்கு ஆதாரமாய் இருக்கிற மண்ணிற்குள்ளே ஒளித்திருந்தது. துணைக்காரணங்களான குலாலன், தண்டு, சக்கரம் வந்து கூடினவுடனே விகாரமாயிருக்கிற குடவடிவையடைந்து தனக்கு ஆதாரமாயிருக்கிற மண்ணிற்கு மண் என்ற பேரையும் மாற்றிக் குடம் என்கிறதனாலே சக்தியுமில்லை என்று சொல்லக் கூடாது.

16. மண்ணிற் சக்தி காரியமாவதற்குக் குலாலன் வேண்டினாற்போலப் பிர்ம்மத்திற் சக்தி சகத்தாகிறதற்கு நிமித்தகாரணன்(துணை)யார்?

கடசக்தியுடையத்தான மண்சுயஞ்சடமானபடியினால் சைதன்னியமாயிருக்கிற குலாலன் வேண்டிற்று. மாயா சக்தியுடைத்தான பிர்மம் சுயம் சைதன்னியமானபடியினால் வேறே நிமித்த காரணம் தேவையில்லை.

17. மண்ணென்றும் சத்தியென்றும் அதன் விகாரம் கடமென்றும் உலகத்தில் ஒருவரும் சொல்லக்காணோம் எல்லாவற்றையும் ஒன்றாகக் கூட்டி குடம் என்றே சொல்லுகிறார்கள். இதிலே காரணம் யாது?

விசாரியாத அஞ்ஞானமே காரணம்.

18. விசாரமாவதேது? விசாரித்தவன் எதைக் கடம் என்பன் ?

குலாலவியாபாரத்திற்கு முன், மண் என்ற பெயரே வழங்குகிறபடியினாலே, குடசப்தத்திற்கு மண் அர்த்தமல்ல. குலால வியாபாரத்திற்குப் பின் குடமென்று வழங்கின பாண்டமும் மண்ணைத்தவிர இல்லாதபடியினாலே குடசப்தத்திற்கு அர்த்தம் மண்ணைத்தவிரவும் அல்ல என்று பார்க்கிறதே விசாரம், இப்படி விசாரித்தவன் குடமும், சத்தியைப் போல அநிர்வசனீயமானபடியினாலே, அந்தச் சத்தியின்காரியம் என்று அறிவன்.

19. அநிர்வசனியத்தைச் சத்தியென்று சொல்லவேண்டுமேயல்லாமற் குடமென்று நிர்வகிக்கிறதெப்படி?

மாயாவியினிடம் சக்தி, காண்பியாத போது மாயை என்றும், காண்பிக்கிற போது ஆகாயத்தில் கந்தர்வ நகரம் என்றும் சொல்லப்படுகிறாற் போல, மண்ணிற் சக்தி காண்பியாத போது சத்தியென்றும், காண்பித்தபோது குடம் என்றும் சொல்லப்படுகிறது.

20. இந்த யுக்திக்குப் பிரமாணம் உண்டோ?

இப்படி மாயாமயமாய் இருக்கிறதெல்லாம் வாக்கினாலே சொல்லு மாத்திரமேயல்லாமல் அர்த்தமில்லை என்றும், அவிகாரமாய் இருக்கிற மண்மாத்திரமே பொருள் என்றும் வேதம் சொல்லுகிறது.

21. ஒரு காலத்திலே சக்தியென்றும், ஒரு காலத்திலே காரியம் என்றும் காணப்படுகிற குடம் சத்தியம் என்றும் அங்கீகரிக்காவிட்டால் விவகாரம் எப்படிக் கூடும்?

இருவகைக்கும் ஆதாரமாயிருக்கிற மண்ணை விடாதிருந்தபடியினால் விவகாரம் கூடும், மண்ணை விட்டுப்பார்த்தால் வாக்கு மாத்திரமேயல்லாமல், இரண்டு காலத்திலும் ஒரு படித்தாயிருக்கிற மண் போல, பொருள் ஆகாதென்று அறியவும்.

22. விகாரமென்றும் குடமென்றும் சொல்லப்பட்ட பொருளே பொய்யானால், மண் என்று அறிந்தவுடனே ஏன் காணாதே போகவில்லை?

விகாரம் பொருளுமல்ல, உண்மையுமல்ல என்று அறிந்ததே, தோற்றாமற் போனதற்கு அர்த்தம்.

23. காரியம் பொய் என்று அறிந்தது கொண்டு பிரயோசனம் ஏது? காணாமற் போகவேண்டாமோ?

மனிதனின் நிழல் தண்ணீருக்குள்ளே தலைகீழாய் தோற்றினாலும், அவனில்லை, பொய்யென்று அறிவது போலக், காரியம் தோற்றினாலும் பொய் என்று அறிகிறதே இல்லை என்று போனது. காணாமற் போகிறதல்ல. அத்துவித வாதிகளுக்கு இப்படிப் பட்ட அறிவு தானே முக்தி.

24. இந்த உதாரணப்படிக்குச் சகத்தையும் பொய்யென்று ஊன்றிப் பார்த்துக் கொள்ளச் சொல்லி எங்கேயேனும் சொல்லி இருக்கிறதோ?

மண், பொன், இரும்பு என்ற மூன்று உதாரணமும், காரியமெல்லாம் பொய்யென்று பகுத்தறிகிறதும் சாம வேதத்திலே சொல்லி இருக்கிறது.

25. குடம், ஆபரணம் கத்தியென்று பரிணமித்ததுவே விவர்த்தத்திற்கு எப்படி உதாரணமாகும்?

பால் தயிரானாற் போல பரிபாகப்பட்டு போகாமல் மண் முதலானதின் விகாரம் அழிந்தாற் காரண ரூபமாய் இருக்கையினாலே விவர்த்தத்திற்கு உதாரணமாய் கூறலாம்.

26. இந்த விதம் சகத்தை எவ்வாறு காணவேண்டும்?

காரியமெல்லாம் காரணமாகவே காணவேண்டும்.

27. சத்தியத்தை அறிகிற இடத்திலே அசத்தியம் என்கிற அறிவு எப்படி வரும்?

மண் என்று அறிகிற இடத்திலே, விகாரம் அசத்தியம் என்று அறிகிறாற் போல, அறிவு வரும்.

28. மண் என்று எதற்காக அறியவேண்டும்? விகாரத்தை ஏன் மறுக்க வேண்டும்?

உள்ளதை உள்ளது என்று பார்க்கிறதே மோட்சம். இல்லாததை உள்ளது என்று பார்க்கிறதே பந்தம்.

29. ஆனால் சகல பிரபஞ்சத்தையும் சோதித்துப் பார்க்க வேண்டுமே?

ஒரு குடத்தை மண் என்று அறிந்தது கொண்டு உலகத்திலே உண்டான பொருளெல்லாம் மண் என்று அறிகிறாற் போல ஒரு விஷயத்தை ஊன்றி பார்த்து பிரம்மமென்று அறிந்தாற் சகல பிரபஞ்சமும் பிரமமென்று அறியப்படும்.

30. பிரம்மத்திற்கு லட்சணம் ஏது? சகத்திற்கு லட்சணம் ஏது?

சத்து சித்து ஆனந்தம் மூன்றும் பிரம லட்சணம். நாம ரூபம் இரண்டும் சகத்து லட்சணம்.

31. குட உதாரணத்தைப்போல இவ்விடத்தும் சக்தியின்னது, சக்திக்கு ஆதாரம் இன்னது, சக்தியின் காரியமான விகாரம் இன்னது என்கிறதைப் பகுத்துக் காட்டவேண்டும்?

இன்னது என்று நிரூபிக்கப்படாத மாயைதானே சக்தி. பிரம்மம்தானே சக்திக்கு ஆதாரம். நிர்விகாரமாயிருக்கிற பிர்மத்தினிடத்திலே கற்பிக்கப்பட்ட நாமரூபந்தானே சக்தியின் காரியமான விகாரம்.

32. இந்த மாயை எந்த வழியிலே விகாரத்தை அடைந்தது?

சிருட்டிக்கு முன் இன்னதென்று காணப்படாமல் அவ்வியா கிருதமாக (மறைவாக) இருந்த மாயை, முதன்முதலாக ஆகாசம் என்கிற விகாரத்தை அடைந்தது.

33. குட விகாரத்திற்கு மண்ணே சொரூபமாய் காணப்பட்டாற் போல் ஆகாச விகாரத்திற்கும் பிர்மமே சொரூபம் என்கிறதை பகுத்துக்காட்ட வேண்டும்?

சத்து சித்து ஆநந்தத்தை தவிர இடைவெளி என்கிற சொரூபத்திற்கும், ஆகாசம் என்ற நாமத்திற்கும் சொரூபம் இல்லாதபடியினாலே, நாமரூபம் சிருட்டியிலே உண்டாய் பிரளயத்திலே அழிகிறது கொண்டு, இந்த இரண்டும் மித்தைஎன்றும், மண் போல சச்சிதாநந்தம் எபபோதும் நிலைபெற்றிருக்கையினாலே பிர்மமே சத்தியம் என்றும் பகுத்தறியப்பட்டது

34. ஆகாசத்திற்கு பிந்தின விகாரங்களேது? அதிலே சச்சிதானந்தத்தை காண்கிறது எப்படி?

காற்று, அக்கினி, நீர், மண், ஒஷதிகள், அன்னம், புருஷன், மிருகம் முதலானவைகள் விகாரம். இப்படி வெகுவித மாயிருக்கப்பட்ட நாமரூ

பங்களெல்லாம் சச்சிதானந்தத்தை விட்டு காணாதபடியினாலே இத்தனையும் சச்சிதானந்தமென்கிறதிலே சந்தேகமில்லை.

**35.** சச்சிதானந்தத்தை விடாதிருக்கிறபடியினாலே நாமரூபமும் நித்யமாகட்டுமே?

உற்றுப்பார்த்தால் இல்லாத நாமரூபங்கள் சத்தியமாய் இல்லாமற் பிரமத்தினிடத்திலே தோற்றி அழிந்துபோகிறதை விவேகம் பண்ணி அனுபவிக்கலாம்.

**36.** விவேகம் பண்ணிபார்க்கிறது எப்படி?

அலை, நுரைகள் சமுத்திரத்திலே உண்டாய் சமுத்திரத்திலேயிருந்து, சமுத்திரத்திலே லயமாகிறாற் போல விவேகம் பண்ணவேண்டும்.

**37.** எப்படி பார்த்தாலும் நாமரூபமே முன்நிற்கிறது. அது போகிறதற்கு உபாயமேது?

வழியில் துரும்பு போல நாமரூபத்தை கூர்ந்து பாராமல் அலட்சியம் பண்ணி போட்டுவிட்டு, பார்க்கும் திசையெல்லாம் சச்சிதானந்தமாய் ஆதரவோடகூட அப்யாசிக்கிற போது, நாமரூபம் இன்னவிடமென்று காணாமற்போய் அத்துவித நிலை திடப்பட்டு சீவன் முத்தனாவன்.

**38.** நாமரூபம் பொய் என்கிற நிலை எதனாலே திடப்படும்?

நாமரூபத்தைக் கண்டவுடனே, மண்ணில் சத்தி அநேகம் பொய்ப் பொருள்களைச் சிருட்டித்தாற்போலவும், நித்திரா சக்தியானது பித்துப் பிடித்தாற் போல கூடாத சொப்பனங்களைச் சிருட்டித்தாற் போலவும், பிர்மத்தினிடத்திலே மாயை சிருட்டித்த பொய்யல்லவோ இத்தனையும் என்று எந்நேரமும் பார்த்து அதிசயப்படாமல் இருக்கையிற் நாமரூபம் பொய் என்று திடப்படும்.

**39.** நித்திராசக்தி எப்படிக் கூடாத சொப்பனத்தைச் சிருட்டிக்கும்?

சொப்பனத்திலே தான் ஆகாசத்திலே பறக்கவும், தன்தலையை வெட்டி தன் கையிலே தூக்கிப்போகவும், ஒரு நாழிகைக்குள்ளே அநேக வருஷம் வந்துபோகவும், இறந்து போன தன் தந்தை திரும்ப வந்திருக்கவும் காண்கிறதெல்லாம் கூடாத காரியமல்லவோ.

**40.** இதனாலே பிரம்ம விசாரம் ஏதாயிற்று?

நித்திரா சத்திக்கே இத்தனை சக்தியுண்டானால் மாயாசத்தியானது நிர்விகாரமாயிருக்கிற பிரம்மத்தினிடத்திலே சடங்களையும், சிதாபாசர்களென்று விகாரங்களை கற்பிக்கிறது அதிசயமல்ல.

**41.** இந்த விகாரமும் பிர்மமும் கலந்து தோற்றுகிற இடத்திலே ஒன்றை சத்தியமாகவும் ஒன்றை மித்தையாகவும் பார்க்கிறது எப்படி?

எங்கும் சரியாய் இருக்கிற புடவை சத்தியமென்றும் அதிலே தனித்தனியாய்க் காணப்படுகிற சித்திரம் மித்தை என்றும் அறிகிறாற் போல, எங்கும் சரியாய்த் தோற்றுகிற சச்சிதானந்தத்தை சத்யமென்றும், அதிலே தனித்தனியே தோற்றுகிற நாமரூபத்தை மித்தையென்றும் கண்டு

அலட்சியமாய் இருக்கவேண்டும்.

42. தொழிலுடன்பட்டவனே தானாகத் தோற்றுகையினாலே தன்னை அசங்கன் என்று அறிகிறது எப்படி?

கிணற்றில் தலைகிழாய்த் தோற்றினாலும், அதைத்தானல்ல என்று தள்ளிக் கரைமேலிருக்கிற தன்னைத் தான் என்று சந்தேகமற இருக்கின்றாற் போல மூன்று அவஸ்தையிலும் கர்த்தாவாய் ஓடித் திரிகிற தன்னைத் தான் அல்ல என்று தள்ளி, சாட்சியாயிருக்கிற சித்தைத் தான் என்று சந்தேகமறக் கண்டு கொண்டிருக்க வேண்டும்.

43. மனதிலே அவசியமாய் நிறைந்திருக்கிற பிரபஞ்ச காரியத்தை அலட்சியம் பண்ணுகிறது எப்படி?

நிமிடத்திற்கு ஒருக்கால் வெவ்வேறாய் வருகிற மனோராச்சியத்தைச் சகலரும் அம்மட்டிலே அலட்சியம் பண்ணுகிறாற் போல, வாலிப பருவத்திலே குழந்தைப் பருவம் வேண்டுமென்றாலும் வாராமல், சிறுவயதில் முதுமைப் பருவம் வேண்டுமென்றாலும் வாராமல், நேற்று இறந்தவனை இன்றைக்கு வேண்டுமென்றாலும் வாராமல், மனோராச்சியம் போல, அங்ஙனே கண்டது அங்ஙனே அழிந்து போகிறபடியினாலே, நாமரூபம் தோன்றினாலும் பொய் என்று அலட்சியம் பண்ணவேண்டும்.

44. இப்படி சர்வமும் ஆத்மனாய் பிரபஞ்சத்தை அலட்சியம் பண்ணச் சொன்னால் சரீர நிர்வாகம் எப்படி நடக்கும்?

கூத்தாடுபவன் போல, வாசனை தானே(பிராரத்த கர்மம்) சரீரத்தை நிர்வகிக்கும்.

45. ஒருக்கால் பாலன் என்றும், ஒருக்கால் கிழவன் என்றும் நானா விதமாக வழங்குகிறதே தானாகக் காணப்படுகையினாலே, தான் ஏகரீதியாய் இருக்கிற சைதன்னியம் என்கிறது மனதிலே எப்படி திடப்படும்?

ஆற்றில் தண்ணீர் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக வந்து கொண்டிருந்தாலும் நடுவில் இருக்கிற பெரியகல் அசையாதது போல நாமரூபங்கள் எவ்வளவுக்கெவ்வளவு காரியப்பட்டாலும், ஏகரீதியாயிருக்கிற சித்மாத்திரமே நாம் என்று அறிந்தால் மனதிலே திடப்படும்.

46. இந்த பாவனை முதிர்ந்தால் நிலை எப்படியிருக்கும்?

கண்ணாடியிலே தோற்றின பொய்யான பட்டிணம் போலச் சச்சிதானந்தமான நம்மிடத்திலே பொய்யான சகத் தோன்றும்.

47. நாம ரூபமல்லவோ முதலாவதாகத் தோற்றுகிறது அதை எப்படி தள்ளுவது?

கண்ணாடியை முதலில் காணாமற் பிரதிவிம்பம் தோற்றாதது போலச் சச்சிதானந்தம் தோற்றாமல் நாமரூப பிரதிவிம்வம் தோற்றாது. ஆகையினாலே முதலில் தோற்றுகிற சச்சிதானந்தத்தைப் பார்த்து, அதன் பிறகு நாமரூபத்திலே புத்தியைச் செலுத்தாமல் நிறுத்தினால் நாமரூபப் பிரபஞ்சம் துடைபடும். இரண்டற்ற அத்துவிதப் பிர்மநிலை தானாகவே மிஞ்சும். இந்த நிலையிலே தானே எல்லோரும் நின்று இளைப்பாறக் கடவர்கள்.

# 14. வித்யானந்தம்

முன் யோகத்தினாலும், ஆத்மானந்த விவேகத்தினாலும், துவைதம் மித்யை என்கிற சிந்தனையினாலும், பிர்மானந்தம் கண்டவனுடைய வித்யானந்தத்தை விவரிக்கின்றார்.

1. வித்தியானந்தம் எது? அது எத்தனை விதமாயிருக்கும்?

விஷயானந்தம் போல வித்தியானந்தமும் புத்தி விருத்திருபமாயிருக்கும். அது துக்கமில்லாமை, வேண்டியதை அடைதல், நான் கிருதகிருத்யன்(செய்ய வேண்டியதெல்லாம் செய்தாகிவிட்டது. இனி செய்ய வேண்டியது ஒன்றுமில்லை), அடையவேண்டியதெல்லாம் அடைந்த சந்தோஷம் என நான்கு விதமாயிருக்கும்.

2. துக்கம் எத்தனைவிதம் ? அது ஞானத்தினால் எப்படி போயிற்று?

இந்த உலகம், இந்த சரீரத்தில் ஏற்படும் துக்கம் என்றும், வேறு உலகத்தில் வேறு பிறவியில் ஏற்படும் துக்கம் என இருவகை. ஆத்மாவே நாம் என்று அறிந்தாற் அனுபவிக்கிறவன் இல்லாமற் போகிறபடியினாலும், நாமரூபம் பொய் என்றறிந்தால் போக்கியம் இல்லாதபடியால் போக போக்கியங்களைக் குறித்து இகலோக துக்கம் போயிற்று. தாமரை இலையிற் தண்ணீர் ஒட்டாதது போல ஞாநியை ஆகாமியகர்மம் பற்றாதபடியினாலும், அக்னியிலிட்ட பஞ்சு போல ஞானிக்குச் சஞ்சித கர்மமும் வெந்து போனபடியினாலும், புண்ணியபாவ சிந்தனையாய் வருகிற பரலோக துக்கம் போயிற்று என்று துக்கநீக்கம் சொல்லப்பட்டது.

3. வேண்டியதை அடைதல் எத்தனை விதம் ? அது ஞானத்தினால் எப்படி அடையப்படும்?

காமியம் பதினோரு வகை 1) அழகு இளமையுடையவனாய், நோயற்றவனாய், பூமண்டலமுழுதும் ஆண்டு அனுபவிக்கிறது மாநுடனாந்தம்.

2) இந்த கற்பத்திலே புண்ணிய பலத்தினாலே கந்தர்வன் ஆனவன் மாநுடனாந்த கந்தர்வன் இவன் ஆனந்தம் மநுட்னாந்தத்தைக் காட்டிலும் நூறுமடங்கு அதிகம்.

3) முன் கற்பத்து புண்ணியத்தினாலே கந்தர்வ பதத்தை அடைந்தவன் தேவகாந்தர்வன். இவன் ஆனந்தம் மானுடகந்தர்வன் ஆனந்தத்திலும் நூறுமடங்கு அதிகம்.

4.) இதிலும் நூறுமடங்கு அதிகம் பிதிர்லோகத்தில் ஒருவன் ஆனந்தம்.

5) கற்பத்தின் ஆதியிலே தேவனாய் பிறந்தவன் ஆசானதேவன். இவன் ஆனந்தம் பிதிர்லோகத்தில் ஒருவன் ஆனந்தத்திலும் நூறுமடங்கு அதிகம்.

6) இந்தக் கற்பத்திலே அசுவமேதயாகம் முதலானவைகள் பண்ணி உன்னத பதத்தையடைந்தவன் கர்மதேவன் இவன் ஆனந்தம் ஆசான

தேவன் ஆனந்தத்திலும் நூறுமடங்கு அதிகம்.

7) யமன், அக்கினி முதலான தேவர்கள் ஆனந்தம் கர்மதேவ ஆனந்தத்தை விட நூறுமடங்கு அதிகம்.

8) தேவ ஆனந்தத்தை விட நூறுமடங்கு அதிகம் சர்வ தேவர்களுக்கும் தலைவன் இந்திரன் ஆனந்தம்.

9) சர்வ தேவர்களுக்கும், இந்திரனுக்கும் குரு பிரகஸ்பதி ஆனந்தம் இதனிலும் நூறுமடங்கு அதிகம்.

10) இந்திரன் பிரகஸ்பதி ஆனந்தத்திலும் நூறுமடங்கு அதிகம் விராட் ஆனந்தம்.

11) விராட்புருடன் ஆனந்தத்திலும் நூறுமடங்கு அதிகம் பிர்மாவின் ஆனந்தம் ஆக இந்தப்படி வாக்குக்கும் மனத்திற்கும் எட்டப்படாத ஆத்மானந்தத்தை அடைந்த ஞானி, விருப்பு வெறுப்புகளோட கூடியி ருக்கிற இந்தப் பதினோரு வகை ஆனந்தத்தையும் நாய்கக்கின சோறு போல குற்றம் கண்டு வெறுத்த படியினாலும், இத்தனையும் இந்திர ஜாலமாய்க் காண்கையினாலும், இத்தனை பேராயிருந்து புசிக்கிறது நாம் ஒருவன் தானே என்கிற அப்யாசத்தத்தினாலும் அவர்க ளைப் போல கிரமமன்றியிலே ஞானிக்குச் சகல போகமும் ஒருமிக்க வந்தது.

4. கிருத்தியம்(செய்யவேண்டியது) எத்தனை விதம் ? அது ஞானம் வந்தது கொண்டு எப்படிச் செய்து முடிந்ததாயிற்று?

இக லோகத்தைக் குறித்தும், பரலோகத்தைக் குறித்தும், மோட் சத்தைக் குறித்தும் கிருத்தியம் மூன்றுவகை. இதெல்லாம் ஞானிக்குத் தீர்ந்தமுறியாகப் பண்ணி முடிந்தது.

5. அடையப் போகிற மோட்சம் எது? அது ஞானத்தினால் எப்படி அடையப்பட்டது?

அடையப்போகிற புருஷார்த்தம் பிர்மமென்றும், அது அபரோட்ச ஞானத்தினால் அடைந்து வகுப்பற்றதென்றும் இப்படி இந்த நான்கு வகை வித்யானந்தமும் திருப்தி தீபத்திலே வெட்டவெளியாகச் சொல்லப்பட் டிருக்கிறது. கிருதகிருத்யத்தன்மையினால் திருப்தி அடைந்த இவன் அடையவேண்டியது அடைந்தாகிவிட்டது இனி அடையவேண்டியது ஒன்று மில்லை என்கிற தன்மனதால் இடைவிடமால் இவ்விதம் எண்ணுகிறான். நான் புண்ணியன், நான் புண்ணியன், என்னுடைய ஆத்மாவை எப் பொழுதும் நேராக அறிகிறேன். பிர்ம்மானந்தம் எனக்குத் தெளிவாக பிரகாசிக்கிறது. சம்சார பந்தமான துக்கத்தை நான் இப்பொழுது காணவில்லை. என்னுடைய அக்ஞானம் எங்கேயோ ஓடிவிட்டது. என் திருப்திக்கு உலகத்தில் எது சமானமாகும். புண்ணியம் உறுதியாய் பழுத்துவிட்டது. என்ன ஆச்சர்யம் சாஸ்திரம். என்ன ஆச்சர்யம் குரு. என்ன ஆச்சர்யம் ஞானம். என்ன ஆச்சர்யம் ஆனந்தம். இவ்வானந்தம் ஏற்படும் வரையில் அப்யாசம் செய்யவேண்டும்.

# 15. விடயானந்தம்

விஷயங்கள் மூலமாக அடையப்படும் ஆனந்தமும் பிர்மானந்தத்தின் நிலைகளை உதாரணத்தினால் அதை விளக்குகிறார்.

1. விஷயானந்தமாவது ஏது? அது எந்த விதத்திலே காணலாம்?

மனதினுடைய விருத்தியிலே பிரதிவிம்பித்த ஆனந்தம் விஷயானந்தம் அதை விவேகத்தினாலே காணலாம்.

2. எல்லா விருத்தியிலும் ஆனந்தம் ஏன் பிரதிவிம்பிக்கவில்லை?

நீரிலே பிரதிவிம்பித்த சந்திரன் கலங்கிய நீரில் தெளிவாக இராது. கலங்காத நீரிலே தெளிவாய் தோற்றுகிறார் போலவும் சில விருத்திகளில் ஆனந்தம் தோற்றும் சிலவற்றில் ஆனந்தம் தோற்றாது.

3. அந்தக்கரண விருத்திகள் எத்தனை விதம் அவற்றிற்கு லட்சணம் எது?

சாந்தம், கோரம், மூடம் என்று மூன்றுவித விருத்திகள், வைராக்கியம், பொருமை, உதாரம் முதலியவை சாந்த விருத்திகள். ஆசை, கோபம் முதலானவை கோரவிருத்திகள். மயக்கம், கலக்கம், பயம் முதலானவை மூடவிருத்திகள்.

4. பிர்மம் இந்த விருத்தியில் எவ்வாறு பிரதிவிம்பிக்கும்?

கோரம் மூடவிருத்திகள் இரண்டும் கலங்கின விருத்தியான படியினாலே அறிவு மாத்திரம் பிரதிவிம்பிக்குமே அல்லாமல் ஆனந்தம் பிரதிவிம்பிக்க மாட்டாது. சாந்தவிருத்தி கலக்கமற்றதினாலே அதிலே சித்தோடு கூட ஆனந்தமும் தோன்றும்.

5. இதற்கு பிரமாணம் ஏது?

கோரமூட விருத்திகளில் ஆனந்த அனுபவம் காணப்படவில்லை சாந்தவிருத்தியில் ஆனந்த அனுபவம் காணப்படுவதே பிரமாணம்.

6. கோரமூட விருத்தியிலே ஆனந்த அனுபவமில்லை என்கிறது எப்படி?

வீடு நிலம் முதலான விஷயங்களில் ஆசை உண்டாகும் போது இது நமக்கு கிடைக்குமோ, கிடைக்காதோ என்கிற துக்கம் கூட வருகையினாலும், கிடைக்காதே போனால் துக்கம் அதிகமானபடியினாலும், கெடுத்தவன் பேரில் கோபம் உண்டாவதினாலும், அவனை தண்டிக்காவிட்டால் அழுகையாய் முடிவதனாலும், கோரமூட விருத்திகளிலே துக்கமே அல்லாமல், சுகம் சிறிதளவும் இல்லை.

7. சாந்த விருத்தியிலே சுகஅனுபவம் எப்படி?

ஆசைப்பட்ட பொருள் கிடைத்தவுடன் உள்நோக்கிய சாந்தமான மனோவிருத்தியிலே ஆத்மாவின் ஆனந்தம் பிரதிவிம்பித்து போகத்திலும் விருத்தி சாந்தமானபடியினாலே சுக அனுபவம் தோற்றுகிறது. ஆகையினாலே சாந்த விருத்தியுள்ள இடமெல்லாம் ஆனந்தம் தோற்றுகிறதிலே சந்தேகம் தேவையில்லை.

8. பிர்மத்திற்குச் சுவாபம் எத்தனைவிதம்? எந்த உபாதியில் எந்த சுபாவம் காணப்படும்?

இருப்பு, அறிவு, ஆனந்தம் என்று பிர்மத்திற்கு மூன்று சுபாவங்கள். மண், கல் முதலான சடங்களிலே சத்து மாத்திரம் தோன்றும். சத்தும், சித்தும், கோரம், மூட விருத்திகளில் தோன்றும். சாந்த விருத்தியிலே சச்சிதானந்தம் மூன்றும் தோற்றும்.

9. மாயைக்கு எத்தனை சுபாவம் உண்டு? எந்த சுபாவம் எதிலே தோற்றும்?

இல்லாமை, சடம், துக்கம் என்று மாயாசொரூபம் மூன்றுவிதமாயிருக்கும். முயற்கொம்பு முதலியதில் இல்லாமை. கட்டை, பாறை முதலியதில் சடத்தன்மை. கோரம், மூடம் என்ற புத்திவிருத்தியிலே துக்கம். சாந்த விருத்தியிலே சடமும், அறிவும் இருக்கிற படியினாலே மாயை பிர்மத்தோடே கலந்து காண்பிக்கும்.

10. இத்தகைய மாயா சொரூபங்களை பிர்மமாக காண்கிறதெப்படி?

இல்லாமையை முயற்கொம்பு போல அலட்சிக்க, சடங்களை நாமரூபத்தை விட்டு சத்துமாத்திரமாய் பார்க்க, கோர மூட விருத்தியிலே துக்கத்தை தள்ளி சித்து மாத்திரமாய் பார்க்கவும். சாந்தவிருத்திகளை சச்சி தானந்தமாய் காண்க. இப்படி விஷயானந்தத்தின் வழியிலே மூடனும் பிர்மானந்தம் அடையலாம்.

11. மாயாரூபத்தை இப்படி பகுத்து தியானித்தது கொண்டு பிர்மானந்தம் எப்படி கிடைக்கும்?

இந்த வழியே மனம் ஒருநிலைப் பட்டவுடனே பிர்மவித்தை கிடைப்படும். இந்த பிர்மவித்தையிலே பேதமாயிருக்கிற உபாதிகளெல்லாம் துடைப்பட்டுப் போனபடியினாலே சச்சிதானந்தம் அகண்ட ஆகாசமாகத் தோற்றும்.

12. பேதத்திற்கு உபாதிகள் ஏது? அவைகள் எதனால் துடைப்பட்டது? பிரம்மம் நிர்உபாதியாய் தோற்றுகிறது எதனால்?

சாந்த விருத்திகள், கோரவிருத்திகள், பாறை முதலியவைகளை பிரித்து காட்டும் உபாதிகளாக கருதப் படுகின்றன. யோகத்தினாலும், விவேகத்தினாலும் இந்த உபாதிகளெல்லாம் தள்ளப்படும். திரிபுடியில்லாத படியினாலே (அறிகிறவன், அறிவு, அறியப்படுவது) நிர்உபாதியாய், சுயம் பிரகாசமாய் இருக்கிற பிர்மத்துவம் அகண்டானந்த வடிவாய்த் தானாகவே விளங்கும்.

இப்படி பிர்மானந்தத்திற்கு வழியாகத்தானே விஷயானந்தம் நிரூபிக்கப் பட்டுள்ளது. இந்த வழியே எல்லாரும் மோட்சம் அடையக் கடவர்கள்.

*பஞ்சதச பிரகரணம் முற்றிற்று.*

**ஓம் தத் சத் !!!**

